சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

# சிவ ஞானபூஜா மலர்

அக்ஷய, பிரபவ—விபவ (1986, 1987—88)



ஓம் ஸ்ரீகாலஸம்ஹார மூர்த்தயே நம:

பிரசுரம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா,
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ



சிவபக்திப்பிரசாரமணி

சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம்

சிவபுராணச்சக்கரவர்த்தி, சிவபுராணக்காவலர்

**ஆங்கீரஸ சர்மா என வழங்கும்**

ஆங்கீரஸ **S. வேங்கடேச சர்மா**

(சங்கரனடிமை)

---

பதிப்பாசிரியர், நூலாசிரியர், உரையாசிரியர்

சைவ பௌராணிகர்,

சைவ இலக்கியச் சொற்பொழிவாளர்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிவ ஞானபூஜா மலர்

அக்ஷய, பிரபவ - விபவ

**1986, 1987—1988**

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே,


பதிப்பாசிரியர் :

சிவபக்தி பிரசாரமணி

சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப்ரசார பூஷணம்,
சிவபுராணச் சக்கரவர்த்தி, சிவபுராணக் காவலர்,

ஆங்கீரஸ சர்மா

(சங்கரனடிமை)





பிரசுரம் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை - 600 033.

உரிமைபதிவு] 10-6-1988 [விலை ரூ. 12-00

உ

## விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர்

## சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி



திருஞான சம்பந்தர்



திருநாவுக் கரசர்



சுந்தர மூர்த்திகள்



மாணிக்க வாசகர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

# பொருளடக்கம்

உ

சிவமயம்

## விருதுநகர் சிவநேசச் செல்வர்
## திரு. T. M. M. தட்சிணாமூர்த்தி அவர்கள் எழுதிய கடிதம்

T. M. M. தட்சிணாமூர்த்தி

விருதுநகர்
29-4-1988.

அன்புள்ள பெரும் மதிபிற்குரிய திரு. சர்மா அவர்களுக்கு அன்புடன் எழுதிக்கொண்டது. இப்பவும் தாங்கள் அனுப்பி வைத்த மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை 1 to12 கிடைத்தது. 13 to 21 அனுப்பிவைக்க வேண்டுகிறேன்.

நான் தனி சிவபக்தன். சிவன் மற்றும் முருகன் எனது தந்தையும் தமையனுமாக வணங்கி வருகிறேன். எனக்கு நீங்கள் சிவனைப்பற்றி அவர் பரத்துவம் பற்றி இன்னும் பல பல நூல்கள் வெளியிட ஆசை. சிவன் ஒருவனே இறைவன், மீதி உள்ள தெய்வங்கள் அதிகார மூர்த்தங்கள் என்ற உண்மை உலகுக்குத் தெரிய ஆசைப்படுகிறேன். அதற்குத் தங்கள் மாதிரி சிவநேயச் செல்வர்கள் உதவவேண்டும். சிவ நூல்கள் பல வெளியிட இத்துடன் ரூ. 1000/-க்கு Cheque அனுப்பி உள்ளேன். தயவு செய்து சிவன் பெருமையைப் பலநூல்கள் மூலம் உலகுக்கு வெளிப்படுத்துங்க்ள்.

தங்கள் அன்புள்ள
[ஒ-ம்] T. M. M. தட்சிணாமூர்த்தி

பதிப்பாசிரியர் குறிப்பு: இந்த அன்பரின் சிவபக்தி அடியேனைப் பரவசப்படுத்தியது. ''தேடிய மாடு நீடு செல்வமும் தில்லைமன்றுள் ஆடிய பெருமான் அன்பர்க்கு ஆவனவாகும்'' என்று வாழ்ந்த நாயன்மார்களை நினைவுபடுத்தியது. இத்தகைய அன்பர்கள் பலரது உதவி கிடைக்குமேல் அடியவன் ஆரம்பித்த சிவப்பணிகள் யாவையும் அடியவனது ஆயுட்காலத்துக்குள் நிச்சயமாக முடித்துவிட முடியும். வாழ்க தட்சிணாமூர்த்தி ! வளர்க அவர்தம் சிவபக்தி!!

சிவம்.

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# ஏமையாளும் ஈசன் செயல்

## பதிப்புரை

1. குரோதன [1985] ஆண்டு சிவஞான பூஜாமலருக்குப் பிறகு இந்தமலர் அக்ஷய, பிரபவ—விபவ [1986, 1987-88] ஆகிய ஆண்டுகளுக்குச் சேர்த்து ஒரே மலராக வெளியிடப் படுகிறது.

2. வழக்கம் போலத் தோத்திரங்கள், வடமொழி தென் மொழி நூல்களில் உள்ள சிவபரத்துவச் செய்திகளைத் தொகுத் துக் கட்டுரைகள், மற்றும் சாத்திரக் கட்டுரைகள் ஆகியவை இம்மலரில் இடம் பெற்றுள்ளன.

3. இந்த மலர் அச்சுப்பணி 1987 அக்டோபர் மாதமே ஆரம்பிக்கப்பட்டும், அச்சகத்தில் ஏற்பட்ட தாமதங்கள், ஆசிரியருக்கு இடையிடையே ஏற்பட்ட சிறு சிறு உடல் நலக் குறைவுகள், கட்டுரைகள் உரிய காலத்தில் வந்து சேராமை, 1988 ஜனவரி 22ம் நாள் ஆசிரியரின் தாயார் சிவபதம் எய்தி யது இவை போன்ற காரணங்களால் பணிகள் தடைகளுக்கும் தாமதங்களுக்கும் உட்பட்டு ஒருவாறு நிறைவேறி இறைவர் திருவருளால் இதோ உங்கள் கரங்களில் மலர் திகழ்கின்றது.

4. இந்த மலரில் இடம் பெறுவதாக இருந்த ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரரின் அருளிச் செயல்களான ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹம், பாரத தாத்பர்ய ஸங்க்ரஹம் ஆகிய இரு நூல்களையும் இந்த மலரில் சேர்ப்பதானல் மலர் வெளி

யீடு மேலும் இரண்டு மாத காலங்களாவது தாமதப்படும் என்ற காரணத்தால் மலரை இத்துடன் நிறைவு செய்து, இவ்விரண்டு நூல்களையும் சேர்த்து தனிப்புத்தகமாக வெளியிடு வது என்று திருவருள் உணர்த்தியவாறு முடிவு செய்துள் ளோம். இவ்விரு நூல்களின் பெருமை கருதி இவ்வாறு தனி நூலாக வெளியீடு ஆவதும் ஈசனருளே என்று எண்ணுகின் ரேம். நூல் விரைவில் வெளியிடப்பட்டு நன்கொடையாளர்க்கு இலவசமாக அனுப்பப்படும் என்று தெரிவித்துக் கொள்கிரேம்.

5. மலர் தயாரிப்பு செலவு ஆண்டுதோறும் உயர்ந்து கொண்டே போவதால் விலையையும் உயர்த்த நேரிடுகிறது. இந்த மலருக்கு விலை ரூ. 25/=க்குக் குறையாது வைக்க வேண்டி இருப்பினும் விளம்பரங்கள் நன்கொடைகள் முதலி யவைகளால் பொருள் உதவி கிடைத்ததால் ரூ. 12/= மட்டுமே விலை வைத்துள்ளோம்.

6. தங்களைத் தேடிவரும் இந்த சிவஞான பூஜாமலருக்கு நன்கொடையோ புத்தக விலையோ ஏதும் இதுவரை அனுப்பா திருந்தால், இந்த மலர் கிடைத்தவுடன் புத்தக விலையை அனுப்பி உதவ வேண்டுகின்ரேம். தாங்கள் விரும்பினல் புத்தக விலைக்கு மேல் ஏதேனும் நன்கொடை சேர்த்து அனுப் பலாம். ரூ. 25/=ம் அதற்கு மேலும் அனுப்புபவர்கள் பெயர் கள் அடுத்த மலரில் பிரசுரிக்கப்படும்.

அனைத்துமே எமையாளும் ஈசன் செயல் என எண்ணி அமைதியுறுகின்ரேம்.

சிவம்.

---

நன்கொடைகள் (21-ஆம் பக்கத் தொடர்ச்சி...)

43. சிவஸ்ரீ V. D. காசிராம சிவாசாரியார்,
ஸ்ரீகாமாக்ஷி அம்மன் கோயில் ஸ்தானிகம்,
மாங்காடு. — ரூ. 101-00

---

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்



ஓம் ஸ்ரீ காலஸம்ஹார மூர்த்தயே நம:

# அட்டைப்பட விளக்கம் ஸமர்ப்பணம்

சிவபக்திப் பிரசாரமணி

''காலத்தாற் காலனையுங் காய்ந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி''

— திருநாவுக்கரசர்.

முழுமுதற் பரம்பொருளான பரமேச்வரனுடைய அறுபத்து நான்கு மூர்த்தங்களில் காலாந்தகமூர்த்தியும் ஒன்றாகும். ஸ்காந்த மஹாபுராணம், சிவரஹஸ்ய கண்டம், சங்கர ஸம்ஹிதையில் உபதேசகாண்டம் 90வது அத்தியாயத்தில்,

சிவபெருமானுடைய இருபத்திஐந்து மூர்த்திகள் விசேஷ மாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றிலும் காலஸம்ஹார மூர்த்தி ஒரு மூர்த்தியாகக் கூறப்பட்டுள்ளது. காலஸம்ஹார மூர்த்தி யைப் பற்றி பின்வருமாறு சூதபுராணிகர் நைமிசாரண்ய வாசிகளான சௌனகாதி மஹரிஷிகளுக்குக் கூறியதாக உபதேசகாண்டம் கூறுகிறது.

காலம் ஸம்ஹ்ருத்ய தேவேச காலகாலஸ்த்ரியம்பக: ।
பக்வானுஞ்ச பயம் காலாத் ஸஹஜஹ்ரே தயயா யத: ।
காலஸம்ஹாரிணீ மூர்த்தி: கதிதா ஸா முனீச்வரை: ॥

காலனுக்குக் காலனை முக்கண்ணன் "காலஸம்ஹார மூர்த்தி" என்னும் தமது மூர்த்தத்தினுல் ஞானிகளுக்குக் காலனிடத்திலிருக்கும் பயத்தை தயவால் போக்கிவிடுகின்ருர் என்றும் மஹரிஷிகள் அப்படிப்பட்ட மூர்த்தியை காலஸம்ஹார மூர்த்தி என்று சொல்கிருர்கள் என்றும் மேலேயுள்ள ச்லோகங் களில் கூறப்படுகிறது. மிருகண்டு முனிவரது புத்திரரான மார்க்கண்டேயருக்காகச் சிவபெருமான் இயமனை உதைத் தருளிய திருமூர்த்தமே காலஸம்ஹார மூர்த்தம் எனப்படும். இத்திருக்கோலத்தில் இறைவர் காலாந்தகன், காலகாலன் ம்ருத்யுஞ்ஜயன் என்றெல்லாம் வழங்கப்படுகின்ருர்.

இனி, இறைவர் காலனை உதைத்தருளிய வரலாற்றினைச் சிறிது பார்ப்போம். மிருகண்டு என்னும் முனிவர் மருத்து வதி என்ற தனது மனைவியுடன் நெடுங்காலம் புத்திரப் பேறின்மையால் மிகவும் வருந்தி காசியம்பதியை அடைந்து அங்கு சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து வந்தார். வேண்டுவார் வேண்டுவதே ஈயும் பெருமானும் பிரத்தியட்ச மாகி," மிருகண்டு முனிவனே! உனது கருத்தினை முடித்து வைப்போம். தீக்குணங்களும், உடல் ஊனங்களும், அறிவின் மையும், தீராப்பிணியும் கொண்டு ஆனல் நூறுவயது உயிர் வாழும் புதல்வன் வேண்டுமா? அல்லது நற்குணங்களும், உடலழகும், நல்வடிவும், நோயின்மையும், பூரண அறிவும், எம்பால் நீங்காத அன்பும் உடைய ஆனல் பதினறு ஆண்டு

கள் வாழும் மைந்தன் வேண்டுமா? சொல்'' என்றருளிச் செய்ய, முனிவரும் ''சற்புத்திரனையே அருள்க'' என்று விடை கூறப் பெருமானும் அங்ஙனமே வரமளித்து மறைந்தனர்.

பின்னர் சிலநாளில் மருத்துவதி கருப்பமுற்று, உரிய காலத்தில் ஓர் ஆண்குழந்தையைப் பெற்றெடுத்தாள். பங்குனி மாதம், ரேவதி நட்சத்திரம், மிதுன லக்னத்தில் அவதரித்த இப்புதல்வனுக்குப் பிரமதேவன் தானேவந்து மார்க்கண்டேயன் என்ற திருநாமத்தைச் சூட்டியருளினன். மார்கண்டேயரும் மறுப்படாத திங்கள் போல வளர்ந்து வரப் பெற்றோர்கள் வைதிகமான ஸம்ஸ்காரங்களை முறைப்படி ஆண்டுதோறும் செய்து ஐந்தாவது வயதில் உபநயனமும் செய்து வித்தியாப்பியாசமும் செய்வித்தனர். இங்ஙனம் வித்தியாப்பியாசம் செய்து வருகையில் ஸகலமான வேத ஆகமங்களையும் கற்றுத் தேர்ச்சிபெற்று, சிவபெருமானே பரம்பொருள் என்று தெளிந்து அப்பெருமானது திருவடிகளையே தமக்குப் புகலிடமாகக் கொண்டு ஒழுகி வரலாயினர். சிவபெருமானை வணங்கி, சிவனடியாரைப் பக்தி செய்து, குற்றமற்ற முனிவர்களைத் துதித்து, தனது குருவை வணக்கஞ் செய்து, தனது பெற்றோர்களை அவர்களது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, இவ்வாறு நாள்தோறும் ஒழுகிவரலானர்.

மார்க்கண்டேயர் இவ்வாறிருக்கையில் அவருக்கு வயது பதினறு ஆரம்பித்தது. இவரை இழக்கவேண்டுமே என்ற துயரத்தில் தாய் தந்தையர் மூழ்கலாயினர். அதனை மார்க்கண்டேயர் கண்ணுற்று, பெற்றோர்களது திருவடிகளில் இறைஞ்சி, ''நீவிர் இங்ஙனம் துன்புறுதல் எக்காரணம் பற்றியோ'' என வினவ, அவர்களும் சிவபிரான் அளித்த வரத்தின்படி பதினறுவது வயதில் மார்க்கண்டேயரை இழக்க நேர்தலே தங்களது துயரம் என மறுமொழி கூறினர்.

பெற்றோர்களது துயரம் இன்னதென அறிந்த மார்க்கண்டேயரும் தந்தையாரை நோக்கி, ''எந்தையே, தாங்கள் இதன் பொருட்டு மேலும் துன்பமடைதல் வேண்டாம். எல்லா

உயிர்க்கும் உயிராகி என்றும் நின்றிடும் அமலமூர்த்தியாம் சிவபெருமானை அருச்சனை செய்து அப்பெருமானது திருவருளால் இயமனை வென்று விரைவில் உங்களிடம் வந்து சேருவேன்'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டு காசியம் பதியில் மணிகர்ணிகை என்ற பெயர் பெற்ற சிவாலயத்தில் சென்று, அங்கு என்பு நெக்குருக, கண்ணீர் இழிதர, ஆலயத்தை வலஞ்செய்து, பின் ஈசனுர் திருமுன்படைந்து, வணக்கஞ்செய்து, தனது திருமுடிமேல் ஈசனுரது திருவடிகளைச் சூடிப் பின் அதன் தெற்குப் புறத்தில் ஓரிடத்தில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து, பலநாட்கள் அன்புடன் அருச்சித்து ஏத்திப் பெருந்தவம் செய்து வரலானுர்.

மார்க்கண்டேயரது இத்தகைய தவத்திஞல் மகிழ்ச்சி யடைந்த சிவபெருமானும் அவர் முன் தோன்றி ''நீ வேண்டியது யாது'' என்று வினவியருளினுர். மார்க்கண்டேயரும், இறைவரைத் துதித்து'' எம்பெருமானே! அடியனேன் இயமனது கையிற் சென்று சேராவண்ணம் பேரருள்புரிய வேண்டும்'' என்ற வரத்தை வேண்டினுர். இறைவனுரும் ''இயமனுக்கு நீ அஞ்சேல்'' என்று அபயமளித்தருளி மறைந்தருளினுர். மார்க்கண்டேயரும் மனமகிழ்ச்சியுடன் தொடர்ந்து நாள்தோறும் சிவார்ச்சனை செய்து வரலாயினுர்.

இங்ஙனம் மார்க்கண்டேயர் பெருவிருப்புடன் சிவபூசை செய்து வருகையில், பதினுருவது ஆண்டு நிறைவுற்றவுடனே அவரது உயிரைக் கவர்ந்து செல்ல இயமதூதன் ஒருவன் அங்கு வந்து, அவரது சிவபூசனையைக் கண்டு அவரை அண்டவும் இயலாது திரும்பிவிட, அஃதறிந்து கோபங்கொண்ட இயமன் தனது அமைச்சனுகிய காலனை அவர் மேல் ஏவ, காலனும் அவரது சிவபூசைக்கு அஞ்சி, வணக்கத்துடன் அழைத்தும் அவர் அவனுடன் செல்ல மறுத்துவிட்டார். பின்னர் இயமன் பெருஞ்சினத்துடன் தானே நேரில் வந்து மார்க்கண்டேயரை அழைக்க, அவர் வாராமையால் அவரது கழுத்தில் பாசத்தை வீசியெறிந்து அவரதுயிரைக் கவர

முயற்சிக்கையில் அவர் மிகவும் அச்சத்துடன் சிவலிங்கப் பெருமானைத் தழுவி நின்றனர்.

அப்பொழுது அடியார்க்கு எளியவராகிய இறைவர் ''அஞ்சேல்'' என்றருளிச்செய்து அச்சிவலிங்கத்தினின்றும் தோன்றி இயமனைத் தமது இடது காலால் உதைத்தனர். இமைப்பொழுதில் இயமன் உயிர் நீங்கினன். இறைவரும் மார்க்கண்டேயரை என்றும் பதினாறு வயதுடைய சிரஞ்சீவி யாகச் செய்தருளி மறைந்தருளினர். இங்ஙனம் காலனை அடக்கிய நிகழ்ச்சி காசியம்பதியில் நிகழ்ந்ததாகப் புராணங் கள் கூறும். இருப்பினும் இவ்வீரச் செயல் நம் தமிழ் நாட்டில் உள்ள திருக்கடவூரில் நிகழ்ந்ததாகவும் கூறப்படுகிறது. இது பற்றிய குறிப்புகளை நம் மூவர் முதலிகளின் திருப்பதிகங்களில் காணலாம்.

திருமால் முதலிய தேவர்கள் தூய்மையான இடத்தில் உண்ணும் பொருட்டு அமுதம் நிரம்பிய கடம் (பானை) இங்கு கொண்டுவந்து வைத்தபோது அமுதகடம் சிவலிங்கத் திரு உருவமாக மாறிய காரணத்தால் இவ்வூர் கடவூர் அல்லது கடபுரி என்றாகிப் பின்னர் திருக்கடவூர் என்று வழங்கலாற்று. இத்தலத்துத் திருக்கோயில் திருத்தருமை ஆதீன கர்த்தர் களின் ஆட்சிக்கு உட்பட்டு மிகச் சிறந்த முறையில் பரிபாலிக் கப்படுகிறது. இறைவருக்கு அம்ருதகடேசர் என்றும் இறை விக்கு அபிராமியம்மை எறுன்ம் திருப்பெயர்கள் வழங்கலாயின வீரம் நிகழ்ந்த ஸ்தானம் ஆகையால் இந்த ஊர் திருக்கடவூர் வீரஸ்தானம் அல்லது வீரட்டானம் என்று வழங்கப்படுகிறது. அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர் ஆகிய மூவருடைய திருப்பதி கங்களும் உள்ளன. குங்குலியக்கலய நாயனார் வறுமையுற்ற காலத்தும் தம் மனைவியாரின் திருமங்கலியத்துக்கு குங்கிலியம் பெற்றுத் தமது குங்குலியத் தொண்டைச் செய்ததும், காரி நாயனார் அவதரித்து தொண்டு செய்ததும், அபிராமி பட்டர் அபிராமியம்மையின் மீது அந்தாதி பாடி பேறு பெற்றதும் இத்தலத்திலேயே தான்.

இத்தகைய சிறப்புப்பெற்ற திருக்கடவூர் சிவாலயத்தில் தனிச் சந்நிதி கொண்டு விளங்கும் ஸ்ரீபாலாம்பாள் ஸமேத ஸ்ரீகாலஸம்ஹார மூர்த்தியின் திருவுருவப் படமே இம்மலரின் மேலட்டையை அலங்கரிக்கிறது. திருக்கடவூர் ஆலயம் திருக் கயிலாய பரம்பரைத் திருத்தருமை ஆதீனத்துக் கோயிலாகை யால் அவ்வாதீனத்தில் இன்று 26-வது ஆதீனகர்த்தராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளுடைய அனுமதியாகிய விசேஷ அருளாசியுடனும், இதனைக் காலண்டர் படமாக வெளியிட்ட மேட்டூர் கெமிகல்ஸ் ஸ்தாபனத்தாரின் அனுமதியுடனும் இப் படத்தை நமது மற்றொரு வெளியீடான 1976ம் ஆண்டு ஸ்ரீ சங்கர ஜயந்தி மலரில் வெளியிட்டோம். மீண்டும் இவ்வாண்டு இந்த சிவஞான பூஜாமலரில் வெளியிடும் பேறு பெறுகிறோம். காலஸம்ஹார மூர்த்தியின் திருவடிகளில் இந்த சிவஞான பூஜாமலரைப் பயபக்தியுடன் ஸமர்ப்பணம் செய்கின்றோம். காலகாலனாகிய சிவபெருமான் நம்மனைவரையும் காத்தருள் புரிவாராக.

சிவம்.

## எமது சிவ ஸஹஸ்ரநாம வெளியீடுகள்

1. ஸ்ரீருத்ரயாமளத்தில் உள்ள
சிவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் 8-50

2. சிதம்பரம் ஸ்ரீநடேச ஸஹஸ்ரநாம
ஸ்தோத்ரம் 11-00

3. ஸ்ரீருத்ர ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் 15-00

இவையனைத்தும் மூலமும் அருச்சனை நாமாவளியும் நாகரம் தமிழ் எழுத்துக்களிலும் விளக்கவுரை தமிழிலும் கொண்டு ஸம்ஸ்க்ருதம் அறியாதவர்களுக்கும் பயன்படும் முறையில் அமைந்தவையாகும்.

மேற்படி மூன்று ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்களையும் ஒரே சமயத்தில் வாங்கினல் சலுகை விலை. ரூ. 30-00 மட்டுமே. தபால் செலவும் இலவசம். மேலும் 8 சிவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள் வெளிவரவுள்ளன.

பதிப்பாசிரியர் :

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600033



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு பரமாசாரியாள்
ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
(68வது பீடாதிபதிகள்)



ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீமத் ஜயேந்த்ர ஸரஸ்வதி
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்



ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீமத் ஜகத்குரு

ஸ்ரீ சங்கரவிஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்



புதுக்கோட்டை ஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானம்

ஸ்ரீ புவனேச்வரிபீடம் சேலம் ஸ்கந்தாச்ரமம்

ஸத்குரு ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகள்

உ

Sri Chandramouleeswaraya Namaha

Sri Sankara Bhagavadpadacharya Paramparagatha

**His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi**

# Jagadguru Sri Sankaracharya Swamigal

**Srimatam, : : Samasthanam,**

**KANCHEEPURAM - 631 502.**

12-10-1987

ஸ்ரீ ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த ஆறு மதங்களுள் சைவமும் ஒன்று.

இது சம்பந்தப்பட்ட செய்திகளையெல்லாம் பற்பல கோணங்களில் தொகுத்து ஆண்டுக்கு ஒரு நூலென வெளியிட்டு வருகிறார் ஸ்ரீ ஆங்கீரச வேங்கடேச சர்மா.

இவ்வாண்டு தமிழ் ஸம்ஸ்க்ருதம் இரு பாஷைகளிலுமுள்ள சிவபரமான தோத்திரங்களைத் திரட்டி சிவஞானபூஜா மலர் என்ற பெயரில் வெளியிடவிருப்பது அறிந்து மகிழ்கிறோம்.

ஆஸ்திக அன்பர்கள் மலரைப் பயன்படுத்தி சிவக்ருபைக்குப் பாத்திரர்களாக ஸ்ரீ பரமேச்வரன் அனுக்ரகிப்பாராக.

நாராயணஸ்மிருதி.

உ

குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத் திருத்தருமையாதீனம்
26-ஆவது குருமஹாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம்
மயிலாடுதுறை (அஞ்சல்) 609001
28-1-1988



''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

இறையருள் நாட்டமுடன் ஆக்கப் பெற்றுள்ள அருள் நூல்களை முழுமையாகவோ அல்லது பகுதிகளாகவோ தொகுப்பதும் அவற்றைப் பகுத்து வெளியிடுவதும் புண்ணியச் செயலாகும். மேலும் அவ்வருள் நூல்களின் முழுப்பொருளைத் தக்கவாறு கட்டுரைகளாக்கி வெளியிடுவதும் வரவேற்கத்தக்க தாகும். இப்புண்ணியச் செயலை ஆண்டுதோறும் இயற்றி வரும் அன்பர் திரு. ஆங்கீரச வேங்கடேச சர்மா அவர்கள் இவ்வாண்டும் அம்முறையில் ''சிவஞான பூஜாமலர்'' என்னும் பெயரில் நூல் வெளியிடுவது மகிழ்ச்சிக்குரியதாகும். அதில் பல அரிய கட்டுரைகளும் அருள் நூல் பாடல்களின் தொகுப்பு களும் அமைந்திருப்பது சிறப்பிற்குரியதாகும்.

மலர் பக்தி மணம் பரப்பித் திகழவும், இப்பணியினைச் செவ்வனே ஆற்றிவரும் அன்பர் நலம் பல பெற்று நீடுவாழ வும், இம்மலரைப் பெற்று மக்கள் சமய நலம் சிறந்துயரவும், ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்,

சிவம்

உ
சிவமயம்

திருக்கயிலாய பரம்பரை, திருவாவடுதுறை ஆதீனம்,
ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாசதேசிக பரமாசாரிய சுவாமிகள்

குருமகாசந்நிதானம்
திருவாவடுதுறை
(தஞ்சாவூர் மாவட்டம்)

நாள் : 26-10-1987



## ஆசியுரை

பிரபவ ஆண்டு மலர் சிவஞான பூஜாமலராக வெளிவர உள்ளமை அறிந்து மகிழ்கிறோம்.

வடமொழி தமிழ்மொழி இலக்கிய சாத்திர தோத்திர நூல்களில் அமைந்துள்ள சிவபரத்துவச் செய்திகளைக் கட்டுரைகளாகக் கொண்டும் ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அருளிச்செய்த இராமாயண தாத்பரிய சங்கிரகம், பாரத தாத்பரிய சங்கிரகம் ஆகிய * நூல்கள் தமிழில் விளக்கவுரைகளைப் பெற்றும் இம் மலர் சிவபரத்துவ மணங்கமழ மலர்வது பெரிதும் பாராட்டுதற்குரியது.

மொழிப்புலமையும் சாத்திர நுண்ணறிவும் வாய்ந்த சிவ பூசைச் செல்வராகிய ஸ்ரீ ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா அவர்கள் சிவப்பணிகள் சிறந்து உலகு இன்புறவும் மலர் உயரிய பயன் விளைக்கவும் எம் ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ ஞானமா நடராஜப் பெருமான் திருவடிமலர்களைச் சிந்திக்கின்றோம்.

---

* இவை தனி நூலாக விரைவில் வெளியிடப்படவுள்ளன, பதிப்புரையும் பார்க்க.

உ

சிவ சிவ

கயிலை மாமுனிவர்

# ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அதிபர், ஸ்ரீகாசிமடம்

திருப்பனந்தாள் — 612504
(தஞ்சை மாவட்டம்)



## ஆசியுரை

சென்னை மேற்கு மாம்பலத்தில் ஸ்ரீசங்கர பக்த ஜன சபாவை நிறுவி அதன் செயலாளராகத் தொண்டாற்றி வருப வரும், ஸ்ரீசங்கர ஜயந்தி மலர் என்ற இதழாசிரியரும், கந்த புராணம் முதலான புராணங்களைப் பல்லாண்டுகளாகத் தொடர் சொற்பொழிவாகப் பிரவசனம் செய்து வருபவரும், வடமொழியிலும் தென்தமிழிலும் பாண்டித்யம் உள்ளவரும், மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை என்ற பெய ரில் தேவாரப் பதிகங்களுக்குத் தொடர்ந்து உரை விளக்கம் வெளியிட்டு வருபவரும் ஆன ஆங்கீரஸ ஸ்ரீ எஸ். வெங்கடேச சர்மா அவர்கள் சமயத் தொண்டர்களில் வைத்துப் பாராட்டத் தக்க புகழ் படைத்தவர்.

அன்னார் ஆண்டுதோறும் ''சிவஞான பூஜாமலர்'' என்னும் பெயரில் சிறப்பு மலர் வெளியிட்டு வருவது பலரும் அறிந்த செய்தியேயாகும். அம்முறையில் இப்போது வெளிவரும் இம்மலரில் சமய சாத்திர தோத்திர கட்டுரைகளும் வடமொழி நூல்களும் இடம் பெற்றுள்ளன. இராமாயணமும் பாரதமும்

சிவபரத்துவமே பேசுகின்றன என்ற உண்மையை வெளிப் படுத்திக் காட்டிய ஸ்ரீ அப்பய்ய தீட்சிதரின் வடமொழி நூல்கள் இம்மலரில் * இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

இந்நூலாசிரியர் இதுபோல் இன்னும் பல அரிய நூல்களை வெளியிட்டு மேன்மையும் புகழும் எய்தச் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

—சிவ சிவ.

---

* இவை தனி நூலாக விரைவில் வெளியிடப்படவுள்ளன. பதிப்புரையும் பார்க்க.

சிவம்

ஓம் நம: சிவாய



# புதுக்கோட்டை, ஸ்ரீபுவநேச்வரீ பீடம் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் அருளிய

## ஸ்ரீமுகம்

வேத மோதிலென் வேள்விகள் செய்யிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்கமோ ராறு முணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே.

(திருநாவுக்கரசர்)

சிவபக்த குலசேகரர், சிவோத்கர்ஷ ப்ரசாரக சக்ரவர்த்தி, சிவபூஜாதுரந்தரர், பண்பாளர், பேச்சாளர், பண்டிதகுல திலகம், ப்ரம்மஸ்ரீ ஆங்கீரஸ வேங்கடேச சர்மா அவர்கள் இவ்வாண்டு சிறப்புமிக்க ''சிவஞான பூஜாமலர்'' ஒன்று வெளியிடுவது அறிந்து மிக மிக மகிழ்வுறுகின்றோம். வடமொழியிலும் தென்மொழியிலும் பெரும் புலமை பெற்றிருப்பதுடன் அழகாக விஷயங்களை எடுத்துச் சொல்லும் பேராற்றலும் படைத்தவர் என்பதை ஆஸ்திக உலகம் அறியும். அவர் எழுதிய நூல்கள் பல.

வியாஸர் எழுதிய 18 புராணங்களில் 10 புராணங்கள் சிவபிரானின் மஹிமையை எடுத்தோதுகின்றன. 18 புராணங்களின் மொத்தம் சுலோகங்கள் 4 லக்ஷம். அதில் ஸ்காந்த புராணமே சற்றேறக்குறைய ஒரு லக்ஷமாகும்.

''யோ தேவானும் ப்ரதமம் புரஸ்தாத், ருத்ரோமஹர்ஷி:'' என்று தேவர் முதல்வனும் மஹர்ஷியும், ''ஆவோ ராஜாநமத்வரஸ்ய'' என்று வேள்விகளுக்கு ராஜாவாகவும் இருந்து கொண்டு, சின் முத்ரையினுல் ஸனகாதியருக்கு ஆத்மதத்வமுபதேசிக்கும் ஞானமூர்த்தி, ஆலமர்கடவுள், முழுமுதற்கடவுளாம் முக்கணெந்தை ''யஸ்மின்னீச்வர இத்யனன்ய விஷய: சப்தோ யதார்த்தாக்ஷர:'' என்று மஹாகவி காளிதாஸர் கூறியபடி தேவர்களிலே ஈசுவரன் எனத் தனிப்பெயர் பெற்றவர். இவர் பெருமையை முழுக்க முழுக்க ஸூதஸம்ஹிதை பேசும். பரமேச்வரன் பெருமை பேச எழுத பல பிறவிகளில் பன்னுட்கள் பெருந்தவம் செய்திருக்க வேண்டும். அவ்வாருன புண்ணியம் செய்தவர் ஸ்ரீ வேங்கடேச சர்மா அவர்கள்.

அடையப்பலம் மஹான் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் வடமொழியில் 100க்கு மேற்பட்ட நூல்களை வழங்கியவர். சிவாவதாரம் என்றே சிறப்பித்துப் பேசப்படுபவர். சிவனையே சிந்திக்கும் பண்பினர். வடமொழி மஹாவித்வான்களில் முதலிலே நிற்பவர். ஆறு சாஸ்திரங்களிலும் பேரறிவு படைத்தவர். அவர் எழுதிய வேதாந்த சாஸ்திர ''பரிமளம்'', சைவம் ''சிவார்க்கமணி தீபிகை'', முதலிய பலநூல்கள் பெருமை மிக்கவை. இவர் தித்திக்கும் திருவாசகத்தை அருளிய மாணிக்கவாசகரிடமிருந்தே பஞ்சாக்ஷர உபதேசம் பெற்றவர் என்று ''அப்பய்ய தீக்ஷிதேந்திர விஜயம்'' என்ற நூல் கூறும். இவ்வாருன ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் ஸ்ரீமத் ராமாயண தாத்பர்ய ஸங்க்ரஹம், பாரத தாத்பர்ய ஸங்க்ரஹம்'' என்ற இரு நூல்களை வட மொழியில் இயற்றியுள்ளார். இவைகளில் வால்மீகி ராமாயணமும் வ்யாஸ மஹாபாரதமும் சிவோத்கர்ஷத்தை விளக்குகின்றன என்று அழுத்தமாய் நிரூபித்துள்ளார். அந்த இரண்டு நூல்களையும் பாஷ்ய பாவக்ஞ, பிரம்மஸ்ரீ வரஹூர் கல்யாணசுந்தர சாஸ்திரிகள் என்ற மஹாவித்வானின் தூய தமிழுரையுடன் இம்மலரில் * வெளியிடவுள்ளார். ஸ்ரீசர்மா அவர்களின் சிவபக்திக்கு இதுவுமோர் சான்ருகும்.

இவரும் இவரது தொண்டும் பல்லாண்டு சிறப்புற்றிருக்கவும் சிவமணம் கமழும் "சிவஞான பூஜா மலரும்" அன்பர் திருக்கரங்களில் நித்தம் மலர்ந்தே மணங்கமழ்ந்து கொண்டிருக்கவும் ஸ்ரீஜகன்மாதா ஸ்ரீபுவனேச்வரீ தேவியை வேண்டுகின்றோம். நாராயண ஸ்மிருதி.

ஸ்ரீஸத்குரு ஸ்வாமிகளவர்களின் ஆணைக்கிணங்க
எழுதியவர் :

கவி ஸார்வபௌம, நியாய-மீமாம்ஸா சிரோமணி,
திருவெண்காடு T. K. முத்துஸ்வாமி சாஸ்திரிகள்,
வித்வான், ஸ்ரீபுவனேச்வரீ பீடம்.

---

- இந்த இரண்டு நூல்களும் தனிப்பிரசுரமாகக் கூடிய விரைவில் வெளியிடப்படும். பதிப்புரையும் பார்க்க.

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

சைவ நூல் அறிமுகம் :

# நம்பியாண்டார் நம்பி
# ஓர் அறிமுகம்

[ஆசிரியர் : Dr. P.K. வரதராசன், M. A., B. O. L., Ph.,D,. கோபாலகிருஷ்ணகாலனி பெங்களூர் சாலை கிருஷ்ணகிரி-635001, பக்கங்கள் 8+38, விலை ரூ. 4-00 நூல் பெற விழைபவர்கள் தபால் செலவு உள்பட ரூ. 5-00 ஆசிரியருக்கு அனுப்பிப் பெறலாம்.)

கிருஷ்ணகிரி அரசினர் கல்லூரியில் தமிழ்த் துறையில் துணைப்பேராசிரியராய்ப் பணியாற்றும் Dr. P.K. வரதராசன் அவர்கள் நமது பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் பாத்திரமானவர். உழைப்பால் உயர்ந்த உத்தமர். இவர் தமது Ph. D. பட்ட ஆய்வுக்காக நம்பியாண்டார் நம்பிகளின் பிரபந்தங்களைத் தேர்ந்தெடுத்து அதன் முதற்பணியாகத் திருநாரையூர் சென்று நம்பிகளைப் பற்றிய குறிப்புகள் தேடச் சென்றபோது நம்பிகளை நினைந்து அடிமைகொண்ட பொல்லாப் பிள்ளையார் இவ்வன்பரையும் அடிமை கொண்டார் என்றே நினைக்கின்ரேம். எனவே பொல்லாப் பிள்ளையார் திருவருளால் ஆய்வு செவ்வனே நிறைவுற்று Ph. D. பட்டமும் பெற்ருர்.

நம்பியாண்டார் நம்பிகள் சைவத்துக்குச் செய்த பேருதவிகளை உலகு இன்னும் நன்முறையில் அறிந்து அவரை நினைவு கூறவில்லை என்ற மனக்குறை இவருக்கு உண்டு. எமக்கும்,

அங்ஙனமே, நம்பியாண்டார் நம்பிகளின் பெருமையை, சமயாசாரியர் நால்வர், மற்றும் அடியார்கள் பெருமையைப் போற்றும் அளவு போற்றச் சைவ உலகம் மறந்துவிட்டது என்ற மனக்குறை உண்டு. இக்குறைகளை நீக்கும் முதல் முயற்சியே "நம்பியாண்டார் நம்பி—ஓர் அறிமுகம்" என்ற இந்த நூல் என்று நம்புகிறோம். மேலும் பல நூல்களை இயற்றி நம்பியாண்டார் நம்பிகளின் நினைவை நிலை நிறுத்த நமது உழுவலன்பரான இப்பேராசிரியர் முயற்சி செய்வார் என்றும் நம்புகின்றோம்.

இந்நூல் இரண்டு பகுதிகளாக ஆக்கப்பட்டுள்ளது. முதற் பகுதியில் நம்பியாண்டார் நம்பிகளின் வரலாற்றுச் சுருக்கம், திருமுறைகளைத் தொகுத்தது முதலியவைகளைப் பற்றியும், இரண்டாவது பகுதியில் நம்பியாண்டார் நம்பிகளின் 10 பிரபந்தங்களை 'பானைசோற்றுக்கு ஒரு சோறு' என்ற முறையில் அறிமுகப்படுத்தியும் இந்நூலை ஆக்கியுள்ளார். திராவிட வேதவியாஸர் என்று போற்றப்படும் நம்பிகளின் பெருமையை சைவப் பெருமக்கள் அறிந்து போற்றவேண்டும். அதற்கு இந்த அறிமுக நூல் நன்கு பயன்படுமாகையால் அன்பர்கள் இதை வாங்கிப் படித்துப் பயனுறவேண்டுகின்றோம்.

---



---

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# ஆதிரை நன்னாளில் ஆசிரியர் பெற்ற அனுக்கிரஹம்

சுமார் 2300 ஆண்டுகட்கு முன்பாக ஸ்ரீமத் ஜகத்குரு ஆதிசங்கர பகவத் பாதாசார்யர்களால் தோற்றுவிக்கப்பட்டு அவர்களாலேயே சந்த்ரமௌளீச்வர ஸ்படிகலிங்க பூஜை செய்யப்பட்ட திருமடம் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடமாகும். ஆதிசங்கரரில் ஆரம்பித்து 67 சங்கராசாரியர்கள் அருளாட்சி செலுத்திய பின் 68-வது சங்கராசாரியராகப் பட்டமேற்றவர்கள் இன்று பரமாசாரியாள் என்றும், மஹா பெரியவாள் என்றும் போற்றப்படும் ஸ்ரீமத் ஜகத்குரு சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளாவர். இவர்களுடைய அருள் வழியே நின்று 69-வது பீடாதிபதிகளாகப் பிரகாசிப்பவர்கள் ஸ்ரீமத் ஜகத்குரு மஹா ஸந்நிதானம் ஸ்ரீமத் ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீசங்கராசாரிய ஸ்வாமிகள் ஆவர். ஸ்ரீஜகத்குரு பரமாசாரியர்களைப் போலவே இவர்களும் பாரத தேசம் முழுமையும் யாத்திரை செய்து ஆஸ்திகம் தழைத்தோங்க, ஆங்காங்கு ஸ்ரீசந்த்ரமௌளீச்வர பூஜை செய்து அருள்மழை பொழிந்து வருவதை அனைவரும் அறிவர்.

இத்தகைய பெருமை பெற்ற ஸ்ரீமத் ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரிபூரண அனுக்கிரஹம் ஆசிரியர் ஆங்கீரஸ சர்மாவுக்கு எப்போதுமே உண்டு. மேலமாம்பலம் ஸ்ரீசங்கர பக்த ஜனசபையை நிறுவி, சுமார் 25 ஆண்டுகட்கும் மேலாக, அச்சபையின் ஆதரவில் நிகழ்த்தப்படும் பிரவசனங்கள், புத்தக வெளியீடுகள் மூலமும் சிவபுராணஞான பூஜையாக நிகழ்த்தப்படும் பெரிய புராணம், ஸ்காந்த புராணம்,

திருவிளையாடற் புராணம், சிவானந்தலஹரீ மற்றும் சைவ இலக்கியத் தொடர்சொற்பொழிவுகள், சிவபரத்துவ நூல் வெளியீடுகள் மூலமாகவும் ஆசிரியர் ஆங்கீரஸ சர்மா செய்து வந்த சிவபக்திப் பிரசாரத்துக்கு ஆசி அளிக்கும் முறையில் ஸ்ரீமுகங்கள், ருத்ராக்ஷமாலைகள், பட்டு சால்வைகள் முதலியன வழங்கி ஸ்ரீமத் ஜகத்குரு மஹாஸந்நிதானம் அவர்கள் அவ்வப் போது அனுக்கிரஹித்து வந்துள்ளார்கள். 1985ம் ஆண்டு ஜூன் மாதம் ஆசிரியருக்கு மணிவிழா [ஷஷ்ட்யப்த பூர்த்தி] நடைபெற்றபோது, வடநாட்டில் யாத்திரையில் இருந்த காரணத்தால் ஆசிரியர் அனுப்பிய பத்திரிகை விழாமுடிந்த பிறகே கிடைத்தும் கூட, ஸ்ரீமத் ஜகத்குரு அவர்கள் பரமகருணையுடன் ஒரு வாரம் கழித்து ஸ்ரீமடம் அன்பர் ஒருவர் மூலம் சால்வையும் ருத்ராக்ஷ மாலையும் அனுப்பி அனுக்ரஹம் செய்தார்கள்.

இவையனைத்துக்கும் சிகரம் வைத்தது போல 4-1-1988, பிரபவ-மார்கழித் திங்கள் திருவாதிரைத் திருநாளன்று ஸ்ரீமத் ஜகத்குரு மஹாஸந்நிதானம் அவர்கள் ஆசிரியர் ஆங்கீரஸ சர்மாவின், கால்நூற்றுண்டுக்கும் மேலாகச் செய்துவரும் சிவபக்திப் பிரசாரத்தை அங்கீகரித்துப் பாராட்டி மேலும் ஊக்குவிக்கும் வகையில் ஆசிரியருக்கு "சிவபக்திப் பிரசார மணி" என்ற விருதினை வழங்கியருளி, அதற்குரிய சான்றிதழும் சால்வையும் அனுக்கிரஹித்தருளி, விபூதிகுங்கும பிரஸாதங்களோடு விசேஷமாக ஆசீர்வதித்தருளினுர்கள் என்ற செய்தியை மகிழ்ச்சியுடன் நமது சிவஞானபூஜாமலர் வாசகர்கட்கும் மற்றும் அன்பர்கட்கும் தெரிவித்துக் கொள்கிரேும்.

சிவானந்தலஹரீ என்ற ஒப்புயர்வற்ற அருள்நூல் மூலம் ஆசிரியர் ஆங்கீரஸ சர்மாவை சிவநெறியிற் செலுத்தி, நற் சங்கவெண் குழையோர் காதிற் கோமானும் சங்கரற்கே மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகச் செய்தருளிய ஜகத்குரு ஸ்ரீமத் ஆதிசங்கரரின் திரு அவதாரத் திருநாளும் ஒரு திருவாதிரையேயாகும். சிவபெருமானைத் தெய்வமாகக் கொண்டதும் திருவாதிரை நட்சத்திரமேயாகும். எனவே

இத்தகைய சிறப்புபெற்ற திருவாதிரைத் திருவிழாநாளில் அதே ஆதிசங்கரர் பரம்பரையில் 69வது ஜகத்குருவாகத் திகழும் மஹா ஸந்நிதானம் அவர்கள் ஆசிரியருக்கு இத்தகைய பேரருளைப் புரிந்தது திருவருட்செயலேயாகும்.

இதே நன்னாளில் ஆசிரியரால் நிறுவப்பட்டு வெள்ளி விழாக் கண்ட மேலமாம்பலம் ஸ்ரீசங்கர பக்தஜன சபையின் வெள்ளிவிழா நிகழ்ச்சிகள் நிறைவு மலராக வெளியிடப்பட்ட **The Story of Jagadguru Sri Adi Sankara Bhagavatpada** என்ற ஆங்கிலநூல் ஸ்ரீமத் ஜகத்குரு பரமாசாரியாள் ஸந்நிதியில் வெளியிடப்பட்டது.

இத்தகைய பேரனுக்கிரஹம் ஆசிரியருக்குக் கிடைக்கப் பெருமளவில் உதவிய மேலமாம்பலம் ஸ்ரீசங்கரமடம் மேனேஜிங் ட்ரஸ்டி ஸ்ரீமான் A. ஸாம்பசிவ ஐயர் அவர்களும், மற்றும் மேலமாம்பலம் ஸ்ரீசங்கர பக்த ஜனசபை வெள்ளி விழாக் குழுத்தலைவர் ஆஸ்திகரக்ஷாமணி ஸ்ரீமான் V. சின்ன ஸ்வாமி ஐயர், உபதலைவர் ஸ்ரீமான் K. S. கிருஷ்ணய்யர் அவரது குமாரர்கள் ஸ்ரீமான்கள் K. லக்ஷ்மணன், K. ஜயராமன் The Story of Jagadguru Sri Adi Sankara Bhagavatpada என்ற ஆங்கில நூலின் ஆசிரியர் ஸ்ரீமான் N. அனந்தராமன் (Retd. Incometax Commissioner, Bombay), பகவான் ஸ்ரீ வேதவியாஸ வேத பாராயண ரக்ஷண ஸபா காரியதரிசி ஸ்ரீமான் V. பட்டாபிராமன், ஸ்ரீமடம் பக்தபிரமுகர் ஸ்ரீமான் S. வைத்தியநாதன் ஆகியோர்களும் இந்தச் சிறப்பு நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர்.

ஆசிரியர் ஆங்கீரஸ சர்மா பெற்ற இப்பெரும் பேற்றினை யறிந்து நமது வாசகர்கள் மகிழ்ச்சி அடைவார்கள் என்று நம்புகிறோம்.

எல்லாம் சிவன் செயல்.

சிவம்.



திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமை ஆதீனம்
26-வது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய ஸ்வாமிகள்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்
கயிலைமாமுனிவர், காசிவாசி
ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தம்பிரான்
ஸ்வாமிகள்



நாட்டின் நன்மைக்காக எட்டுவகை
வேள்விகள் செய்த ஸ்ரீ காயத்திரி அருள்சித்தர்
ஸ்ரீலஸ்ரீ காயத்திரி ஸ்வாமிகள்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம் :

# சிவஞான பூஜா மலர்

## அக்ஷய, பிரபவ, விபவ

## (1986, 1987—1988)

ஞான நூல் தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல்நன்கு
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞானபூஜை.

### சிறப்பு

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கரா சாரிய சுவாமிகள், திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமஹாசந்நிதானம் அவர்கள், திருக்கயி லாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமஹா சந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் காசிமடம் அதிபர் கயிலைமாமுனிவர்—காசிவாசி ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் அவர்கள், புதுக்கோட்டை ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த சுவாமிகள் அவர்கள், ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள் அவர்கள் ஆகியோரது பரிபூரண அனுக்கிரஹம் பெற்றது இம்மலரின் தனிச்சிறப்பாகும்.

### நோக்கங்கள்

1. "ஞாலம் நின் புகழே மிக வேண்டுந் தென், ஆலவா யில் உறையும் எம் ஆதியே" என்ற ஆளுடைய பிள்ளையாரின் அருமைத் திருவாக்கின்படி சிவபெருமானின் பொருள் சேர் புகழையும், முழு முதன்மையையும் ஞாலமெங்கிலும் பரப்பும் ஒரு இயக்கமாக இம்மலர் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இது ஒரு பத்திரிகையும் அல்ல, தனிப் புத்தகமும் அல்ல.

2. ''தென் தமிழும் வடகலையும் தேசிகமும் பேசுவன, மன்றினிடை நடமாடும் வள்ளலையே பொருளாக......''என்ற தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் திருவாக்குப்படி தமிழ், வடமொழி, மற்ற மொழி நூல்களில் உள்ள சிவபெருமானது பெருமையினையும், முழு முதற்றன்மையினையும் விளக்கும் கட்டுரைகளைத் தொகுத்து ஆண்டு தோறும் இந்தமலர் வெளியிடப்படுகிறது.

3. ஆசிரியரின் மற்றொரு வெளியீடான ''மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை'' பதிப்புக்கும், ஆசிரியரின் சிவபுராண ஞானபூஜைக்கும் இந்த மலர் மூலம் பொருளுதவி தேடுவது.

## நன்கொடைகள்

இம்மலருக்காக ரூ. 25/-ம் அதற்கு மேலும் நன்கொடையளித்தவர்கள், வாக்களித்தவர்கள் பெயர்களை கீழே நன்றியுடனும் மகிழ்ச்சியுடனும் கொடுக்கிறோம்.

| | ஸர்வஸ்ரீ | ரூ. பை. |
|---|---|---|
| 1 | ஸ்ரீலஸ்ரீ காயத்திரி சுவாமிகள், சென்னை-47 | 501-00 |
| 2 | சிவஸ்ரீ வாசீச்வர சிவாசாரியார், தலைவர், இந்து சமயமன்றம். இராயபுரம் கிளை, ஸ்ரீ அங்காள பரமேச்வரி ஆலயம், சென்னை-13. | 150-00 |
| 3 | ஆஸ்திகமணி A. சுப்ரமணியஐயர், M. A., B. L., ஸுப்ரீம் கோர்ட் அட்வொகேட், சென்னை-1 | 150-00 |
| 4 | சிவாசார்யகுலபூஷணம், சிவாகம சாஸ்த்ர நிபுண, சக்தி கருணை சக்கரவர்த்தி, சிவஸ்ரீ T. S. சாம்பமூர்த்தி சிவாசாரியார், ஸ்ரீ காளிகாம்பாள் கோவில், சென்னை-1 | 150-00 |
| 5 | T. M. M. தட்சிணாமூர்த்தி, விருதுநகர் | 140-00 |
| 6 | S. ராமமூர்த்தி, B. Com., A. C. A., மேலமாம்பலம், சென்னை.33 | 100-00 |

| ஸர்வஸ்ரீ | ரூ. பை. |
|---|---|
| 7 P. V. ஸ்ரீதரன், B, Com., F. C. A., தியாகராயநகர், சென்னை-17 | 100-00 |
| 8 ME. C. ஜயராஜ், ஆலோசகர், இந்து சமய மன்றம், இராயபுரம், சென்னை-13 | 100-00 |
| 9 மாங்காடு தபஸ் காமாக்ஷி உபாசகர், தர்மரக்ஷா மணி சிவஸ்ரீ V. D. ஏகாம்பர சிவாசாரியார், மாங்காடு. | 100-00 |
| 10 K. மணி, ரெக்ஸ் அலுமினியம் ஸ்டோர்ஸ், உதகமண்டலம் | 100-00 |
| 11 K. R. விச்வநாதய்யர், நாதன்ஸ் லாட்ஜிங், தியாகராயநகர், சென்னை-17 | 50-00 |
| 12 R. மாத்ருபூதம் ஐயர், அட்வொகேட், மேலமாம்பலம், சென்னை-33 | 50-00 |
| 13 Dr. ராணி L. ஹனுமந்தன், M. D., ராணி க்ளினிக், மதுரை-1 | 50-00 |
| 14 ஸ்ரீகிருஷ்ண நாராயணன், B. E, (HONS) பீளமேடு, கோயம்புத்தூர்-4 | 50-00 |
| 15 அறச்சுடர் கயப்பாக்கம் முத்துலிங்க ரெட்டியார், சென்னை-31 | 50-00 |
| 16 K. V. மூர்த்தி நாராயணச் செட்டியார், பாப்பாரப்பட்டி, தர்மபுரி ஜில்லா. | 50-00 |
| 17 ஆஸ்திக ரக்ஷாமணி V. சின்னஸ்வாமி ஐயர், தியாகராயநகர், சென்னை-17 | 50-00 |
| 18 S. ராமச்சந்திரன், உபதலைவர், இந்து சமய மன்றம், இராயபுரம், சென்னை-13 | 50-00 |
| 19 G. ஆனந்தன், I. P. S. (Retd.) உசிலம்பட்டி, மதுரை ஜில்லா | 50-00 |
| 20 V. வைத்தியநாதன், புதுடெல்லி-16 | 51-00 |

| ஸர்வஸ்ரீ | ரூ. பை. |
|---|---|
| 21 Dr. K. ஜயராமச்சந்திரன், M. B. B. S., நாமக்கல், சேலம் மாவட்டம் | 50-00 |
| 22 T. K. நடராஜ சர்மா, பாட்டைபுலியூர், தர்மபுரி மாவட்டம் | 50-00 |
| 23 M. V. பார்த்தசாரதி செட்டியார், தம்மம்பட்டி, சேலம் மாவட்டம் | 51-00 |
| 24 A. R. S. ரத்னம், பம்பாய்-77 | 40-00 |
| 25 V. ராகவன், நியு பேங்க் ஆப் இந்தியா, திருச்சி-2 | 50-00 |
| 26 K. அம்பிகேச்வரன், வனவாசி P. O., சேலம் மாவட்டம் | 30-00 |
| 27 S. K. சுப்பிரமணியன், B. A., L. L. B., அட்வோகேட், சேலம்-6 | 30-00 |
| 28 T. விச்வநாதன், HAL., பெங்களூர்-93 | 27-00 |
| 29 T. P. சந்திரசேகரன், அல்சூர், பெங்களூர்-8 | 27-00 |
| 30 N. லக்ஷ்மணன், மால்காஜ்கிரி, ஹைதராபாத்-47 | 27-00 |
| 31 G. கோவர்தன், Fairlands, சேலம்-16 | 25-00 |
| 32 சிவ. து. தயானந்தன், ஆற்காடு | 25-00 |
| 33 ஸ்ரீமதி இந்திரா அனந்தன், கொள்ளேகால் | 25-00 |
| 34 மாரியப்ப நாடார், ஜெனரல் மெர்சன்ட், இராயபுரம், சென்னை-13 | 50-00 |
| 35 சிவஸ்ரீ கணேச சிவாசாரியர், ஸ்ரீகச்சபேச்வரர் ஆலயம், சென்னை-1 | 25-00 |
| 36 C. பாலகிருஷ்ண உடையார், ஞானந்தர் வழிபாட்டுக் கழகம், மயிலாடுதுறை | 25-00 |
| 37 S. லிங்கேச்வரன் (Asst. Accounts Officer) வருங்கால வைப்பு நிதி அலுவலகம், மதுரை-2 | 25-00 |

| ஸர்வஸ்ரீ | ரூ. பை. |
|---|---|
| 38 சண்டமாருத ப்ரசங்கரத்ஞாகரம், A. T. A, ஈச்வரனார், சென்னை-61 | 25.00 |
| 39 A. சாம்பசிவம் ஐயர், மேலமாம்பலம், சென்னை-33 | 25-00 |
| 40 S. விச்வநாதன், ஆடிடர், A. G' S. ஆபீஸ், சென்னை-6 | 25-00 |
| 41 M. A. M. அண்ணாமலை இந்தியன் பேங்க், திருப்பத்தூர், (P. M. Dt) | 25-00 |
| 42 V. N. கணேசன், B. Com., மெர்கன்டைல் கிரெடிட் கார்பொரேஷன், சென்னை-2 | 25-00 |

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை

பதிப்பாசிரியர்

தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாள்முக்கட்
செங்கரும்பே மொழிக்கு மொழிதித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்கும் திருச்செவிக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்றுமோதான்

—தாயுமானவ சுவாமிகள்

மேலே கொடுத்துள்ள தாயுமானவ சுவாமிகளின் பாடலில் உள்ள ''மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலுந் தமிழ்'' என்ற சொற்றொடரை அடியொற்றி ''மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை'' என்ற பெயரில் அடியவன் வெளியிட்டு வருகின்ற தேவார உரை நூல்கள் பற்றிய விவரங்களைச் சென்ற ஆண்டு மலர்களில் விரிவாகக் கொடுத்துள்ளேன். இந்த மலரிலும் கொடுக்கின்றேன். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியோர் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்கட்கு அவர்கள் யாத்திரை செய்த முறையினைப் பின்பற்றி பதிக அமைப்பு, பொழிப்புரை, விசேடவுரை, இன்றியமையாச் சாத்திரக் குறிப்புகள், பதிக வரலாறு, தலவரலாறு, புராணவரலாறு முதலிய விசேடங்களுடன் 108 தமிழ் மாலைகள் பதிப்பிக்க உறுதி பூண்டு இதுவரை 21 தமிழ் மாலைகள் வெளியிடப்பட்டுள்ளன. முதலில் திருஞானசம்பந்தர் தேவார உரை வெளியிடப்பட்டு வருகிறது. சிவஞான பூஜாமலர் வெளியீட்டின் நோக்கங்களுள் இத்தமிழ் மாலைப் பதிப்புக்கு உதவுவதே முக்கியமானதாகும். சைவ மெய்யன்பர்கள் மேலும் சந்தா சேர்ந்து உதவுவாராயின் தமிழ்மாலைப் புத்தகங்கள் விரைவில் வர ஏதுவாகும்.

## சந்தா விகிதங்கள்

| முதல் ஆறு தமிழ் மாலைகள் | ரூ.பை. |
|---|---|
| ஒவ்வொரு தமிழ்மாலையும் தனிப்பிரதி | 2-00 |
| 1 முதல் ஆறு வரை தமிழ்மாலைகள் சேர்த்து | 10-00 |
| ஏழாவது முதல் 18வது தமிழ்மாலை வரை | |
| ஒவ்வொரு தமிழ்மாலையும் தனிப்பிரதி | 3-00 |
| 7 முதல் 18 வரை 12 மாலைகள் சேர்த்து | 30-00 |
| 19வது தமிழ்மாலை முதல் : | |
| ஒவ்வொரு தமிழ்மாலையும் தனிப்பிரதி | 4-00 |
| ஒவ்வொரு ஆறுமாலைத் தொகுதி | 20-00 |
| 108 தமிழ்மாலைகளுக்கும் முன்பண உதவிச் சலுகை விலை | 225-00 |

முன்பண உதவிச் சலுகைவிலைத் தொகையை மொத்தமாகவும், தவணைகளில் ஓராண்டுக்காலத்திலும் செலுத்தலாம். முன் பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமாகியுள்ள தமிழ் மாலைகள் யாவும் உடனடியாக அனுப்பப்பட்டு மற்றவை பிரசுரமாகும் போது உடனுக்குடன் அனுப்பிவைக்கப்படும்.

சென்ற மலர்களில் 108 மாலைகளுக்கும் முன்பண உதவிச் சலுகை விலை அளித்தவர்கள் 119 அன்பர்களின் பெயர்களைப் பிரசுரித்திருந்தோம். அதற்குப் பின் சந்தா சேர்ந்தவர்களின் பெயர்களை மட்டும் கீழே கொடுத்துள்ளோம்.

ஸ்ரீமான்கள்:

120. V. இராகவன், நியு பேங்க் ஆப், இந்தியா, திருச்சி-2
121. C. V. விச்வநாதன், கர்னூடகாபேங்ச், கோயம்புத்தூர்-1
122. S. சிதம்பரநாத கல்யாணி, தலைவர், அருள் நந்தி சிவம் அருட்பணி மன்றம், சிந்துபூந்துறை, திருநெல்வேலி-1

123. S. S. கிருஷ்ணஸ்வாமி, 7, ஜயராம் செட்டிதெரு, திருவான்மியூர், சென்னை-41

124. S. சங்கரநாராயணன், 15, சிவன் தெற்கு ரதவீதி, பாளையங்கோட்டை, திருநெல்வேலி-627002.

மற்றும் சிலர் ஆறு மாலைகளுக்குரிய தொகையைச் செலுத்தியும், சிலர் அவ்வப்போது தனிப்பிரதியாகவும் பெற்று ஆதரிக்கிறார்கள். ஆதரவு நல்கும் அனைவருக்கும் அடியேனது மனப்பூர்வமான நன்றிகள் உரித்தாகுக.



சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

ஓம் கம் கணபதயே நம:

॥ ओं गं गणपतये नमः ॥

# விநாயகர் வணக்கம்

சங்கரனடிமை

ஸ்காந்த புராணம், சிவரஹஸ்ய கண்டம், ஸம்பவ காண்ட ஆரம்பத்தில் பின்வரும் விநாயகர் வணக்கம் கூறப் படுகிறது.

ஓம்கார நிலயம் தேவம் கஜவக்த்ரம் சதுர்புஜம் ।
பிசண்டிலமஹம் வந்தே ஸர்வ விக்நோபசாந்தயே ॥

(இதன் பொருள்) ஓம் எனப்படும் பிரணவத்தினை இருப் பிடமாக உடையவனும், யானைமுகம் உடையவனும், நான்கு திருக்கரங்களையுடையவனும், பெரும் வயிறுடையவனுமான மஹா கணபதியை எல்லா இடையூறுகளும் நீங்குவதற்காக வணங்குகின்றேன்.

இதே பகுதியில் மஹா கணபதியுடைய பதினாறு சிறப் பான திருநாமங்கள் அடங்கிய பின்வரும் ச்லோகங்களும் உள்ளன.

ஸுமுகச்ச ஏகதந்தச்ச கபிலோ கஜகர்ணக: ।
லம்போதரச்ச விகட: விக்நராஜோ விநாயக: ॥

தூமகேதுர் கணாத்யக்ஷ: பாலசந்த்ரோ கஜானன: ।
வக்ரதுண்ட: சூர்பகர்ண: ஹேரம்ப: ஸ்கந்த பூர்வஜ: ॥

(இதன் பொருள்) 1) ஸுமுகன்—அழகிய முகத்தை யுடையவன்; 2) ஏகதந்தன்—ஒரு தந்தத்தையுடையவன் 3) கபிலன்—கபில நிறம் (ஒருவகைச் சிவப்பு நிறம்) உடைய வன், 4) கஜகர்ணக:—யானைக் காதுள்ளவன் 5) லம்போதரன் —நீண்டு தொங்குகின்றதும் பானை போன்றதுமான வயிறு உடையவன் 6) விகடன்—பெருமை உடையவன் 7) விக்ந ராஜன்—இடையூறுகளை அடக்கி ஆள்பவன். 8) விநாயகன்— இடையூறுகளைப் போக்குபவன் 9) தூமகேது—அக்னி போல் பிரகாசிப்பவன். 10) கணாத்யக்ஷன்-பூதகணங் களுக்குத் தலைவன் 11) பாலசந்திரன் - நெற்றியில் சந்திரனை தரித்தவன் 12) கஜானன் - யானை முகத்தோன் 13) வக்ர துண்டன்—வளைந்த துதிக்கையையுடையவன் 14) சூர்ப கர்ணன் - முறம் போன்ற காதுகளையுடையவன் 15) ஹேரம் பன்—பக்தர்களுக்கு அருள் புரிபவன் 16) ஸ்கந்தபூர்வஜன் - முருகனுக்கு அண்ணன்.

இந்த பதினாறு திருப்பெயர்களையும் வித்யாரம்பம், கல்யா ணம், கிரஹப்பிரவேசம், வெளியில் புறப்படும் சமயம், யுத்தம் மற்றும் கஷ்டம் வந்த சமயம் ஆகிய காலங்களிலும் எவனொரு வன் படிப்பானோ அல்லது கேட்பானோ அவனுக்கு இடையூறு என்பதே ஏற்படாது என்றும் கூறப்பட்டுள்ளது. இதைப் பிர மாணமாகக் கொண்டே நாம்செய்யும் விவாகம், பூஜை முதலிய எல்லாச் செயல்களிலும் மஞ்சளினால் பிள்ளையார் பிடித்து இந்த பதினாறு திருநாமங்களால் பூசித்துப் பிறகே நாம் செய்ய வேண்டியவற்றைச் செய்கிறோம். முழு முதற் கடவுளான சிவபெருமானே விநாயகருக்கு இத்தகைய முதற்பூசைச் சிறப் பினை அளித்துள்ளார் என்று கந்தபுராணங் கூறுகிறது.

வசிட்ட முனிவரது மரபில் தோன்றியவர் மாகதர் என்ற முனிவர். அவர் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்யும் போது விபுதை என்ற அசுரப் பெண்ணிடம் மயங்கி அவ் விருவரும் ஆண் யானையும் பெண் யானையுமாகிக் கூடிய பொழுது அப்பெண்ணிடம் யானை முகத்துடன் கூடிய அசுரன்

ஒருவன் பிறந்தான். கயமுகாசுரன் என்னும் பெயரும் பெற்ருன். அவன் சிவபெருமானை நோக்கிப் பல காலம் தவஞ்செய்து யாதோர் ஆயுதத்தாலும் அழியாவரமும், பிரமவிட்டுணு முதலிய தேவர்கள் எவரிடமும் தோல்வியுருது வெற்றியே பெறும் வரமும், தேவர்கள் மனிதர்கள் விலங்குகள் முதலிய எவராலும் மரணம் அடையாவரமும் தனக்கு நிகரான ஒருவன் வந்து போரிடினும் அவனது படையாலும் அழிவுரு வகையும், இவைகளுக்குட்படாது வேறு ஒரு சூழ்ச்சியால் மரணம் நேரிடினும் மீண்டும் பிறவாவரமும் மற்றும் பல வரங்களும் வேண்டிப் பெற்றனன். தான் பெற்ற வரபலத்தால் இந்திரனை உள்ளிட்ட எல்லாத் தேவர்களையும் வெற்றி கொண்டான். தென்திசையில் மதங்கபுரம் என்றொரு பட்டணத்தை நிர்மாணித்துக் கொண்டு விசித்திரகாந்தி என்ற அசுரமகளைத் திருமணஞ் செய்து கொண்டு அமரர்கள் குற்றேவல் செய்ய இனிது வாழ்ந்திருந்தனன்.

இங்ஙனம் அரசுபுரிகையில் வழக்கம் போலக் குற்றவேல் செய்யத் தம் பெண்டிருடன் அவன் முன் வந்த இந்திராதி தேவர்களைப் பார்த்து ஒன்று கூறினன்.

வைக லும்மிவண் வந்துழி நுங்கள்தம்
மொய்கொள் சென்னியில் மும்முறை தாக்கியே
கைகள் காதுறக் கால்கொடு தாழ்ந்தெழீஇச்
செய்க நம்பணி தேவர்கள் நீரென்ருன்.

"தேவர்களே! நீவிர் இனிமேல் நாள்தோறும் இங்கு வரும்பொழுது முதலில் நம் முன் வந்து உங்களது தலையில் மூன்று முறை குட்டிக்கொண்டு, இருகைகளலும் காதுகளைப் பிடித்துக்கொண்டு இருகால்களாலும் தாழ்ந்து எழுந்து வணக்கம் செய்துவிட்டுப் பிறகு உங்களுக்கிட்ட பணிகளைச் செய்வீர்களாக" என்ருன். வேறு வழியின்மையால் தேவர்களும் இவ்வாறே செய்து வருவாராயினர்.

அப்பெருச்சாளியைத் தம் வாகனமாகக் கொண்டார். அசுரன் இரத்தம் ஓடிய இடமாகிய திருச்செங்காட்டங்குடியில் சிவ லிங்கம் ஸ்தாபித்துப் பூஜை செய்தார். அக்கோயில் ''கண பதீச்சரம்'' என வழங்கப்படுகிறது.

கயமுகாசுரனுடைய கொடுமைகள் நீங்கி இன்பம்பெற்ற தேவர்கள் விநாயகப் பெருமானை வணங்கித் துதித்து, அவருக் குச் செய்யக் கூடிய கைம்மாறு ஒன்று இல்லையாகையால் இதுகாறும் கயமுகாசுரனுக்குச் செய்து வந்த ''மும்முறை தலையில் குட்டிக் கொண்டு இருகைகளால் இருகாதுகளைப் பிடித்துக் கொண்டு கால்களால் தாழ்ந்து எழுந்த'' வணக் கத்தை இனித் தேவரீருக்குச் செய்வோம் என்று கூறி அவ ரருள் பெற்று அன்று முதல் அவ்வாறே செய்து வரலாயினர். உலகத்தவர் யாவரும் அன்று முதல் விநாயகருக்கு அவ்வாறே வணக்கஞ் செய்யவும் அருள்புரிய வேண்டினர். விநாயகரும் அவ்வாறே அருள் புரிந்தார். அங்ஙனம் வணங்குவோரது இடர்களையும் களைந்து அருள் புரிந்து வருவாராயினர். தம்மை வணங்குவோரது இடர்களைக் களைந்து காப்பவர் விநாயகர் என்பதைத் திருஞானசம்பந்தப் பெருமானும் ''தனதடி வழிபடும் அவர் இடர் கடி கணபதி...'' என்று தமது திருப்பதிகத்தில் கூறியருளியுள்ளார்.

சிவஸ்வரூபமாகிய பிரணவம் யானைகளாகிக் கூடி அத னின்றும் தோன்றியதால் விநாயகர் சிவபிரானின் வேறல்லர் என்பது தெளிவாகும். விநாயகரது தோற்றம், பெருமை முதலியவைகள் கந்தபுராணம் தக்ஷ காண்டம், கயமுகன் உற்பத்திப் படலத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. விநாயக புராணம் முத்கலபுராணம் ஆகியவை விநாயகரின் உபாசனை, லீலைகள் ஆகியவற்றை விரிவாக எடுத்துரைக்கின்றன.

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொற்<br>பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்<br>ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்<br>காதலால் கூப்புவர்தங் கை.

என்று கபிலதேவ நாயனார் தமது மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலையிலும்,

மொழியின் மறைமுதலே முந்நயனத் தேறே
கழிய வருபொருளே கண்ணே—தெழிய
கலாலயனே எங்கள் கணபதியே நின்னை
அலாதையனே சூழாதென் அன்பு.

என்று அதிராவடிகள் தமது மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவையிலும்,

என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்—புன்னை
விரசுமகிழ் சோலை வியன்நாரை யூர்முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான்.

என்று நம்பியாண்டார் நம்பிகள் தாமருளிய திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலையிலும் விநாயகரைத் துதித்துள்ளனர். ஔவையார் அருளிய விநாயகர் திருவகவல், நக்கீரர் அருளிய விநாயகர் திருவகவல் ஆகியவைகளும் உள்ளன. இவையேயன்றிப் பல புராணங்களில் காப்புச் செய்யுட்கள், பல பிரபந்தங்கள் விநாயகரைப்பற்றி உள்ளன.

தமிழ் மொழியில் மட்டுமன்றிப் பல வடமொழி தோத்திர நூல்களும் விநாயகரின் பெருமையைக் கூறுகின்றன. விநாயகர் ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் மிகவும் பிரசித்தமானது. ஆதி சங்கரர் அருளிய ஸ்ரீ கணேச பஞ்சரத்னம் ஸ்ரீகணேச புஜங்கம் ஆகியவையும் நம் நாட்டில் நன்கு பயிலப்பட்டு வருகின்றன. வேத மோதுபவர்களும்,

கணானாம் த்வா கணபதிம் ஹவாமஹே
கவிம் கவீனாம் உபமஶ்ரவஸ்தமம் ।
ஜ்யேஷ்டராஜம் ப்ரம்மணாம் ப்ரம்மணஸ்பத
ஆந: ச்ருண்வன்னூதிபி: ஸீதஸாதனம் ॥

என்று விநாயகரைத் தோத்திரிக்கும் மந்திரம் கூறிய பின்னரே மற்ற வேதபாகத்தை ஓதுகின்றனர்.

நமது சைவ சமயத்தினர் மட்டுமல்லாது சமண சமயத்த வரும் விநாயக சதுர்த்தி கொண்டாடுவதாகத் தெரிகிறது. மற்றும் வைணவர்களில் சிலரும் தமது கர்மாக்களை "சுக்லாம் பரதரம்" எனத் தொடங்கும் விநாயகர் தோத்திரம் கூறியே ஆரம்பிக்கின்றனர் என்றும் அறிகிறோம்.

இத்தகைய பெருமை வாய்ந்த விநாயகப் பெருமானின் மகிமைகளையும் தோத்திரங்களையும் "விநாயகர் வணக்கம்" என்ற தலைப்பில் தொடர்ந்து வரும் ஆண்டு மலர்களில் விரிவாகப் பிரசுரிக்க விநாயகர் திருவருளை வேண்டுகின்றோம்.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவ ஜயம்

# ஹிந்தி ராமாயணத்தில் சிவஸ்தோத்ரம்

# ஸ்ரீ ருத்ராஷ்டகம்

# ॥ श्री रुद्राष्टकम् ॥

தமிழ் உரை :

சிவபக்தி பிரசாரமணி

**नमामीशमीशान निर्वाणरूपं**
**विभुं व्यापकं ब्रह्म वेदस्वरूपम् ।**
**निजं निर्गुणं निर्विकल्पं निरीहं**
**चिदाकाशमाकाशवासं भजेऽहम् ॥ १ ॥**

நமாமீஶமீஶாந நிர்வாணரூபம்
விபும் வ்யாபகம் ப்ரஹ்ம வேதஸ்வரூபம் ।
நிஜம் நிர்குணம் நிர்விகல்பம் நிரீஹம்
சிதாகாஶமாகாஶவாஸம் பஜேஹம் ॥ 1 ॥

1. எல்லோருக்கும் தலைவரும், மோக்ஷ ஸ்வரூபரும், மேலானவரும், எங்கும் வியாபித்திருப்பவரும், பிரம்மஸ்வரூபரும், வேதமே உருவானவரும், ஈசானன் என்ற பெயருடையவருமான சிவபெருமானை நான் நமஸ்காரம் செய்கின்றேன். ஸத்தியவஸ்துவும், குணங்களுக்கு அப்பாற்பட்டவரும், வேறுபாடுகள் அற்றவரும், இச்சைகள் அற்றவரும் ஞானகாய

வடிவானவரும், ஆகாயத்தை ஆடையாகவுடையவருமான ஈசனை நான் பஜிக்கின்றேன். (பஜித்தல் - ஸேவைசெய்தல், வழிபடுதல்).

निराकारमोंकारमूलं तुरीयं
गिराज्ञानगोतीतमीशं गिरीशम् ।
करालं महाकालकालं कृपालं
गुणागारसंसारपारं नतोऽहम् ।। २ ।।

நிராகாரமோங்காரமூலம் துரீயம்
கிராஜ்ஞாநகோதீதமீஶம் கிரீஶம் ।
கராலம் மஹாகாலகாலம் க்ருபாலம்
குணாகார ஸம்ஸாரபாரம் நதோஹம் ॥ 2 ॥

2. உருவமற்றவரும், பிரணவம் எனப்படும் ஓங்காரத்திற்கு மூலமானவரும், மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட நான்காவது மூர்த்தியும், வாக்கு - அறிவு - ஐம்புலன்கள் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டவரும், தலைவரும், கயிலைமலையில் வசிப்பவரும், தீயோர்க்குப் பயங்கரமானவரும், காலனாகிய யமனுக்கும் காலத்தைச்செய்பவரும், தயையுடையவரும், நற்குணங்களுக்கு இருப்பிடமானவரும், பிறப்பிறப்பென்னும் ஸம்ஸாரச் சூழலுக்கு அப்பாற்பட்டவருமான ஸ்ரீ பரமேசுவரரை நான் வணங்குகின்றேன்.

तुषाराद्रिसंकाशगौरं गभीरं
मनोभूतकोटिप्रभाश्रीशरीरम् ।
स्फुरन्मौलिकल्लोलिनी चारुगङ्गा
लसद्भालबालेन्दु कण्ठे भुजङ्गा ।। ३ ।।

துஷாராத்ரிஸங்காஸகௌரம் கபீரம்
மநோபூதகோடிப்ரபாஸ்ரீஶரீரம் ।
ஸ்புரந்மௌலிகல்லோலிநீ சாருகங்கா
லஸத்பாலபாலேந்து கண்டே புஜங்கா ॥ 3 ॥

3. பனிமலையாகிய இமயத்துக்கு ஒப்பான வெண்மை நிறமும் கம்பீரமும் உடையவரும், கோடிக்கணக்கான மன்மதர்களின் ஒளியும் அழகும் அமைந்த திருமேனியை உடையவரும், அலைகளையுடைய அழகிய கங்காநதி தலையினில் விளங்க நெற்றியில் பிறைச்சந்திரனைச்சூடிக் கழுத்தில் பாம்புடன் உள்ளவருமான (ஈசனை வணங்குகின்றேன்).

चलत्कुण्डलं शुभ्रनेत्रं विशालं
प्रसन्नाननं नीलकण्ठं दयालम् ।
मृगाधीशचर्माम्बरं मुण्डमालं
प्रियं शंकरं सर्वनाथं भजामि ॥ ४ ॥

சலத்குண்டலம் ஶுப்ரநேத்ரம் விஶாலம்
ப்ரஸந்நாநநம் நீலகண்டம் தயாலம் ।
ம்ருகாதீஶசர்மாம்பரம் முண்டமாலம்
ப்ரியம் ஶங்கரம் ஸர்வநாதம் பஜாமி ॥ 4 ॥

4. காதுகளில் அசையும் குண்டலங்களும், அழகுபொருந்திய விசாலமான திருவிழிகளுமுடைய மகிழ்ச்சி ததும்பும் திருமுகமுடையவரும் நீலகண்டரும், கருணாமூர்த்தியும், சிம்மத்தின் தோலை ஆடையாகத் தரித்தவரும், கபாலமாலை அணிந்தவரும், அனைத்துயிர்க்கும் பிரியமானவரும், உலகிற்கு நன்மையைச் செய்பவருமான ஸர்வேசுவரனை பஜிக்கின்றேன்.

प्रचण्डं प्रकृष्टं प्रगल्भं परेशं
अखण्डं अजं भानुकोटिप्रकाशम् ।

त्रयःशूलनिर्मूलनं शूलपाणिं
भजेऽहं भवानीपतिं भावगम्यम् ॥ ५ ॥

ப்ரசண்டம் ப்ரக்ருஷ்டம் ப்ரகல்பம் பரேஶம்
அகண்டம் அஜம் பாநுகோடிப்ரகாஶம் ।
த்ரய:ஶூலநிர்மூலநம் ஶூலபாணிம்
பஜேஹம் பவாநீபதிம் பாவகம்யம் ॥ 5 ॥

5. பேராற்றலுடையவரும், பரமேசுவரரும், முழுமை யானவரும், பிறப்பற்றவரும், கோடிசூர்யப் பிரகாசம் உடைய வரும், (ஆணவம், கன்மம், மாயை) என்ற மூன்று வகையான விலங்குகளை உடைத்தெறிபவரும், முத்தலைச் சூலத்தையேந் திய திருக்கரத்தையுடையவரும், மெய்யன்புடைமையால் அடையக்கூடியவரும், பவானிதேவியின் கணவருமான சிவ பெருமானைப் போற்றி வணங்குகின்றேன்.

कलातीत कल्याण कल्पान्तकारी
सदा सज्जनानन्ददाता पुरारी ।
चिदानन्दसन्दोहमोहापहारी
प्रसीद प्रसीद प्रभो मन्मथारी ॥ ६ ॥

கலாதீத கல்யாண கல்பாந்தகாரீ
ஸதா ஸஜ்ஜநாநந்ததாதா புராரீ
சிதாநந்தஸந்தோஹ மோஹாபஹாரீ
ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ மந்மதாரீ ॥ 6 ॥

6. கலைகளுக்கு அப்பாற்பட்டவரும், மங்கள வடிவின ரும், கல்பங்களுக்கு முடிவை (பிரளயத்தை)ச்செய்பவரும், எப் பொழுதும் ஸாதுக்களுக்கு ஆனந்தத்தையளிப்பவரும், முப் புரங்களை அழித்தவரும், சச்சிதானந்தஸ்வரூபரும், அஞ்

ஞானத்தை அகற்றுபவரும், மன்மதனை எரித்தவருமான பிரபுவே, (எங்களிடம்) மகிழ்ச்சியுடன் அருள்புரிவீராக, மகிழ்ச்சியுடன் அருள்புரிவீராக.

न यावद् उमानाथ पादारविन्दं
भजन्तीह लोके परे वा नराणाम् ।
न तावत् सुखं शान्ति सन्तापनाशं
प्रसीद प्रभो सर्वभूताधिवास ।। ७ ।।

ந யாவத் உமாநாத பாதாரவிந்தம்
பஜந்தீஹ லோகே பரே வா நராணும் ।
ந தாவத் ஸுகம் ஶாந்தி ஸந்தாபநாஶம்
ப்ரஸீத ப்ரபோ ஸர்வபூதாதிவாஸ ‖ 7 ।।

7. உமாநாதனே ! எதுவரையில் உமது திருவடித்தாமரைகளை மக்கள் தொழவில்லையோ, அதுவரையில் இந்த உலகத்திலோ அல்லது பரலோகத்திலோ அவர்கள் சுகத்தையோ அமைதியையோ அல்லது துக்கநாசத்தையோ அடையமாட்டார்கள். அனைத்து உயிர்களின் ஹ்ருதயங்களில் வாஸம் செய்யும் பிரபுவே ! எங்கட்கு அருள் செய்வீராக.

न जानामि योगं जपं नैव पूजां
नतोऽहं सदा सर्वदा शम्भु तुभ्यम् ।
जराजन्मदुःखौघतातप्यमानं
प्रभो पाहि आपन्नं मामीश शम्भो ।। ८ ।।

ந ஜாநாமி யோகம் ஜபம் நைவ பூஜாம்
நதோஹம் ஸதா ஸர்வதா ஶம்பு துப்யம் ।

ஜரா-ஜந்ம-து:கௌகதாதப்யமாநம்
ப்ரபோ பாஹி ஆபந்நம் மாமீஶ ஶம்போ ॥8॥

8. நான் யோகம் அறியேன்; ஜபம் பூஜை இவைகளையும் நானறியேன். எப்பொழுதும் சம்புவான உம்மையே நமஸ்காரம் செய்கிறேன். பிரபோ, சம்போ, ஈசா,முதுமை - பிறப்பு (இறப்பு) ஆகிய துன்பங்களால் வெந்து தவித்துக் கொண்டிருக்கும் துக்கமடைந்தவனான என்னை (அவைகளினின்றும்) காப்பாற்றியருள்வீராக.

रुद्राष्टकमिदं प्रोक्तं विप्रेण हरतुष्टये ।
ये पठन्ति नरा भक्त्या तेषां शम्भुः प्रसीदति ॥

ருத்ராஷ்டகமிதம் ப்ரோக்தம் விப்ரேண ஹரதுஷ்டயே।
யே படந்தி நரா பக்த்யா தேஷாம் ஶம்பு: ப்ரஸீததி ॥

9. சிவபெருமானின் திருப்திக்காக பிராமணர் மூலமாகக் கூறப்பட்ட இந்த ருத்ராஷ்டகம் என்ற ஸ்தோத்ரத்தை எவர்கள் பக்தியுடன் படிக்கின்றார்களோ அவர்களிடம் சம்புவான பரமேசுவரன் மகிழ்ச்சியடைகின்றார்.

இவ்வாறுதுளசி தாஸர் இயற்றிய ராமசரித மானஸ் என்ற ஹிந்திராமாயணத்தில் உத்தர காண்டத்தில் உள்ள ஸ்ரீ ருத்ராஷ்டகம் என்னும் சிவஸ்துதி தமிழ் உரையுடன் முற்றிற்று.

சிவம்.



சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# சிவநாமாவல்யஷ்டகம்

# ॥ शिवनामावल्यष्टकम् ॥

ஸ்ரீ ஆதிசங்கரர் அருளியது

தமிழ் உரை :
சிவபக்தி பிரசாரமணி ஆங்கீரஸ சர்மா

हे चन्द्रचूड मदनान्तक शूलपाणे
स्थाणो गिरीश गिरिजेश महेश शम्भो ।
भूतेश भीतभयसूदन मामनाथं
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ १ ॥

ஹே சந்த்ரசூட மதநாந்தக சூலபாணே
ஸ்தாணோ கிரீச கிரிஜேச மஹேச சம்போ ।
பூதேச பீதபயஸூதன மாமநாதம்
ஸம்ஸார துக்ககஹநாஜ்ஜகதீச ரக்ஷ ॥ 1 ॥

1. சந்திரனைத் தலையில் தரித்தவரே, மன்மதனுக்கு முடிவைச் செய்தவரே, சூலாயுதத்தை ஏந்திய திருக்கரத்தை உடையவரே, அசைவற்றவரே, கயிலையங்கிரியில் வசிப்பவரே, மலைமகள் மணாளனே, மஹேசரே, சுகங்களுக்கெல்லாம் உறைவிடமே, பூதங்களுக்கெல்லாம் தலைவரே, பயத்தைப் போக்குபவரே, நாதனற்றவனான என்னை பிறப்பிறப்பென்னும் தாங்க முடியாத துக்கத்தினின்றும், ஹே ஜகதீச! காப்பாற்ற வேண்டும்.

हे पार्वतीहृदय वल्लभ चन्द्रमौले
भूताधिप प्रमथनाथ गिरीशचाप ।
हे वामदेव भव रुद्र पिनाकपाणे
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ २ ॥

ஹே பார்வதீ ஹ்ருதயவல்லப சந்த்ரமௌலே
பூதாதிப ப்ரமதநாத் கிரீசசாப ।
ஹே வாமதேவ பவ ருத்ர பிநாகபாணே
ஸம்ஸார துக்ககஹநாஜ்ஜகதீச ரக்ஷ ॥ 2 ॥

2. பார்வதிதேவியின் உள்ளத்திற்குப் பிரியமானவரே, சந்திரனைத் தலையில்தரித்தவரே, பூதகணங்களுக்கும் பிரமத கணங்களுக்கும் தலைவரே, மஹாமேருவை வில்லாகக்கொண்ட வரே, அழகுவாய்ந்த தேவனே, என்றும் எங்கும் ஸத் சொரூபி யாய் விளங்குபவரே, துக்கத்தையும் அதன் காரணத்தையும் போக்குபவரே, பிநாகமென்னும் வில்லையேந்திய திருக் கரத்தையுடையவரே, அனைத்து உலகங்களுக்கும் தலைவரே, ஸம்ஸாரமென்னும் தாங்க இயலாத துக்கத்தினின்றும் என்னைக் காத்தருள்வீராக.

हे नीलकण्ठ वृषभध्वज पञ्चवक्त्र
लोकेश शेषवलय प्रमथेश शर्व ।
हे धूर्जटे पशुपते गिरिजापते मां
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ३ ॥

ஹே நீலகண்ட வ்ருஷபத்வஜ பஞ்சவக்த்ர
லோகேச சேஷவலய ப்ரமதேச சர்வ ।
ஹே தூர்ஜடே பசுபதே கிரிஜாபதேமாம்
ஸம்ஸார துக்ககஹநாஜ்ஜகதீச ரக்ஷ ॥ 3 ॥

3. நீலகண்டரே, காளைமாட்டினைக் கொடியில் உடையவரே, ஐம்முகப் பெருமானே, உலகத்திற்குத் தலைவனே, ஆதிசேஷனைத் தோள்வளையாகத்தரித்தவரே, பிரமத கணங்களுக்குத்தலைவரே, பாவங்களைப் போக்குபவரே, பாரமான சடைமுடியை உடையவரே, பசுபதியே, கிரிஜா என்ற பார்வதியின் பதியே, ஸம்ஸாரமென்னும் பெரிய துக்கத்தினின்றும் ஹே ஜகதீச ! என்னைக் காத்தருள்வீராக.

हे विश्वनाथ शिव शङ्कर देवदेव
गङ्गाधर प्रमथनायक नन्दिकेश ।
बाणेश्वरान्धकरिपो हर लोकनाथ
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ।। ४ ।।

ஹே விச்வநாத சிவசங்கர தேவதேவ
கங்காதர ப்ரமதநாயக நந்திகேச ।
பாணேச்வராந்தகரிபோ ஹர லோகநாத
ஸம்ஸார துக்ககஹநாஜ்ஜகதீச ரக்ஷ ।। 4 ।।

4. அகில உலகத்துக்கும் தலைவரே, மங்களமூர்த்தியே, சுகத்தைச் செய்பவரே, தேவர்களுக்கு எல்லாம் மேலான தேவனே, கங்காநதியைச் சிரத்தில் தரித்தவரே, பிரமத கணங்களின் தலைவனே, நந்திக்கு ஈசனே, பாணனுக்கு ஈச்வரரே, அந்தகன் என்ற அசுரனையழித்தவரே, ஸம்ஹாரமூர்த்தியே, உலகநாதரே, ஸம்ஸாரமென்னும் அதி துக்கத்தினின்றும் என்னைக் காத்தருள்வீராக.

वाराणसीपुरपते मणिकर्णिकेश
वीरेश दक्षमखकाल विभो गणेश ।
सर्वज्ञ सर्वहृदयैकनिवास नाथ
संसारदुःखगहनाज्जगदीश रक्ष ।। ५ ।।

வாராணஸீ புரபதே மணிகர்ணிகேச
வீரேச தக்ஷமககால விபோ கணேச ।
ஸர்வக்ஞ ஸர்வஹ்ருதயைக நிவாஸ நாத
ஸம்ஸார துக்ககஹனாஜ்ஜகதீச ரக்ஷ ॥ 5 ॥

5. வாராணஸிபுரம் என்னும் காசிமாநகரின் தலைவரே, மணிகர்ணிகா கட்டத்தில் எழுந்தருளியுள்ள ஈசனே, வீரர்கட்கு எல்லாம் ஈசனே, தக்ஷனின் யாகத்துக்கு முடிவைச் செய்தவரே, எங்கும் நிறைந்தவரே, சிவகணங்களின் தலைவரே, முற்றறிவுடையவரே, எல்லா உயிர்களின் ஹிருதயத்தில் வசிப்பவரே, ஹே ஜகதீச! ஸம்ஸாரமென்னும் தாங்கமுடியாத துக்கத்தினின்றும் என்னைக் காத்தருள வேணும்.

श्रीमन्महेश्वर कृपामय हे दयालो
हे व्योमकेश शितिकण्ठ गणाधिनाथ ।
भस्माङ्गराग नृकपालकलापमाल
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ।। ६ ।।

ஸ்ரீமன்மஹேச்வர க்ருபாமய ஹே தயாலோ
ஹே வ்யோமகேச சிதிகண்ட கணாதிநாத ।
பஸ்மாங்கராக ந்ருகபாலகலாபமால
ஸம்ஸார துக்ககஹனாஜ்ஜகதீச ரக்ஷ ॥ 6 ॥

6. செல்வம் நிறைந்த மஹேச்வரனே, கருணையின் வடிவமே, தயாளுவே, ஆகாயத்தையே கேசமாக உடையவரே, விஷம் தங்கின இடம்தவிர மற்றபாகம் வெண்மையான கழுத்தையுடையவரே, கணங்களின் நாதரே, பஸ்மா என்னும் விபூதியை உடலில் அணிந்தவரே, மண்டையோடுகளை வரிசையாக மாலைபோல் அணிந்தவரே, என்னை ஸம்ஸாரமென்னும் பெரிய துக்கத்தினின்றும் ஹே! ஜகதீச, காத்தருளவேண்டும்,

कैलाशशैलविनिवास वृषाकपे हे
मृत्युञ्जय त्रिनयन त्रिजगन्निवास ।
नारायणप्रिय मदापह शक्तिनाथ
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ७ ॥

கைலாசசைலவிநிவாஸ வ்ருஷாகபே ஹே
ம்ருத்யுஞ்ஜய த்ரிநயன த்ரிஜகந்நிவாஸ ।
நாராயணப்ரிய மதாபஹ சக்திநாத
ஸம்ஸார துக்ககஹநாஜ் ஜகதீசரக்ஷ ॥ 7 ॥

7. திருக்கயிலாய மலையில் வசிப்பவரே, வ்ருஷபத்தின் மீது அமர்ந்தவரே, மரணதேவதையான இயமனை வென்றவரே, முக்கண்ணரே, மூவுலகத்திலும் வசிப்பவரே, நாராயணனிடம் பிரியம் உள்ளவரே, துஷ்டர்களின் கொழுப்பை அழிப்பவரே, பராசக்தியின் கணவரே, என்னை ஸம்ஸாரமாகிய பயங்கர துக்கத்தினின்றும், ஹே ! ஜகதீச, காத்தருளவேண்டும்.

विश्वेश विश्वभवनाशक विश्वरूप
विश्वात्मक त्रिभुवनैक गुणाधिकेश ।
हे विश्वनाथ करुणामय दीनबंधो
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ८ ॥

விச்வேச விச்வபவநாசக விச்வரூப
விச்வாத்மக த்ரிபுவனைககுணாதிகேச ।
ஹே விச்வநாத கருணாமய தீனபந்தோ
ஸம்ஸார துக்ககஹநாஜ்ஜகதீச ரக்ஷ ॥ 8 ॥

8. உலகனைத்துக்கும் தலைவரே, இவ்வுலகில் பிறவிப்பிணியைப் போக்கும் தெய்வமே, அனைத்து உலகங்களையும்

ஊடுருவிப் பேருருவங் கொண்டவரே, உலகத்தையே ஆத்மா வாகக் கொண்டவரே, மூவுலகிலும் மிக நல்ல குணமுடைய வரே! ஹே விச்வநாத, கருணையே உருவானவரே, ஏழைகளின் பந்துவே, ஸம்ஸாரமென்னும் பயங்கர துன்பத்தினின்றும் ஹே ! ஜகதீச, என்னைக் காத்தருள வேண்டும்.

ஸ்ரீமத் ஆதிசங்கரர் அருளியதும், சிவநாமங்களால் தொடுக் கப்பட்ட மாலை போன்றதுமான சிவநாமாவல்யஷ்டகம் தமிழ் உரையுடன் முற்றிற்று.

சிவம்.

---

## ஸ்ரீகிருஷ்ணர் ருத்ராத்யாய ஜபம் செய்தது

அத்ர பூர்வம் ஹ்ருஷீகேசோ விச்வாத்மா தேவகீஸுத : ।
உவாஸ வத்ஸரம் க்ருஷ்ண: ஸதா பாசுபதவ்ரத : ॥

பஸ்மோத்தூலித ஸர்வாங்கோ ருத்ராத்யயன தத்பர : ।
ஆராதயன் ஹரி: சம்பும் க்ருத்வா பாசுபதவ்ரதம் ॥

(கூர்ம புராணம்)

தேவகியின் புத்திரனான ஸ்ரீகிருஷ்ணன் எப்பொழுதும் பாசுபத விரதத்துடனும் உடல் முழுமையும் விபூதி தாரணம் செய்து கொண்டும், ஸ்ரீருத்ராத்யயனத்தில் மிகவும் ஈடுபட்ட வராகவும் ஸ்ரீபரமேசுவரனைப் பூஜித்துக் கொண்டு இவ்விடத் தில் ஒரு வருட காலம் வசித்தார்.

ஏவம் ஸ்துத்வா மஹாதேவம் தண்டவத் ப்ரணிபத்ய ச ।
ஜஜாப ருத்ரம் பகவான் கோடிவாரம் ஜலே ஸ்தித : ॥

(லிங்க புராணம்)

இவ்வாறு மஹாதேவனைத் துதித்து ஒரு தண்டம் (தடி) பூமியில் விழுவது போல விழுந்து ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து ஸ்ரீகிருஷ்ணன் தண்ணீரில் நின்று கொண்டு கோடி முறை ஸ்ரீருத்ரத்தை ஜபம் செய்தார்.

உ
சிவமயம்

# வடமொழி சுலோகங்களில் சிவமஹிமையும் அடியார் மஹிமையும்

தொகுப்பும் தமிழ் விளக்கமும் :
தர்மப்ரவசனரத்னம், உத்தம உபன்யாஸக சக்கரவர்த்தி
பிரம்மஸ்ரீ மஞ்சக்குடி ராஜகோபால சாஸ்திரிகள்

शैवं विना नान्यदिहास्ति दैवतं
तूलोपमेषु अन्यमतेष्विदं महत् ।
शैवं मतं चोत्तममित्युपास्यतां
मन्त्रेषु पञ्चाक्षरमन्त्र उत्तमः ॥ १ ॥

சைவம் விநா நாந்யதிஹாஸ்தி தைவதம்
தூலோபமேஷு அன்யமதேஷ்விதம் மஹத் ।
சைவம் மதம் சோத்தமமித்யுபாஸ்யதாம்
மந்த்ரேஷு பஞ்சாக்ஷர மந்த்ர உத்தம: ॥ 1 ॥

1. சிவத்தைத் தவிர இந்த உலகில் வேறு தெய்வம் இல்லை. சிவமதத்தை வேறு மதங்கள் நோக்கும்போது அவை தங்களை இலவம் பஞ்சுக்கு ஒப்பான நிலையை அடைந்ததாக எண்ணி சிவமதத்தில் ஒடுங்கும். எனவே சிவமதம் தான் உத்தமம். மந்திரங்களில் பஞ்சாக்ஷரம்தான் உத்தமம். மற்ற எந்த மதமும் இலவம் பஞ்சுக்குச் சமானமாகும். (சிவமதமோ மேருமலை போன்றதாகும்).

उपास्य एकोधिपतिः पशूनां
तदीय भक्ताश्च समर्चनीयः ।
प्रीतः शिवः भक्त सपर्ययास्यात्
शिवप्रसादेन शुचं तरन्ति ।। २ ।।

உபாஸ்ய ஏகோதிபதி: பசூனும்
ததிய பக்தாச்ச ஸமர்ச்சநீய: ।
ப்ரீத: சிவ: பக்த ஸபர்யயாஸ்யாத்
சிவப்ரஸாதேன சுசம் தரந்தி ॥ 2 ॥

2. இந்த உலகில் உபாஸிக்க வேண்டிய தெய்வம் ஒன்றே தான். அவர்தான் ஜகத்ரக்ஷகர். அவரிடம் பக்தி செய்யும் உத்தமர்களின் உள்ளத்தில் அவர் இருப்பதால் சிவபக்தர்களை நாம் பூஜித்தால் சிவ பக்தர்களையும் சிவ பெருமானையும் பூஜித்த பலன் கிடைக்கும். சிவ பக்தர்களின் மனம் ஸந்தோஷப்பட்டால் சிவபெருமான் பரமப்ரீதி அடைவார். அதனுல் சிவப்ரஸாதம் கிடைக்கும். சிவ ப்ரஸாதத்தால் ஸகலமான துன்பங்கள், துக்கம், தரித்திரம் யாவும் விலகும். க்ஷேமம் அடையலாம்.

येन केनापि नियमात् पूजयन्ति महेश्वरम् ।
ते धन्याः शंकरः तेषां अचिरेण प्रसीदति ।। ३ ।।

யேன கேனுபி நியமாத் பூஜயந்தி மஹேச்வரம் ।
தே தன்யா: சங்கர: தேஷாம் அசிரேண ப்ரஸீததி ॥ 3 ॥

3. ஏதேனும் ஒரு நியமப்படி (அதாவது சிவதர்சனம், சிவபூஜை செய்த பிறகே ஜலம் அருந்துவது, சிவபூஜையில் வில்வம் வைத்துப் பூஜித்த பிறகு தான் சாப்பிடுவது இவை

போன்ற ஏதேனும் நியமங்கள்) சிவபூஜை செய்பவர்களே தன்யர்களாவார்கள். அவர்களிடம் சங்கரர் விரைவில் மகிழ்ச்சியடைந்து அருள் பாலிக்கிறார். (அவர்கள் சீக்கிரம் சிவப்ரஸாதம் பெற்று க்ஷேமம் அடைவார்கள்)

दुर्लभा शांकरी भक्तिः शिवभक्ताश्च दुर्लभाः ।
दुर्लभं भुवि जन्तूनां तन्मनोरथ पूरणम् ॥ ४ ॥

துர்லபா சாங்கரீ பக்தி; சிவபக்தாச்ச துர்லபா: ।
துர்லபம் புவி ஜந்தூநாம் தன்மனோரத பூரணம் ॥ 4 ॥

4. இந்த உலகில் மனிதனாகப் பிறப்பதே துர்லபம். அதிலும் அறிவு படைத்து அவ்வறிவினால் சங்கர பக்தி வருவது துர்லபம். இவ்வுலகில் சிவ பக்தர்களைக் காண பேரவாக் கொள்ள வேணும். ஏன்? சிவபக்தர்கள் கிடைக்கமாட்டார்கள். அவர்களின் தரிசனம் சிவ தரிசனம் போனறதே. நமக்கு அந்த பக்தி வருவதும் அரிதே. அவர்கள் மனதை அறிந்து பூஜித்தால் க்ஷேமம் அடைந்தே தீருவோம்.

शिरसा शिवभक्तानां पादांबुजरजःकणान् ।
वन्दामहे वयं नित्यं वासना ध्वान्त भास्करान् ॥

சிரஸா சிவபக்தானாம் பாதாம்புஜ ரஜ: கணான் ।
வந்தாமஹே வயம் நித்யம் வாஸனா த்வாந்த
பாஸ்கரான் ॥ 5 ॥

5. சிரஸ்ஸினால் சிவ பக்தர்களின் பாத தூளியை தினம் வணங்கி வருபவர்களுக்கு கெட்டவாஸனையினால் வரும் பாவங்களை இருளைச் சூரிய ஒளி விரட்டுவது போலப் போக்கி விடும். எனவே நாமும் தினமும் சிவ பக்தர்களின் பாத தூளியை வணங்குவோம்.

भिन्तन्ति शैलान् उदधीन् पिबन्ति
व्यत्यासयन्ति क्षितिमन्तरिक्षम् ।
तृणीकृत ब्रह्मपुरन्दराणां
किं दुष्करं शंकरकिंकराणाम् ॥ ६ ॥

பிந்தந்தி சைலான் உததீன் பிபந்தி
வ்யத்யாஸயந்தி க்ஷிதிமந்தரிக்ஷம் ।
த்ருணீக்ருத ப்ரஹ்ம புரந்தராணும்
கிம் துஷ்கரம் சங்கர கிங்கராணும் ॥

6. சிவ பக்தர்கள் மலையைத் தூளாக்குவார்கள். சமுத்திர நீரைக் குடித்து விடுவார்கள். பூமியையும் ஆகாயத்தையும் மாற்றி அமைப்பார்கள். பிரம்ம விஷ்ணு இந்திர பதங்கள் சிவபக்தர்களுக்குத் துரும்புக்குச் சமானம். எனவே சிவ பக்தர்களால் முடியாதது என்ன இருக்கிறது?

சிவம்

## உருத்திரன்—பெயர் விளக்கம்

"இன்னலங் கடலுட்பட்டோர் யாரையும் எடுக்கும் நீரால்
உன்னரும் பரம் மூர்த்தி உருத்திரன் எனும் பேர் பெற்ருன்".

(இதன் பொருள்) துன்பக் கடலில் ஆழ்ந்தவர்கள் யாவராயினும் அவர்களை அதனின்றும் எடுத்துக் காப்பாற்றும் தன்மையினுல், மனதினுல் நினைத்தற்கும் அரிய பெருமை உடைய சிவபெருமான் உருத்திரன் என்ற பெயரைப் பெற்ருன். கந்த புராணம் தக்ஷகாண்டம் ததீசிப் படலம் 46-ம் பாடலில் ததீசி முனிவர் தக்ஷனுக்குக் கூறிய அறிவுரையாக இவ் விளக்கம் கூறப்பட்டுள்ளது.

—பதிப்பாசிரியர்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# சிவகிருபாகடாக்ஷம்

தர்மப்பிரவசனரத்னம், உத்தம உபன்யாசக சக்கரவர்த்தி

மஞ்சக்குடி K. ராஜகோபால சாஸ்திரிகள்

நாம் இவ்வுலகில் மானிடனுகப் பிறக்கப் பெரும் புண்ணியம் செய்திருக்கிரேம். "என்ன புண்ணியம் செய்தனே" என்பது அடியார்களின் அமுதமொழி. எனவே புண்ணிய பூமியில் பிறந்த நாம் பெறவேண்டியது "சிவாமிருத கிருபா கடாக்ஷம்" தான். இதனைப் பெற்ருல் தான் எடுத்த பிறவி புண்ணியப் பிறவியாகும். எங்கு பிறந்தாலும், எந்த நிலையில் இருந்தாலும், எத்தொழிலைச் செய்தாலும் பெறவேண்டியது சிவகிருபா கடாக்ஷம் ஆகும். அதற்கு உபாயம் சிவபக்தி ஒன்றேதான் உள்ளது. இதைப் புரிந்துக் கொள்ள மஹாஸ்காந்தத்தில் உள்ளது ஒரு இதிஹாஸம்.

காச்மீரதேசத்தை ஆண்டு வந்த பத்ரஸேனன் என்ற மன்னனுக்கு தர்மசேனன் என்று ஒரு புத்திரன் பிறந்தான். அந்த மன்னனுக்குப் பக்தனுன ஒரு மந்திரி இருந்தான். அவனுக்கும் ஒரு மகன் பிறந்தான். இரு குழந்தைகளும் சிறு குழந்தைப் பருவம் முதல் விபூதியை உடல் பூராவும் பூசியும் ருத்ராக்ஷத்தை தலையிலிருந்து உடல் பூராவும் ஆபரணமாகப் பூட்டியும் வாக்கில் சிவநாமம் பேசியும் வந்தார்கள். "தௌததா ஸர்வ காத்ரேஷு ருத்ராக்ஷ க்ருத பூஷணௌ". இப்படி அரசன், மந்திரி இவர்களுடைய இரு புத்திரர்களும் சிவபக்தியில் திளைத்து அதனுலேயே வளர்ந்து அழகும் தேஜஸ் என்ற ஒளியும் வீசும்படிப் பிரகாசித்தார்கள். மன்னனுக்கு இது

ஒரு மர்மமாகவே இருந்தது. குழந்தைகள் பிறந்து அறிவு ஏற்படும் முன்னரே விபூதி ருத்ராக்ஷதாரணமும் சிவநாமோச்சாரணமும் எப்படி வந்தது என்பது கேள்விக் குறியாகவே இருந்தது.

ஒரு நாள் அத்ரி என்ற முனிவர் அரசனைக் காண வந்தார். அரசனும் மஹரிஷியை முறைப்படி பூசித்து இந்தக் குழந்தைகளுக்கு சிவபக்தி பண்ணுவது எப்படி இந்த அதிபால்யத்திலேயே வந்தது என்று அதன் காரணத்தை வினவினன். முனிவர் பெருமானும் இதைச் சொல்லவே வந்தார் அல்லவா? எனவே ஆனந்த நிலையிலிருந்து அரசனுக்கு அருள் பாலித்து பூர்வஜன்ம விருத்தாந்தத்தைக் கூறியருளினர்.

நந்தி கிராமம் என்ற ஊரில் மஹாநந்தா என்று ஒரு பெண் நாட்டியம் பயின்று அதனுல் சிவபெருமானை ஸந்தோஷப்படுத்தவேணும் என்றும் சிவபூஜையில் பேரன்பும், சிவ நாமத்திலும் சிவகதையிலும் மிகவும் ஆசையும் வைத்து சிவஸந்நிதியில் சிவதாண்டவத்தைப் போலவே அற்புத நாட்டியம் ஆடி வந்தாள். அவளுக்கு ஒரு சிறு ஸந்தேஹம் வந்தது. நம் நாட்டியத்தில் பரமேச்வரன் ஸந்தோஷப்படுவாரா என்று தோன்றியது. அதற்குப் பரிஹாரமாக ஆலோசித்து ஒரு கோழி ஒரு குரங்கு இரண்டையும் அன்புடன் வளர்த்து அதற்கு நாட்டியம் பழக்கி வைத்தாள். அவை இரண்டும் நன்ருகவே நாட்டியம் பழகி ஆடத் தொடங்கின, அவைகளுக்கு விபூதியைப் பூசி ருத்ராக்ஷத்தை அணிவித்து நடனம் செய்ய விடுத்தாள். அது அவளுக்கே பரமானந்தமாக இருந்தது. சிவபெருமான் நிச்சயம் ஸந்தோஷப்படுவார் என்று எண்ணினுள். குரங்கும் கைகளால் தாளம் போட்டுக் கோழியுடன் நடனம் ஆடும். மஹாநந்தா பாடிக் கொண்டிருப்பாள். ஒரு நாள் சிவாலயத்தில் கோழி குரங்கு இரண்டும் ஆடப் பரவசமாக மஹாநந்தா பாடிக் கொண்டிருக்கும்போது கோவில் உள்ளிருந்து ஒரு பெரியவர் கையில்

கரபூஷணமாக ஒரு வளையல் போல மாணிக்கக்கற்களால் செய்த சிவலிங்கம் பதிக்கப்பட்டு கையில் அழகாகத் தரித்திருந்தார். மஹாநந்தா அவரைப் பார்த்ததும் அவரிடம் ஒரு பற்று ஏற்பட்டது, அவரிடம் சென்று "ஸ்வாமி! உங்கள் கையை அலங்கரிக்கும் ரத்னலிங்கத்தை எனக்கு அளிக்க வேண்டும்" என்று வேண்டினாள். அந்தப் பெரியவரோ "நீ எனக்கு மனைவியானால் கொடுக்க முடியும்" என்றார். இந்தப் பெண்ணுக்கு அது இஷ்டம் இல்லையென்றாலும் அந்த ரத்ன லிங்கத்தை எப்போதும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற ஆசையினால் அந்த சிவபக்தியின் முதிர்ந்த நிலையில் அவரிடம், "பெரியவரே! இந்த ரத்ன கசிதமான கரபூஷண வடிவ சிவலிங்கத்தைத் தருவதானால் நான் உங்களுக்கு மூன்று நாட்கள் மனைவியாக இருப்பேன். மூன்று நாட்களும் உத்தம பத்னிக்குள்ள ஸகல தர்மத்தையும் அனுஷ்டிப்பேன்" என்று அவருடைய ஹிருதயத்தைத் தொட்டுச் சொன்னாள். அந்தப் பெரியவரும் ஒப்புக்கொண்டு அந்த ரத்னலிங்கத்தைக் கொடுத்தார்.

அதை வாங்கிக் கொண்டு அவரைத் தனது வீட்டுக்கு அழைத்துவந்து முறையாகக் கணவன் மனைவியானார்கள். இரண்டு நாட்கள் ஆனதும் மூன்றாவது நாள் அந்த ரத்னலிங்கத்தை நாட்டிய சாலையில் வைத்துக் கொண்டு கோழிக்கும் குரங்குக்கும் நாட்டியம் கற்பிக்கும்போது திடீரென்று நாட்டிய சாலை நெருப்புப்பற்றிக் கொண்டு எரிந்தது, கோழியும் குரங்கும் எங்கோ ஓடிவிட்டன. இவளும் நெருப்பைக்கண்டு பயந்து ஓடினாள். நாட்டியசாலை எரியும் போது அந்தப் பெண்ணுக்கு இரண்டு நாட்களாகக் கணவராக இருந்த பெரியவர் "பெண்ணே ! லிங்கம் எங்கே ? " என்று கேட்டார். நாட்டிய சாலையின் தூண்களுடன் அந்த லிங்கமும் எரிகிறது என்ற அந்தப் பெண் பதில் கூறினாள். அதைக்கேட்ட பெரியவர் ஓ வென்று அலறி இனி நான் உயிருடன் இருக்கமாட்டேன். லிங்கத்தை அநியாயமாகப் பறிகொடுத்து விட்டேனே என்று கதறிக் கொண்டே அந்த நெருப்பில் விழுந்து தன் உயிரைப்

போக்கிக் கொண்டார். இதைப் பார்த்த மஹாநந்தா "நான் அவர் மனைவியாகி இன்று மூன்ருவது நாள். ஆதலால் நானும் அவருடன் போகவேண்டும்" என்று கூறி, அவர் விழுந்த நெருப்பிலேயே தானும் விழுந்தாள்.

முன் விழுந்த பெரியவர் எரிந்தது போல் காணப்பட்டவர் நெருப்பிலிருந்து எழுந்து கங்கை, ஜடை, நெற்றிக்கண் மான் மழு சூலம் ஏந்தி விபூதி ருத்ராக்ஷத்துடன் பரமேச்வரனுகக் காக்ஷியளித்து அந்த மஹாநந்தா என்ற பெண்ணைத் தூக்கி யெடுத்து பரமகருணையுடன் கிருபா கடாக்ஷத்துடன் கூறினுர். "உனது ஸத்யம், தைரியம், தர்மம், பக்தி என்னிடத்தில் அசைக்க முடியாத நிலையில் இருப்பதைப் பார்க்கவே உனது ஸமீபம் இருக்கவேண்டுமென்று எண்ணங் கொண்டு மனித உருவில் வந்தேன். பெண்ணே! உனக்கு வேண்டிய வரங் களைக் கேட்பாயாக" என்ருர். பிரத்யக்ஷமாகப் பரமேச்வர னைத் தரிசித்த ஆனந்த பரவசநிலையில் "சம்போ" என்று கதறி உங்களது கிருபா கடாக்ஷம் வேண்டும் என்று அருமை யான ஸ்தோத்ரம் செய்தாள்.

विश्वेश विश्व विलय स्थिति जन्महेतो
विश्वैकवन्द्य शिवशाश्वत विश्वरूप ।
विध्वस्तकाल विपरीत गुणावभास
श्रीमन्महेश मयिधेहि कृपाकटाक्षम् ।। १ ।।

शंभो शशांक कृतशेखर शान्तमूर्ते
गंगाधरामरवरार्चित पादपद्म ।
नागेन्द्रभूषण नगेन्द्र निकेतनेश
भक्तार्तिहन् मयि निधेहि कृपाकटाक्षम् ।।२

श्रीविश्वनाथ करुणाकर शूलपाणे
भूतेशभर्ग भुवनत्रय गीतकीर्ते ।
श्रीनीलकण्ठ मदनान्तक विश्वमूर्ते
गौरीपतेमयिनिधेहि कृपाकटाक्षम् ॥ ३ ॥

विघ्नेशतात विधिपूजित विश्वमूर्ते
विश्वालयामित कृपाबल विश्वनेत्र ।
विश्वाधिकामल विशाल विलोकनेन
शंभोविधेहि शिवामृतकृपाकटाक्षम् ॥ ४ ॥

मायामयं हि सकलं परिदृश्यमानं
मोहात्मकं जगदिदं महदिन्द्रजालम् ।
तेनतप्तसुखदुःखविमोहिते मयि
स्वामिन् विधेहि तवदेव कृपाकटाक्षम् ॥ ५

शैवामृतं सकल देवगणाभिवन्द्यं
शैवानुरक्त मतिमानसतुष्टिहेतुम् ।
याचेहमद्य करुणारस कामधेनो
शंभो विधेहिमयि देवकृपाकटाक्षम् ॥ ६ ॥

देवादिदेव भुवनत्रय रक्षकास्मान्
रक्षां कुरुत्वमतिपाप भयार्तिभीतान् ।
शंभो गिरीश गिरिजापति भक्तपाल
दयां कुरुष्व शिव देहि कृपाकटाक्षम् ॥७॥

सदाशिव कटाक्षं भक्त भाग्यो दयार्द्रं
सुधा किरणपूर्णं तत् कटाक्षं भवस्य ।
शिवा शिवकटाक्षं दीनदीनेह्यनाथे
मयि क्षिप शिवामृत करुणाकृपाक्षम् ॥८॥

शिवाकटाक्षं कृपाकटाक्षं
शिवामृतकरुणा कटाक्षम् ।
हृदयेन भक्त्या नरास्स्तुवन्तिहि
आप्नोति सिद्धंचकृपाकटाक्षम् ॥ ९ ॥

1. விச்வேச விச்வவிலய ஸ்திதி ஜன்மஹேதோ
விச்வைக வந்த்ய சிவ சாஸ்வத விச்வரூப I
வித்வஸ்தகால விபரீத குணவபாஸ
ஸ்ரீமன் மஹேச மயிதேஹி க்ருபாகடாக்ஷம் II

1. உலகத்துக்கு ஈச்வரனுகவும், உலகத்தை அழித்துப் படைத்து ரக்ஷித்தும், உலகத்தாரால் பூஜிக்கப்பட்டும், சாஸ்வதமான விச்வரூப மூர்த்தியாகவும், யமனை ஸம்ஹரித்தும், உலகத்தை அனுசரிக்காமல் தனிமையாகவும் இருக்கும் மஹேச்வரனே! உங்களது கடைக்கண் பார்வையை என்னிடம் வைக்கவேண்டும்.

2. சம்போ சசாங்க க்ருதசேகர சாந்தமூர்த்தே
கங்காதராமரவரார்ச்சித பாதபத்ம I
நாகேந்த்ரபூஷண நகேந்த்ர நிகேதனேச
பக்தார்த்திஹன் மயிநிதேஹி க்ருபாகடாக்ஷம் II

2. ஸுகத்தைக் கொடுப்பவரே! சந்திரனை சிரஸ்ஸில் தரித்தவரே! சாந்தமூர்த்தியே! கங்கையை ஜடையில் தரித்தவரே! தேவராஜனுல் பூஜிக்கப்பட்ட பாதம் உடையவரே! ஸர்ப்பமாலை தரித்தவரே! மலைகளுக்கெல்லாம் அரசனுனமலை

யில் வசிப்பவரே ! பக்தர்களின் கஷ்டத்தைப் போக்கும் தெய்வமே ! கிருபையுடன் கடைக்கண் பார்வையை என்னிடம் வைக்கவேணும்.

3. ஸ்ரீவிச்வநாத கருணாகர சூலபாணே
பூதேச பர்க புவனத்ரயகீத கீர்த்தே ।
ஸ்ரீநீலகண்ட மதனாந்தக விச்வமூர்த்தே
கௌரீபதே மயி நிதேஹி க்ருபாகடாக்ஷம் ॥

விச்வநாதனே ! கருணைசெய்பவரே ! சூலாயுதத்தைக் கையில் ஏந்தியவரே ! பூதங்களின் தலைவரே ! மூவுலகங்களும் உங்கள் கீர்த்தியை கானம் செய்யும் பெருமைஉடையவரே ! நீலகண்டமூர்த்தியே ! மன்மதனை அழித்தவரே ! உலகின் தெய்வமே ! கௌரி தேவியின் மணாளனே ! என்னிடம் உங்கள் கடைக்கண் பார்வையை வைக்கவேண்டும்.

4. விக்நேசதாத விதிபூஜித விச்வமூர்த்தே
விச்வாலயாமித க்ருபாபல விச்வநேத்ர ।
விச்வாதிகாமல விசாலவிலோகனேன
சம்போ விதேஹி சிவாம்ருத க்ருபாகடாக்ஷம் ॥

4. கணபதியின் தந்தையே! பிரம்மாவினால் பூசிக்கப் பட்டவரே ! உலகமே உங்கள் கோயில். அளவில்லாக் கருணையுடையவரே ! உலகமே உங்கள் கண், உலகைக் காட்டிலும் பெரியவரே ! விசாலமான கண்களால் என்னிடம் சிவாம்ருத கடாக்ஷத்தைச் செய்ய வேணும்.

5. மாயாமயம் ஹி ஸகலம் பரித்ருச்யமானம்
மோஹாத்மகம் ஜகதிதம் மஹதிந்த்ரஜாலம் ।
தேனதப்த ஸுகதுக்க விமோஹிதேமயி
ஸ்வாமின் விதேஹி தவதேவ க்ருபாகடாக்ஷம் ॥

5. இவ்வுலகு மாயாமயம். அதையே பார்க்கிறோம் அது ஏமாற்றுகிறது. இந்திர ஜாலம் போல் உலகு இருக்கிறது. அதனால் சுக துக்கங்களையடைந்து கஷ்டப்படும் என்னிடம் கிருபா கடாக்ஷத்தைச் செய்ய வேணும்.

6. சைவாம்ருதம் ஸகல தேவ கணபிவந்த்யம்
 சைவானுரக்த மதிமானஸ துஷ்டிஹேதும் I
யாசேஹமத்ய கருணாரஸ காமதேனோ
 சம்போ விதேஹி மயிதேவ க்ருபாகடாக்ஷம் II

6. உங்கள் கருணைகடாக்ஷம் தான் சிவாமிருதம். இதை தேவர்கள் வணங்கி வேண்டுகிறார்கள். சிவத்திடம் பக்தி செலுத்துபவர்களுக்கு சந்தோஷம் உண்டாகக் காரணமும் இதுவே. இதையே வேண்டுகின்றேன். கருணாரசம் பொழியும் காமதேனு போன்றவரே! தங்களது கடாக்ஷம் வேண்டும்.

7. தேவாதி தேவ புவனத்ரய ரக்ஷகாஸ்மான்
 ரக்ஷாம் குருத்வமதிபாப பயார்த்திபீதான் I
சம்போ கிரீச கிரிஜாபதி பக்தபால
 தயாம் குருஷ்வ சிவதேஹி க்ருபாகடாக்ஷம் II

7. தேவாதி தேவரே! மூன்று உலகங்களையும் காப்பவரே! மஹாபாபத்தைக் கண்டு பயப்படும் எங்களை ரக்ஷிக்க வேண்டும். சம்போ! கைலாசத்தில் மலையரசன் மகளுடன் இருந்து பக்தர்களை ரக்ஷிக்கும் சிவபெருமானே! என்னிடம் தயை வைத்து கிருபா கடாக்ஷம் வைக்க வேண்டும்.

8. ஸதாசிவகடாக்ஷம் பக்தபாக்யோ தயார்த்ரம்
 ஸுதாகிரணபூர்வம் தத்கடாக்ஷம் பவஸ்ய I
சிவா சிவகடாக்ஷம் தீனதீனேஹ்யநாதே
 மயிக்ஷிப சிவாம்ருத கருணக்ருபாக்ஷம் II

8. ஸதாசிவ மூர்த்தியின் கடாக்ஷம் பக்தர்களின் பாக்யத்திற்குக் காரணம், அம்ருத கடாக்ஷத்துடன் அம்பாளுடைய கடாக்ஷமும். தீன தீனர்களுக்கும் கீழான நாதனற்ற என்னிடம் சிவ கருணம்ருத கடாக்ஷத்தை வைக்க வேண்டும்.

9. சிவாகடாக்ஷம் க்ருபாகடாக்ஷம் சிவாம்ருத
 கருணகடாக்ஷம் I
ஹ்ருதயேன பக்த்யா நராஸ்துவந்திஹ்யாப்னோதி
 சித்தம் க்ருபாகடாக்ஷம் II

9. அம்பாளின் கடாக்ஷமும் சிவபெருமானது கிருபா கடாக்ஷமும் சிவாம்ருதமாகிய கருணு கடாக்ஷமும் பெருகும் இந்த ஸ்தோத்ரத்தை நுனி நாக்கால் மட்டும் சொல்லாமல் உள்ளம் உருகி ஸ்தோத்ரம் செய்வதால் உண்மையாக சிவ கடாக்ஷம் கிடைக்கும். (கடாக்ஷம் — கடைக்கண்பார்வை) இதைக் காட்டிலும் பெறக்கூடிய பேறு பெரிது ஏதுமில்லை.

சிவகடாக்ஷம், கருணுகடாக்ஷம், சிவாம்ருத கருணுக்ருபா தயாகடாக்ஷம் வேண்டுமென்று அந்த உத்தமி பக்தை வேண் யதும் சிவபெருமான் மஹா கைலாசத்தில் அழியாப்பதம் கொடுத்தருளினுர். அவள் துதித்துப் பாடிய இந்த சிவ கடாக்ஷ அஷ்டகத்தைப் படிப்பவர்கள் சிவ கடாக்ஷம் பெறுவர்.

அந்த மஹாநந்தா என்ற சிவபக்தையினுல் வளர்க்கப் பட்டு, நாட்டியம் பயிற்று விக்கப்பட்டு, விபூதி ருத்ராக்ஷம் தரித்துவந்த குரங்கு ராஜபுத்திரனுகவும், கோழி மந்திரி குமார னுகவும் பிறந்தார்கள். சிவகடாக்ஷம் தான் இதற்குக் காரணம் என்று முனிவர் கூறி, அத்தகைய சிவகடாக்ஷத்தை விபூதி ருத்ராக்ஷ தாரணம், சிவநாமோச்சாரணம், ஸதா சிவத்யானம், சிவகதா ச்ரவணம், சிவாலாய வழிபாடு, அடியார்கள் அருளிச் செய்த ஸ்தோத்ரங்களை நல்லமுறையில் பாடிவருதல் போன்ற நற்செயல்களால் பெறலாம் என்று அரசனுக்குக் கூறி பரமா னுக்ரஹம் செய்தார். இந்த வரலாற்றைக் கேட்ட அரசன் பரம ஸந்தோஷம் அடைந்து தனது குமாரனுக்கு சிவ கடாக்ஷம் என்றும் மந்திரி குமாரனுக்கு சிவா கடாக்ஷம் என்றும் பெயர் சூட்டி குழந்தைகளைப் போற்றி வந்தான். குழந்தை களும் சிவபக்தர்களாகவே வளர்ந்து உலகையும் சிவபக்தி யினுல் மகிழவைத்து பரிபாலனம் செய்தார்கள். இவ்வரலாறு மஹாஸ்காந்தம் பிரம்மோத்தர காண்டத்தில் கூறப் பட்டுள்ளது.

சிவம்.

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# பாகவதத்தில் பரமேசுவரன் பெருமை—2

(ஞானபாஸ்கர, சிவோத்கர்ஷவர்ஷக பிரம்மஸ்ரீ

P. N. நாராயண சாஸ்திரிகள்.

(பதிப்பாசிரியர் குறிப்பு:—மஹாவிஷ்ணுவின் பெருமையைக் கூறும் வைஷ்ணவபுராணங்கள் நான்கினுள் ஒன்றான பாகவதத்தில் பரமேசுவரன் பெருமை எவ்வாறு பேசப்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிட்டுக் காட்டும் இக்கட்டுரைத்தொடர் 1985வது ஆண்டு சிவஞானபூஜாமலரில் ஆரம்பிக்கப்பட்டது. முதல் கட்டுரையில் பாகவதத்தின் 12 ஸ்கந்தங்களில் முதல் மூன்று ஸ்கந்தங்களில் அடங்கிய சிவமஹிமை குறித்த சுலோகங்கள் தமிழ் உரையுடன் கொடுக்கப்பட்டன. இந்த இரண்டாவது கட்டுரையில் பிரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள் 4 வது ஸ்கந்தம் எவ்வாறு பரமேசுவரனைப் போற்றுகிறது என்பதை அதற்குரிய சுலோகங்களை தமிழ் உரையுடன் எழுதியுள்ளார்கள். —பதிப்பாசிரியர்)

நான்காவது ஸ்கந்தம்—தக்ஷயக்ஞம்

அத்தியாயம் 2, சுலோகம் 1-2.

भवे शीलवतां श्रेष्टे दक्षो दुहितृवत्सलः ।
विद्वेषमकरोत्कस्मात् अनादृत्यात्मजां सतीम् ।।

1. பவே சீலவதாம்ச்ரேஷ்டே தக்ஷோ துஹித்ருவத்ஸல: ।
வித்வேஷமகரோத் கஸ்மாத் அநாத்ருத்யாத்மஜாம் ஸதீம் ।

कस्तं चराचरगुरुं निर्वैरं शान्तविग्रहम् ।
आत्मारामं कथं द्वेष्टि जगतोदैवतं महत् ।।

2. கஸ்தம் சராசரகுரும் நிர்வைரம் சாந்த விக்ரஹம் |
ஆத்மாராமம் கதம் த்வேஷ்டி ஜகதோ தைவதம் மஹத் ||

1. தன் பெண்ணுன தாக்ஷாயணியிடம் மிக்க அன்பு கொண்ட தக்ஷன் உலகிற்கு ஒழுக்க நடைமுறையை அருள் புரியும் மங்களரான சிவனிடத்தில் ஏன் பகைமை பாராட்டினுன்?

2. அசைவதும் அசையாததுமான எல்லா உலகிற்கும் குருவாயும் உலகிற்கு எவரைக் காட்டிலும் மேலான தெய்வம் கிடையாதோ அப்படிப்பட்ட வைரமற்றவரும், அமைதியான ஸ்வரூபத்தை உடையவரும், தன்னுள்ளேயே அகில உலகையும் கொண்டு அமைதியான பிரம்ம ஸ்வரூபமானவரும் நிகரற்ற கடவுளுமான அந்த சிவனை ஏன் பகைத்துக் கொண்டான். இந்த இரண்டு சுலோகங்களும் சிவபெருமானே மேலான தெய்வம் என்பதைக் கூறுகின்றன,

4வது அத்தியாயம்—சுலோகம் 14

यद्द्व्यक्षरं नामगिरेरितं नृणां
सकृत्प्रसंगादघमाशुहन्ति तत् ।
पवित्र कीर्ति तमलङ्घ्यशासनं
भवान् अहो द्वेष्टिशिवं शिवेतरः ।।

யத் த்வ்யக்ஷரம் நாம கிரேரிதம் ந்ருணும்
ஸக்ருத்ப்ரஸங்காதகமாசு ஹந்தி தத் |
பவித்ரகீர்த்திம் தமலங்க்யசாஸனம்
பவானஹோ த்வேஷ்டி சிவம் சிவேதர: ||

எந்த "சிவ" என்ற இரண்டு எழுத்துள்ள நாமாவைத் தெரியாமல் சொல்லிவிட்டால் கூட உடனே எல்லாப் பாபக் கூட்டங்களேயும் போக்கடித்து விடும். புனிதமான புகழையுங் கொண்டு எவருடைய கட்டளேயை பதினன்கு உலகாலும் மீற முடியாதோ அந்த சிவனே நீ, உனக்கு அமங்களம் வந்து விட்ட படியால் பகைமை பாராட்டுகிருய். (இது தாக்ஷாயணி தக்ஷனேப் பார்த்துக் கூறியது. சிவ நாம மஹிமையும் கூறப் பட்டது). இது முதல் 17வது சுலோகம் வரையில் ஸ்ரீ தாக்ஷாயணி தேவி சிவமாஹாத்மியத்தை சபையில் உள்ளவர் களுக்கு உபதேசம் செய்கிருர்.

6வது அத்தியாயம்—சுலோகம் 42-43,

பிரம்மாதி தேவர்கள் ஸ்துதி

जानेत्वामीशं विश्वस्य जगतो योनिबीजयोः ।
शक्तेश्शिवस्य च परं यत्तद्ब्रह्म निरन्तरम् ।।

42. ஜானே த்வாமீசம் விச்வஸ்ய ஜகதோ யோநிபீஜயோ: ।
சக்தே: சிவஸ்ய ச பரம் யத்தத்ப்ரஹ்ம நிரந்தரம் ॥

त्वमेव भगवन्नेतच्छिवशक्त्योस्सरूपयोः ।
विश्वंसृजसि पास्यत्सि क्रीडन्नूर्णनाभिः यथा ।।

43. த்வமேவ பகவன்னேதச்சிவசக்த்யோ: ஸரூபயோ: ।
விச்வம் ஸ்ருஜஸி பாஸ்யத்ஸி க்ரீடந்நூர்ணநாபி: யதா ॥

42. சிவசக்த்யாத்மகமான உங்களாலேயே இந்த உலகம். எது 'தத்' என்கிற பிரம்மமோ அதுவே சிவ சக்தி யாய் உலகுக்கெல்லாம் காரணம் ஆகிறது.

43. பரமாத்மாவான நீயே சிவசக்தியாயிருந்து இந்த உலகைப் படைத்து, காத்து, அழித்து சிலந்திப்பூச்சி மாதிரி செயல்படுகிருய்.

சிலந்திப்பூச்சி தன் வாயிலிருந்து நூலை உண்டுபண்ணி, வலைகட்டி, அதனுள்ளேயே சுற்றிச் சுற்றி வரும். பிறகு அதைத் தன்னுள்ளேயே இழுத்துக் கொண்டுவிடும். சிலந்திப் பூச்சி உருவத்தில் ஒரு அங்குலமே உள்ளது. அது பலகெஜம் நூலை உண்டு பண்ணி, பந்தல்போட்டு, அதிலேயே சுற்றி வந்து, பிறகு தன்னுள்ளேயே இழுத்துக்கொண்டுவிடும். அம்மாதிரியே கண்ணுக்குத் தெரியாத பரமேசுவரன் இந்த உலகை உண்டுபண்ணி, காத்து, அதில் உள்ள ஜீவர்களுக்கு அருள் புரிந்து, பிறகு தன்னுள்ளேயே அடக்கிக்கொண்டு விடுகிறார். (ஸ்ரீதரீய வியாக்யானம்)

அத்தியாயம் 6, சுலோகம் 53

एष ते रुद्रभागोऽस्तु यदुच्छिष्टोऽध्वरस्य वै ।
यज्ञस्ते रुद्रभागेन कल्पतामद्य यज्ञहन् ॥

ஏஷ தே ருத்ரபாகோऽஸ்து யதுச்சிஷ்டோऽத்வரஸ்யவை ।
யக்ஞஸ்தே ருத்ரபாகேன கல்பதாமத்ய யக்ஞஹன் ॥

''பரமேசுவரனே ! யக்ஞத்தில் மிகுதியுள்ள அனைத்தையும் உமது பாகமாய் ஏற்றுக்கொண்டு, இந்த யாகம் ருத்ரபாகத் தோடு கூடியதாய்ப் பூர்த்தியாகட்டும்'' என்று பிரம்மா விஷ்ணு முதலான தேவர்கள் ஈசுவரனை வேண்டினர். இந்த ஸ்துதியினால் திருப்தியடைந்து தக்ஷன் முதலானோர் செய்த குற்றங்களை மறந்து அருள்புரிந்தார் ஈசர் என்று ஏழாவது அத்தியாயம் 1ம் சுலோகம் கூறுகிறது. ''ஆசுதோஷி மஹேச்வர: ''சிவபெருமான் வெகுவிரைவில் ஸந்தோஷமடைவார் என்கிற வாக்யமும் இங்கு நிரூபிக்கப்பட்டது.

அத்தியாயம் 7, சுலோகம்-6

तदा सर्वाणि भूतानि श्रुत्वा मीढुष्टमोदितम् ।
परितुष्टात्मभिस्तत्तु साधुसाध्वित्यथाब्रुवन् ॥

ததா ஸர்வாணி பூதானி ச்ருத்வா மீடுஷ்டமோதிதம் |
பரிதுஷ்டாத்மபிஸ்தந்து ஸாதுஸாத்வித்யதாப்ருவன் ||

எல்லா ஜீவர்களும் ஈச்வரனது அருள் வாக்கியத்தைக் கேட்டு மிக்க மகிழ்ச்சியடைந்து நல்லது நல்லது என்று கூறினர்.

அத்தியாயம் 7, சுலோகம் 60—61

एतद्भगवतश्शम्भोःकर्मदक्षाध्वरद्रुहः ।
श्रुतं भागवताच्छिष्यात् उद्धवान्मे बृहस्पते: ।।

60. ஏதத் பகவத : சம்போ : கர்ம தக்ஷாத்வரத்ருஹ: |
ச்ருதம் பாகவதாச்சிஷ்யாத் உத்தவான்மே ப்ருஹஸ்பதே: ||

इदं पवित्रं परमीशचेष्टितं यशस्यमायुष्यमघौघमर्षणम् ।
यो नित्यमाकर्ण्य नरोनुकीर्तयेद्धुनोत्यघंकौरवभक्तिभावत:।।

61. இதம் பவித்ரம் பரமீச சேஷ்டிதம்
யசஸ்யமாயுஷ்யமகௌகமர்ஷணம் |
யோ நித்யமாऽऽகர்ண்ய நரோऽநுகீர்த்தயேத்
துனோத்யகம் கௌரவ பக்திபாவத : ||

60. இம்மாதிரி குற்றமிழைத்த தக்ஷனது யாகத்தை அழித்த பகவானான பரமேசுவரனுடைய மஹிமையை உத்தவரிடம் தெரிந்து கொண்டேன்.

61. இது (தக்ஷயக்ஞநாச சரித்திரம்) பரிசுத்தமானது, பாபத்தைப் போக்கக்கூடியது, நீண்ட ஆயுளையும் புகழையும் ஒருங்கே கொடுப்பது. இவ்வுலகில் இதைக் கேட்டு மனிதன் பக்தியுடன் வாயாரப்பாடுவானேயானால் எல்லாப் பாவக் கூட்டங்களையும் போக்கடித்து ஈசன் அருள் புரிவார் (இவ்வாறு மைத்ரேயர் என்பவர் கூறினர்).

அத்தியாயம் 22, சுலோகம் 36

ஈசவித்வம்ஸிதாசிஷாம்

பாவம் செய்கிறவர்களைக் காலரூபியான பரமேசுவரன் நாசம் செய்து விடுகிறார்.

அத்தியாயம் 24, சுலோகம் 25-26

तप्तहेमनिकायाभं शितिकण्ठंत्रिलोचनम् ।
प्रसादसुमुखं वीक्ष्य प्रणेमुर्जातकौतुकाः ॥

25. தப்தஹேமநிகாயாபம் சிதிகண்டம் த்ரிலோசனம் ।
ப்ரஸாத ஸுமுகம் வீக்ஷ்ய ப்ரணேமுர்ஜாதகௌதுகா: ॥

स तान् प्रपन्नार्तिहरो भगवान् धर्मवत्सलः ।
धर्मज्ञान् शीलसम्पन्नान् प्रीतः प्रीतानुवाचह ॥

26. ஸதான் ப்ரபன்னார்த்தி ஹரோ பகவான் தர்மவத்ஸல: ।
தர்மக்ஞான் சீலஸம்பன்னன் ப்ரீத: ப்ரீதானுவாசஹ ॥

25. உருக்கியதங்கம் போன்ற வரும், சிதிகண்டரும், முக்கண்ணரும், பக்தர்களுக்கருள் புரிகிற பிரசன்ன முகத்தோடும் கூடியவருமான பரமேசுவரனை எல்லோரும் வணங்கினர். (சிதிகண்டர்—விஷம் தங்கிய இடம் தவிர ஏனைய கழுத்துப் பிரதேசம் வெண்மையாக உடையவர் என்பது பொருள்)

26. தர்மத்தில் அன்புகொண்ட பரமேசுவரன் ப்ரீதியுடன் தர்மம் தெரிந்த அவர்களைப் பார்த்துக் கூறினார். (ப்ராசீபர்ஹிஸ் முதலிய அரசர்களுக்கு அனுக்ரஹம் புரிந்து ருத்ரகீதையையும் உபதேசித்தார்).

இவ்வாறு பாகவதம் 4வது ஸ்கந்தத்தில் உள்ள சிவ பெருமானைப் பற்றிய சில குறிப்புகள் இங்கு தரப்பட்டன. ஏனைய ஸ்கந்தங்களில் உள்ளவை தொடர்ந்து வரும் ஆண்டு மலர்களில் பிரசுரிக்கப்படும்.

சுபம்.

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# நாராயணன் முதலிய நாமங்களின் பொருள்

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச ஸ்வாமிகள்
இயற்றியருளிய ''சைவ சமய சரபம்''
என்னும் நூலில், கைவல்லிய காண்டம்
14-ம் அத்தியாயத்தைத் தழுவிப்
பதிப்பாசிரியரால் எழுதப்பட்டது.

நாராயணன், வாஸுதேவன் முதலிய பெயர்கள் திருமாலின் பெயர்களாகக் கருதப்படுகின்றன. ஆனால் இவை சிவபரமான பொருளைத் தருபவையே என்பதை பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் நிலை நாட்டுகிறார்கள்.

நாராயணன் - (1) இதன் பொருள் 'நரனது இருதயத்தில் இருப்போன்' என்பதாம்; நரன்—ஆன்மா. ஆன்மாவின் இருதயத்தில் இருப்போன் சிதாகாச சிவனெனல் ஏற்படுகிறதலின் நாராயணன் என்னும் பெயர் சிவனுக்கும் ஆம் என்க.

(2) நாரம்—நீர்; இது சிவபெருமானுடைய அஷ்ட மூர்த்தங்களில் ஒன்றாகலின் அதில் இருக்கும் சிவன் நாராயணன் எனப்படுவார்.

(3) சிவசக்தியாகிய நாராயணி கொண்ட புருஷ வடிவமே நாராயணன்.

மேலும் நாராயணன் என்ற சொல் 28 வகையாகச் சிவபரமாகப் பொருள் படுதலை மல்லிகார்ச்சுநாராத்தியர் என்பவர் இயற்றிய சிவபரகேசவாதி நாமநிர்வசனம் என்ற நூலில் காணலாம் என்று சுவாமிகள் கூறியுள்ளார்கள். இறைவன் அருளால் அந்த நூல் நமக்குக் கிடைக்குமேயானல் அதையும் வெளியிடுவோம்.

வாசுதேவன் என்பது திருமாலின் நாமமாகக் கருதப்படுகிறது. அதனைச் சிவபரமாகப் பொருள்படுத்தியுள்ளார்கள் சுவாமிகள். வஸு—தனம்; வஸு—குபேரன்; குபேரன் எந்தத் தேவனுல் பிரகாசிக்கின்றனஞே அந்தத் தேவன் வாசுதேவன். குபேரனுக்கருள் புரிந்தவர் சிவபெருமானே என்பதை அறியாதாரும் உளரோ?

(2) வஸதி, வாஸு - பிருதிவீ, இது சிவபெருமானது எண்வகைத் திருமேனிகளில் ஒன்ருகலின் அதிலிருக்கும் சிவனே வாஸுதேவன் எனக்கொள்க.

ஸங்கர்ஷணன் - இது ஸம்யக் - கர்ஷ - ந எனப்பிரிக்கப்பட்டு முன்னைய இரண்டும் நிர்விகல்பஸமாதியெனவும் பின்னையது சுகமெனவும் ஆம். ஆகவே அச்சமாதியிலிருப்போனுக்கு எச்சுகம் எய்துமோ அச்சுகசொரூபன் சிவபிராஞதலின் ஸங்கர்ஷணன் என்ற பெயர் சிவபெருமானுடையதே என்று அறிக.

(2) யாவையும் இழுத்துக்கொள்வோன் ஸங்கர்ஷணன் என்று கூறப்படுதலின் ஸர்வ சங்கார மஹாருத்திரன் என்ற பொருள்தரும்,

ப்ரத்யும்நன்: ப்ர - மேலான; த்யும்நன் - தேவன்; எனவே மேலான தேவன். சிவபிரானே மேலான தேவன் என்பதை மஹாதேவன் என்ற சிவநாமம் விளக்குவதை யாவரும் அறிவரே !

அநிருத்தன்:—அநிந: ருந்த இதி அநிர:—தம் அநிரம் ஹம்தீதி அநிருத்த: எனுமாற்ருனே "பிராணிகளைத் தடுக்கும் ஆற்றலுள்ள மன்மதனைக் கொன்றவன்'' என்று பொருள்படும். மன்மதனைக் கொன்றது யார்? சிவபெருமானேயன்ருே? எனவே அநிருத்தன் என்பதும் சிவநாமமே ஆதல் காண்க.

ஹரி என்பதன் பொருள்:—ஹரி - சூரியன்; இவன் சிவ பெருமானது எட்டு மூர்த்தங்களில் ஒன்ருகலின் இவனுக்கு அந்தரியாமியாக இருக்கும் சிவ சூரியன் ஹரியெனப்படுவான் எனக்கொள்க

(2) ஹரி — சந்திரன்; இவனும் சிவபெருமானுடைய அஷ்டமூர்த்தங்களில் ஒன்ருகலின் இவனுள்ளிருக்கும் அந்தர்க் கத சந்திரனுன சிவபிரான் ஹரியெனப்படுவர்.

(3) ஹரி—வாயு; இவனும் சிவபெருமானுடைய அஷ்ட மூர்த்தங்களுள் ஒன்ருகலின் இவனுள்ளிருக்கும் அந்தர்க்கத வாயுவான சிவபிரானே ஹரியென்ப்படுபவர்.

(4) பாசங்களையும் பாவங்களையும் ஹரிப்பவன் ஹரி. அத்திறமுளோன் சிவபிரானே யென்பது சரபோபநிஷத்தில் "பரமேசுவரர் அத்தேவர்களுடைய தாபத்திரய ஜனன மிருத் தியு ஜரை முதலியவற்ருலுண்டான நாநாவிதமான துக்கங் களையும் ஹரித்தருளினர்'' எனப்படுதலாலும் ''விஷ்ணுவுக்கு நல்ல பிரஸாதம் செய்தருளினர்'' என்ற அருத்தத்தில் அறியப் படுதலாலும் சிவபெருமான் ஹரியெனப்படுவர்.

கோவிந்தன் —இதன் பொருள் விருஷபாருடன் என்பதாம். இதனை திரிபுரஸம்ஹார காலத்தில் சிவனுர் ஏறிச் சென்ற தேர் அச்சுமுறிந்தபோது, திருமால் விருஷபமாகி அத்தேரைத் தாங்கினர் என்பதால் அறிக. கூ ரே ச வி ஜ ய ம் என்னும் வைணவச் சுவடியிலும் 'இடபமாய்த் தாங்கின கஷி' என்பதில் இச் செய்தி ஒப்புக் கொள்ளப்பட்டதேயாம். சிவபிரானுக்கு

நந்தி விடை மால்விடை, தருமவிடை என்று மூன்று விடைகள் (விருஷபங்கள்) உள்ளன என்பதையும் அனைவரும் அறிவர். திருமால் இடபமாகிச் சிவபிரானைத் தாங்கியதை பின்வரும் திருவாசகத் திருப்பாட்டாலும் அறிக.

கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேருதே
இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
தடமதில்கள் அவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ.

—திருவாசகம். திருச்சாழல், - 15

சிவம்.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# தனிப்பாடல்களில் பெருமான் புகழ்

சிவபக்திப்பிரசாரமணி ஆங்கீரஸ சர்மா

அமிழ்தினுமினிய நம் செந்தமிழ்மொழியில் சிவபெருமானின் பொருள்சேர் புகழ்கூறும் முழுநூல்கள் பலப்பல உள்ளன என்பதை அனைவருமறிவர். அதுபோலவே பெருமான் புகழ்பாடும் தனிப்பாடல்களும் பலப்பல உள்ளன. தண்டமிழ்ப் புலவர் பெருமக்கள் பலரால் அவ்வப்போது பாடப்பெற்றவைகளே அத்தனிப்பாடல்களாகும். கணவர் புகழ் கேட்டு மகிழும் கற்புடை மனைவியர் போல நம் வாசகர்களும் ஆன்மநாயகனை பரமேசுவரனின் புகழ் கேட்டுப் பெரிதும் மகிழ்வர் என்ற எண்ணத்தில் "தனிப்பாடல்களில் பெருமான் புகழ்" என்ற இப்பகுதியை இந்த ஆண்டிலிருந்து ஆரம்பிக்கின்றோம். முதலாவதாக ஆசுகவி காளமேகப்புலவர் பெருமான் பாடியவைகளில் சிலவற்றை இந்த மலரில் பிரசுரிக்கிறோம்.

## ஆசுகவி காளமேகப்புலவர் பாடியவை

### 1. சிதம்பரநாதனைப் போற்றியது

அரகர திருச்சிற் றம்பலவா ணவந்
தரரூ பமகே சசிதம் — பரதே
வசிதம் பரதே வசிதம் பரதே
வசிதம் பரதே வனே.

(இதன் பொருள்) அரகர, திருச்சிற்றம்பலவாண, அந்தரரூப, மகேச, சிதம்பரதேவ, சிதம்பரதேவ, சிதம்பரதேவ, சிதம்பரதேவனே என இயைத்துப் பொருள் கொள்ள

நந்தி விடை மால்விடை, தருமவிடை என்று மூன்று விடைகள் (விருஷபங்கள்) உள்ளன என்பதையும் அனைவரும் அறிவர். திருமால் இடபமாகிச் சிவபிரானைத் தாங்கியதை பின்வரும் திருவாசகத் திருப்பாட்டாலும் அறிக.

கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேருதே
இடபம்உகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
தடமதில்கள் அவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினன் திருமால்காண் சாழலோ.

—திருவாசகம். திருச்சாழல், - 15

சிவம்.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# தனிப்பாடல்களில் பெருமான் புகழ்

சிவபக்திப்பிரசாரமணி ஆங்கீரஸ சர்மா

அமிழ்தினுமினிய நம் செந்தமிழ்மொழியில் சிவபெருமானின் பொருள்சேர் புகழ்கூறும் முழுநூல்கள் பலப்பல உள்ளன என்பதை அனைவருமறிவர். அதுபோலவே பெருமான் புகழ்பாடும் தனிப்பாடல்களும் பலப்பல உள்ளன. தண்டமிழ்ப் புலவர் பெருமக்கள் பலரால் அவ்வப்போது பாடப்பெற்றவைகளே அத்தனிப்பாடல்களாகும். கணவர் புகழ் கேட்டு மகிழும் கற்புடை மனைவியர் போல நம் வாசகர்களும் ஆன்மநாயகனுன பரமேசுவரனின் புகழ் கேட்டுப் பெரிதும் மகிழ்வர் என்ற எண்ணத்தில் ''தனிப்பாடல்களில் பெருமான் புகழ்'' என்ற இப்பகுதியை இந்த ஆண்டிலிருந்து ஆரம்பிக்கின்ருேம். முதலாவதாக ஆசுகவி காளமேகப்புலவர் பெருமான் பாடியவைகளில் சிலவற்றை இந்த மலரில் பிரசுரிக்கிருேம்.

## ஆசுகவி காளமேகப்புலவர் பாடியவை

### 1. சிதம்பரநாதனைப் போற்றியது

அரகர திருச்சிற் றம்பலவா ணவங்<br>
தரரூ பமகே சசிதம் — பரதே<br>
வசிதம் பரதே வசிதம் பரதே<br>
வசிதம் பரதே வனே.

(இதன் பொருள்) அரகர, திருச்சிற்றம்பலவாண, அந்தரரூப, மகேச, சிதம்பரதேவ, சிதம்பரதேவ, சிதம்பரதேவ, சிதம்பரதேவனே என இயைத்துப் பொருள் கொள்ள

வேண்டும். அங்ஙனம் கொண்டால் இப்பாடலின் பொருள்:- பாவத்தை அழிப்பவனே, திருச்சிற்றம்பலம் என்ற ஞானசபையில் வாழ்பவனே, சிதாகாசவடிவனே, மஹேசனே, சிதம்பரத்தில் எழுந்தருளியுள்ள தெய்வமே, ஞானமென்னும் ஆடையை அணிந்தவனே, ஞானகாயத்தில் நடனம் புரிபவனே, சிதம்பர தேவன் என்னும் பெயருடைய பெருமானே (எனக்கு அருள் புரிவாயாக).

இப்பாடலில் சிதம்பர தேவன் என்னும் சொல் நான்கு முறைவந்துள்ளது. சித் அம்பரம் என்பது சிதம்பரமாயிற்று. அம்பரம் என்ற சொல்லுக்கு ஆடை, ஆகாயம் என்ற பொருள்கள் உள்ளன.

## 2. சிதம்பரத்திலுள்ள சின்னங்களைப் பாடியது.

ஞான சபைக னகசபைசிற் றம்பலம்பே
ரானந்தக் கூடந் திருமூலட் — டானம்பே
ரம்பலம்பஞ் சாவரண நாற்கோபுரம் பொற்செய்
கம்பமண்ட பஞ்சிவகங் கை.

சிதம்பரத்தில் சிறப்பாக உள்ளவை எவை என்பது இப்பாடலிற் கூறப்படுகிறது.

1. ஞானசபை — சிற்சபை, இதில் நடராஜப் பெருமான் எழுந்தருளியுள்ளார்.
2. கனகசபை — பொன்னம்பலம், இது சிற்சபைக்கு முன்னால் இருப்பது.
3. சிற்றம்பலம்—நுட்பமான அம்பலம், சிறுமை + அம்பலம் = சிற்றம்பலம். இதில் பெருமான் அருவாய் இருப்பர்.
4. பேரானந்தக் கூடம்—பேரின்பசபை, இதில் நடராஜப் பெருமான் ஊர்த்துவ தாண்டவம் செய்தருளுவர்.
5. திருமூலட்டானம்—மூலஸ்தானம். இங்குப் பெருமான் சிவலிங்க மூர்த்தியாக திருமூலநாதர் என்ற திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார்.

6. பேரம்பலம்—தேவசபை, தேவர்கள் கூட்டம் நடராஜப் பெருமானைத் துதித்து வணங்கும் இடம்.

7. பஞ்சாவரணம்—ஐந்து பிராகாரங்கள்.

8. நாற்கோபுரம்—நான்கு திசைகளிலும் உள்ள நான்கு பெரிய கோபுரங்கள்.

9. பொற்செய் கம்பமண்டபம்—அழகு விளங்கும் ஆயிரங்கால் மண்டபம்.

10. சிவகங்கை—சிவகங்கை என்ற பெயருடைய தீர்த்தம். (திருக்குளம்)

## 3. நடராஜர் திருவிழாவைத் தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது

நச்சரவம் பூண்டதில்லை நாதரே தேவரீர்
பிச்சையெடுத் துண்ணப் புறப்பட்டும்—உச்சிதமாம்
காளமேன் குஞ்சரமேன் கார்கடல்போல் தான்முழங்கும்
மேளமேன் ராஜாங்க மேன்.

தில்லைத் திருவிழாவில் இறைவர் இரவலர் (பிக்ஷாடனர்) திருக்கோலத்தில் திருவீதி உலா எழுந்தருளியது தரிசித்துப் பாடியது இப்பாடல். விஷம் பொருந்திய பாம்பினை அணிகலமாகப் பூண்டருளிய தில்லைப் பெருமானே! தேவரீர் பிச்சையெடுத்து உண்பதற்காகப் புறப்பட்டீர். அப்படியிருந்தும் உமக்குச் சிறப்பான எக்காளம் ஊதுவது எதற்கு? யானை முதலிய பரிவாரங்கள் ஏன்? கரியகடல் போல முழங்கும் மேளம் எதற்கு? அரசனுக்குரிய சின்னங்கள் தான் எதற்கு? என்பது இப்பாடலின் பொருள். பிச்சையெடுப்பவருக்கு ஏன் இத்தகைய வைபவங்கள் என நிந்தையாகச் சொல்வது போலத் தோன்றினும், இப்பாடலில் பிக்ஷாடனர் திருவிழாச் சிறப்பை எடுத்தோதியது காண்க.

## 4. இதுவும் பிக்ஷாடனர் திருக்கோலத்தை நிந்தாஸ்துதியாகப் பாடியது

தாண்டி யொருத்தி தலையின்மே லேறுளோ
பூண்டசெருப் பாலொருவன் போடானோ—மீண்டொருவன்
வையானோ வில்முறிய மாட்டானோ தென்புலியூர்
ஐயாநீ ஏழையா னால்.

(இதன் பொருள்) அழகிய புலியூர் எனப்படும் தில்லையம் பதியில் எழுந்தருளிய பெருமானே ! நீர் எளியவராகிவிட்டால் ஒருவள் உமது தலைமீது தாவி ஏறமாட்டாளோ ? ஒருவன் தனது காலில் அணிந்த செருப்பை உம்தலைமீது வைக்கமாட்டானோ ? மற்றும் ஒருவன் உம்மை நன்குவைது தன் வில்முறிய உம்மைத் தலையில் அந்த முறிந்த வில்லால் அடிக்கமாட்டானோ ? (இவ்வளவு அவமதிப்பும் நீர் ஏழையானதால் நேர்ந்தது என்பது கருத்து).

ஏழைகளே பிச்சையெடுக்கப் போவராகலின் பிக்ஷாடனத் திருக்கோலத்தில் எழுந்தருளிய இறைவரும் ஏழையெனப் பட்டார். ஏழைகளையே அனைவரும் அவமதிப்புச் செய்வர் என்ற நியதி பற்றி இத்தகைய அவமதிப்புகளை இறைவரும் ஏற்க நேர்ந்தது என்று இப்பாடல் நிந்தையாகத் தோன்றினும், இறைவர் அடியவருக்கு எளியவர் ஆகையால் பகீரதனுக்கு அருள் புரிய வேண்டித் தம் தலையில் கங்கையைத் தரித்தார் ; கண்ணப்பர் அன்புக்காக அவரது செருப்பைத் தம்தலைமீது வைத்ததை அன்புடன் ஏற்றுக்கொண்டார் ; அருச்சுனன் செய்த தவத்துக்கு இரங்கி அவனுக்குப் பாசுபதம் வழங்க எழுந்தருளியபோது விளையாட்டாக அவனுடன் செய்த போரில் அவன் தனது முறிந்த வில்லால் அடித்ததையும் தாங்கிக் கொண்டார் என்று பெருமானது திருவருட் செயல் களையே சிறப்பித்துக் கூறுவது காண்க.

## 5. இதுவும் ஸ்ரீ நடராஜரை வணங்கிப் பாடிய நிந்தாஸ்துதி

கொங்குலவுந் தென்தில்லைக் கோவிந்தக் கோனிருக்கக்
கங்குல்பகல் அண்டர்பலர் காத்திருக்கச்—செங்கையிலே
ஓடெடுத்த அம்பலவா ஓங்குதில்லை உட்புகுந்தே
ஆடெடுத்த தெந்த உபாயம்.

மணம் வீசுகின்ற அழகிய தில்லை நகரில் கோவிந்தனாகிய ஆட்டிடையர் தலைவன் இருக்கவும், இரவும் பகலும் இடையர்கள் பாதுகாத்துக் கொண்டிருக்கவும், கையில் ஓடெடுத்த அம்பலவா! நீர் தில்லையம்பலத்திலே உள் புகுந்து ஆட்டினைத் தூக்கியது எந்த உபாயத்தால் (கூறுவீராக) என்பது இப்பாடலின் மேலெழுந்தவாரியாகத் தோன்றும் பொருள். இடையர் தலைவன் இருக்கவும், மற்ற இடையர்கள் பாதுகாத்து நிற்கவும், எப்படி ஆட்டை (அவர்களறியாது) எடுத்துக் கொண்டீர் என்று வினவியதாகும். கோன்—இங்கு இடையர் தலைவன் என்ற பொருளிலும், அண்டர்-இடையர் என்ற பொருளிலும் வந்தது. ஆடு-பொருள் வெளிப்படை.

தில்லையில் திருமால் கோவிந்தராசன் என்ற பெயருடன் இருக்கவும், இரவும் பகலும் தேவர்கள் உம்மை வழிபாடு செய்யக் காத்திருக்கவும் (அவர்களறியா வண்ணம்) செங்கையிலே ஒரு ஓடு எடுத்தவரான அம்பலவாணனே! நீர் தில்லையம்பலத்துள் புகுந்து கூத்தாடத் தொடங்கியது எந்த தந்திரத்தால் (கூறியருள்வீராக) என்று இப்பாடலுக்கு வேறு பொருளும் உளது. இப்பொருளில் கோன் என்பது காத்தற் கடவுள் (அரசன்) என்றும், அண்டர்கள் என்பது தேவர்கள் என்றும் ஆடு என்பது ஆட்டம் அல்லது கூத்து என்றும் கொள்ளப்பட்டது. எனவே திருமாலும் தேவர்களும் அறியா வண்ணம் இறைவர் திருநடனத்தைத் தொடங்கினர் என்பதாம்.

## 6. பெருமானின் கையிலுள்ள மானின் செயலைப் பாடியது

பொன்னஞ் சடையறுகம் புல்லுக்கும் பூம்புனற்கும்
தன்னெஞ் சுவகையுறத் தாவுமே—அன்னங்கள்
செய்க்கமலத் துற்றுலவுந் தில்லை நடராசன்
கைக்கமலத் துற்றமான் கன்று.

(இதன் பொருள்). வயல்களில் உள்ள தாமரை மலர்களின் மேல் அன்னப் பறவைகள் உலாவுகின்ற தில்லைப்பதியில் திருக்கூத்தியற்றும் நடராஜருடைய தாமரை மலர் போன்ற திருக்கரத்தில் உள்ள மான், பொன் போன்ற அழகிய திருச்சடையின்மீது உள்ள அறுகம்புல்லினிடத்தும், கங்கையாகிய நீரிடத்தும் தனது மனம் மகிழும்படியாகத்தாவும்.

நடராஜப் பெருமானின் திருக்கரத்தில் பொருந்திய மான் கன்றுனது அப்பெருமான் முகத்துக்கு நேராகத்தன் முகத்தையும், முன்னங்கால்களையும் உயரத் தூக்கியிருப்பது ஏன் என்று வினவியதில்லை மூவாயிரவர்க்குக் காளமேகப் புலவர் கூறிய விடையாக இப்பாடல் கருதப்படுகிறது.

## 7. தில்லைக் கோவிந்தர் கால்மாட்டில் நடராஜர் நடனஞ்செய்வது குறித்துப் பாடியது

ஆட்டுக் கிசைந்தவ ரம்பல வாண ரவர்க்கெதிரே
நீட்டிற்று மால்வட பாலினிற் காலென நீநினையேல்
சூட்டுற்ற முப்புரஞ் செற்றவர் தம்மைச் சுமந்தலுத்த
மாட்டுக்கென் னேவிடங் கால்நீட்டல் சொல்ல வழக்கில்லையே.

தில்லைச் சபாநாதராகிய சிவபெருமான் திருக்கூத்திலே விருப்பங்கொண்டவர். அவர் எதிரே திருமால் வடதிசையில் தமது பாதத்தை நீட்டினர் என்பதைக் குற்றமாக நீ நினையாதே. ஏனெனின் திரிபுரங்கள் எரியுற்று அழியச் செய்தவராகிய சிவபெருமானைக் காளையாகிச் சுமந்து அலுத்தவர் அன்றோ திருமால்? எனவே இவ்வலுப்பினுல் கால் நீட்டுதற்கு

இடம் யாதென்று அவருக்குத் தெரியுமா? (அச்செயலைக் குற்றமாகக் கொள்ளுதல் பொருத்தமன்று என்பதாம்).

தில்லைக் கோவிந்தராஜர் கால் மாட்டிலிருந்து நடராஜர் நடனஞ் செய்கிறார் என்று வைணவர்கள் கூறியபோது அதற்கு விளக்கமாகப் புலவர் இப்பாடலைப் பாடினார் என்று கூறப்படுகிறது. காளைமாடு யஜமானனைச் சுமந்ததனால் ஏற்பட்ட உடல் வருத்தங்காரணமாகக் கால் நீட்டும் திசை அறியாது நீட்டிற்று என்பதாம்.

## 8. இதுவும் தில்லை நடராஜர் மேற்பாடிய நிந்தாஸ்துதி

வில்லாலடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பாலடிக்கவிக் காசினியில்
அல்லார் பொழில்தில்லை அம்பலவாணற்கொ ரன்னைபிதா
இல்லாத தாழ்வல்ல வோவிங்ஙனே யெளிதானதுவே.

இந்த உலகில் ஒருவன் வில்லால் அடிக்கவும், ஒருவன் செருப்பாலுதைக்கவும், கோபித்து ஒருவன் பிரம்பாலடிக்கவும், ஒருவன் கல்லால் எறியவும் இவர் இங்ஙனம் யாவர்க்கும் எளியரானது இவருக்குத் தாய்தந்தையர் இல்லாத குறையினாலன்றோ ? என்பது இப்பாடலின் பொருள். முன் 4ம் பாடல் விளக்கத்தில் கூறியபடி இவை யாவும் இறைவர்க்குநிந்தையாகாது புகழ்களேயாகும் எனக் கொள்க.

## 9. திருமாலே பரம் எனக் கூறிய வைணவர்க்குப் பதில் கூறியது

சத்தாதி யைந்தையும் தாங்காததெய்வந் தனிமறையும்
கர்த்தா வெனும்தெய்வ மம்பலத்தேகண்டு கண்களிரு
பத்தான வன்மைந்தன் பொய்த்தேவியைக் கொல்லப்
பித்தா னவன்றனையோ தெய்வமாகப் பிதற்றுவதே.

சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்து தன் மாத்திரையாலாகிய உடலைத் தாங்காத (அதாவது பிறப்பற்ற) கடவுளாகியவனும், ஒப்பற்ற வேதங்களும் உலகத்துக்குக்

கர்த்தா எனத்துதிக்கும் பெருமானுமான சிவபெருமானை சிற்சபையிலே தரிசித்தபிறகு, இராவணன் மைந்தனுன இந்திரசித்து என்பான் மாயாசீதையைக் கொல்வதைப் பார்த்து அது உண்மைச் சீதையே என்று அழுத மயல் கொண் டவனேயோ கடவுள் என்று பிதற்றுவது. (இந்திரசித்து மாயா சீதையைக் கொன்றது, இராமன் அதைப்பார்த்தழுதது இவை இராமாயணத்தில் கூறப்பட்ட செய்திகளேயாம்).

## 10. தில்லை நடராஜர் உடைமைகள் இன்னின்னவை என்று பாடியது

ஏறுகட்டிய கொட்டிலரங்கமே
ஈரிரண்டுமுகன் வாயி லாயமே
மாறுகண்ணப்பன் வாய்மடைப்பள்ளியே
வாய்த்தவோடை திருமால் வதனமே
வீறுசேர்சிறுத் தொண்டனில்லாளுந்தி
வேட்டநற்கறி காய்க்கின்ற தோட்டமே
நாறுபூம்பொழில் சூழ்தில்லையம்பல
நாரிபாகற்கு நாடக சாலையே.

(இதன் பொருள்) உமாதேவியாரை ஒரு பாகத்தே வைத்த சிவபெருமானுக்கு அவரது வாகனமான காளை மாட் டினைக் கட்டிய தொழுவம் ஸ்ரீரங்கமாகும். அவரது குதிரை களைக் கட்டும் இலாயம் நான்முகனது வாயாகும். அன்புருவ மான கண்ணப்பனது வாயே அவர்க்குரிய நிவேதனம் சமைக் கப்படும் மடைப்பள்ளி யாகும். அவரது பூசைக்குரிய தாமரைப் பூ மலரும் ஓடை திருமாலின் முகமேயாகும். சிறுத்தொண்ட நாயனரது மனைவியின் வயிறு பெருமான் விரும்பிய நல்ல காய்கறிகள் விளையும் தோட்டமாகும். அழகிய சோலைகள் சூழ்ந்த தில்லையம்பதியே அவரது நடனசாலையாகும்.

முப்புரங்களையும் அழிக்கச் சென்ற போது இறைவனர் ஏறிச்சென்ற தேரின் அச்சு முறிந்தபோது திருமால் காளை வடிவெடுத்துத் தாங்கினராகலின் அந்த ஏறு (காளை மாடு)

கட்டிய கொட்டகை ஸ்ரீரங்கம் (திருமால் கோயில்) என்றும், அந்தத் தேரின் குதிரைகளாய் அமைந்த நான்கு வேதங்களை யும் பிரமதேவன் எப்போதும் ஓதும் இயல்புடையவனாகலின் அவனது வாயை இறைவரது குதிரைகள் கட்டும் இலாயம் என்றும், கண்ணப்ப நாயனார் இறைவருக்கு ஊன் உணவு ஊட்டுமுன்பு தமது வாயில் அதனைச் சுவைத்துப் பார்த்து சுவையானவற்றை இறைவர்க்கு அளித்தமையால் அவரது திருவாயை மடைப்பள்ளி யென்றும், திருமால் சிவபெருமானை ஆயிரம் தாமரைமலர் கொண்டு அருச்சித்தபோது ஒரு மலர் குறையத் தமது ஒரு கண்ணையே எடுத்து மலராகத் திருவடியிற் சாத்தியமையால் அவரது முகமே தாமரைமலர் பூக்கும் நீரோடை எனவும், சிறுத்தொண்டர் பிள்ளைக்கறி சமைத்து இறைவருக்கு விருந்திட்டாராகலின் அப்பிள்ளையைப் பெற்ற சிறுத்தொண்டரின் மனைவியாரது வயிறே இறைவருக்குரிய காய்கறிகள் பயிரிடப்படும் தோட்டம் என்றும் இவ்வாறு நயம் படக் கூறிய அருமை படித்துப் படித்துச் சுவைத்தற்குரியது.

## 11. நடுவெழுத்தலங்காரம்.

திருமால்வா கனநாவா யிராசி யொன்று
சினைதெவிட்டார் மாதுலன்கோ கிலமிவ் வேழின்
உருவாமே ழெழுத்தினடு வெனக்குச் செய்தான்
உகந்துபதி ஞன்கிளையுந் தானே கொண்டான்
ஒருபாகத் திருத்தினன் கையி லேற்றுன்
ஒருமதலை தனக்களித்தா னுண்டான் பூண்டான்
பரிவாயொண் கரத்தமைத்தா னுகந்தா னிந்தப்
பைம்பொழிற்றில் லையுளாடும் பரமன் தானே.

ஒரு சில சொற்களின் நடுவெழுத்துக்களை ஒன்று சேர்த்துப் படித்தால் வேறு ஒரு சொல் வரும்படிப் பாடுவது நடுவெழுத் தலங்காரம் எனப்படும். இம்முறையில் பாடப்பட்ட இந்தப் பாடலின் பொருளைக் காண்போம்.

திருமால் வாகனம் கருடன். இவனுக்கு மற்றொரு பெயர் நாகாரி என்பது; நாவாய் என்பது படகு என்ற பொருளைத்

தரும் கலம் என்ற சொல்; இராசி ஒன்று என்பது இங்கு கன்னி யைக் குறித்தது; சினை என்பது கிளையென்ற பொருள்தரும் கவடு என்ற சொல்; தெவிட்டார் என்பது ஒரு பொருளை நுகர்வதில் ஆசைகுறையாதவர் என்று பொருள்படும் ஆரார் என்ற சொல்; மாதுலன் என்பது மாமன்; கோகிலம் இங்குப் பல்லி என்ற பொருளில் வந்தது. இவ்வேழு சொற்களும் முறையே (1) நாகாரி (2) கலம் (3) கன்னி (4) கவடு (5) ஆரார் (6) மாமன் (7) பல்லி என்பனவாம். இச்சொற்களின் நடுவெழுத்துக்களை எனக்குச் செய்தான் என்று புலவர் கூறு வது யாதெனில் நடுவெழுத்துக்களை ஒன்று சேர்த்துப் படித் தால் ''காலன் வராமல்'' என்று வரும். எனவே காலன் வராமல் எனக்குச் செய்தான் என்ருர்.

அடுத்தபடி உகந்து பதினன்கிளையும் தானே கொண் டான் என்பதைப் பார்ப்போம். மும்மூன்று எழுத்துக்களாலான இவ்வேழு சொற்களிலும் நடுவெழுத்து போக பதினன்கு எழுத்துக்கள் எஞ்சியுள்ளன. இவை ஏழு சொற்களைத்தரும. அவையாவன (1) நாரி (2) கம் (3) கனி (4) கடு (5) ஆர் (6) மான் (7) பலி என்பனவாம். இவற்றை முறையே ஒரு பாகத்திருத்தினன், கையிலேற்ருன், ஒரு மதலை தனக்களித் தான், உண்டான், பூண்டான், பரிவாயொண்கரத்து அமைத் தான், உகந்தான் இந்தப் பைம்பொழில் தில்லையுள் ஆடும் பரமன் தானே எனப்பாடல் முடிகிறது.

இதை இன்னம் சற்று விளக்கமாகக் கூறினல்

(1) நாரியைப் பாகத்திருத்தினன். (நாரி-உமாதேவி)

(2) கம் என்ற பிரம கபாலத்தைக் கையில் ஏற்ருன்.

(3) கனி அதாவது மாங்கனியை ஒரு குமாரனகிய கணபதிக்கு அளித்தான்.

(4) கடு அதாவது விஷத்தை உண்டான்.

(5) ஆர் என்ற ஆத்தியின் பூவைத் தலையில் பூண்டான்.

(6) மான் இதனைப் பரிவாய் ஒண் கரத்து அமைத் ான்.

(7) பலி அதாவது பிச்சையை உகந்தான் (விரும்பினுன்).

எனவரும். எஞ்சிய பதினுன்கினையும் தானே கொண்டான் என்பதை இவ்வாறு விளச்கமாக அறிக.

காளமேகப்புலவர் சிவதீக்ஷைபெற்ற பெரும் புலவர். திருத்தலங்கள் சிலவற்றைத் தரிசித்து இவர் பாடிய மற்றைப் பாடல்களையும் ஏனைய சில புலவர்கள் அவ்வப்போது பெருமான் மீது பாடிய தனிப்பாடல்களையும் வரும் ஆண்டு மலர்களில் தொடர்ந்து பிரசுரிக்க அவனருளை வேண்டுகின்ருேம்.

சிவம்.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# சிவலீலார்ணவத்தில் மாணிக்கவாசகர் சரிதம்

ஸ்ரீ P. S. ஸுப்ரமண்யம், இஞ்ஜினியர், சென்னை.

தொண்டைமண்டலத்திலுள்ள அடையப்பலம் கிராமத்தில் அவதரித்து சிவோத்கர்ஷ கிரந்தங்களும் இதர கிரந்தங்களும் எழுதி பரம சிவபக்தராக இருந்துவந்த ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதரின் தம்பியின் பேரனுன ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதரும் தன் பெரிய பாட்டனுர் போலவே பரம சிவபக்தராக இருந்து பல கிரந்தங்களை இயற்றி மதுரையில் திருமலைநாயக்க அரசனிடம் மந்திரியாகப் பணியாற்றி அவ்வரசனின் அன்பையும் பெருமிக்க மரியாதையையும் பெற்றவராகி தன் கடைசி நாட்களை பாண்டிய நாட்டின் தென் பகுதியில் தாம்ரபர்ணி நதியின் வடகரையில் உள்ள பாலாமடை கிராமத்தில் கழித்து அங்கு ஸித்தியடைந்து ப்ரஹ்மீபூதாளாய் இன்றைக்கும் பிரகாசித்துவருகிருர் என்பது பிரஸித்தமே. அந்த மஹான் உலகுக்குத் தந்தருளியிருக்கிற பல கிரந்தங்களில் 'சிவலீலார்ணவம்' என்பது மிகவும் சிறந்தது. ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் பதிப்புப்படி 22 ஸர்க்கங்களில் 1998 சுலோகங்கள் கொண்டது. இக்காவியம் மதுரையம்பதியில் ஸ்ரீ மீனுக்ஷி ஸமேதராய் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ஸுந்தரேசுவரரின் லீலைகளை வர்ணிக்கிறது.

மதுரை மாநகரிலும் (ஹாலாஸ்யக்ஷேத்ரம்) அதைச்சுற்றியுள்ள பகுதிகளிலும் ஸ்ரீ சோமசுந்தரக்கடவுள் தன்னுடைய பக்தர்களுக்கு அருள்புரிந்து, தீமைகளை நீக்கி, ஆட்கொண்ட

செயல்கள், ஹாலாஸ்யமாஹாத்மியம், (ஸம்ஸ்கிருதநூல்) பரஞ்சோதிமுனிவர் இயற்றியுள்ள திருவிளையாடற் புராணம் (தமிழ்) இவைகளில் மிக அற்புதமாக விவரிக்கப்பட்டுள்ளன. மனதை உருக்கக்கூடிய பாடல்களாகவும் உரைநடையாகவும், தென்பாண்டிநாட்டின் நாயகனான கண் சுமந்த நெற்றிக் கடவுளின் கீர்த்தியையும் அவன்பக்தர்களுக்குத்தந்த கருணைத் தேனையும், வினைகடிந்ததையும், கன்னல் பெருக்குப்போலக் கூறுகின்றன இக்காவியங்கள். இவற்றைத்தழுவி ஸ்ரீ நீல கண்டதீக்ஷிதர்சிவலீலார்ணவக் காவ்யத்தை, பக்தியும், ஆனந் தமும் பெருகும்படி நவரஸங்களுடன் அமைத்து எழுதியுள் ளார். எல்லாவற்றிற்கும் சிகரமாக தனது சிவோத்கர்ஷ -சிவாத்வைதக் கொள்கையையும், உமாதேவியையும் பரம சிவனையும் எப்பொழுதும்சேர்ந்தே தியானிக்கவேண்டுமென்ற நியதியையும் மஹோன்னதமான சுலோகங்களால் வர்ணிக் கிருர். இதில் வேதநெறி, சைவநெறி, பக்திநெறிகளை அறி யலாம். ஸ்ரீ சோமசுந்தரர் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு எக்காலத்திற்கும் உண்மையெனப்படும்படி செய்தருளிய 64 திருவிளையாடல்களையும் நன்கு விளக்கிக்காட்டுகின்றன திரு விளையாடற் புராணமும், ஹாலாஸ்யமாஹாத்மியமும், சிவ லிலார்ணவமும்.

பரமேசுவரனுடைய லீலைகள் அனந்தம். அவைகளில் 64 லீலைகளை இக்காவ்யத்தில் காணலாம். பரமேசுவரியின் 64 கலைகளுக்கு ஸமமாக இந்த 64 லீலைகள் அமைந்தன போலும். ஹாலாஸ்ய க்ஷேத்திரத்தில் இன்றுவரையிலும் கொண்டாடப்படுகின்ற உத்ஸவங்கள் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷித ரால் நிர்ணயிக்கப்பட்டு, திருமலைநாயக்கரால் ஏற்றுக்கொள் ளப்பட்டவை என்பதை சரித்திரம் கூறும்.

பாண்டிய தேசத்தின் பெருமையையும், தாமிரபர்ணி நதி யின் மஹத்துவத்தையும், கதம்பவனமான மதுரையையும் வர்ணனை செய்து, அந்த வனத்தில் ஒரு கதம்பமரத்தடியில் ஸர்வாகமங்களுக்கும் தாத்பர்யபூதரான பரமேசுவரன் ஒரு

லிங்கரூபமாக ஆவிர்பவித்திருக்கிருர் என்று குதூஹலமாகச் சொல்கிருர்.

[1]अस्ति क्षितेराभरणायमानः
पारेसमुद्रं स हि पाण्डयदेशः ।
आशामगस्त्याध्युषितां गतोऽपि
सर्वोत्तरो यो जगति प्रतीतः ।।

அஸ்தி க்ஷிதேராபரணுயமான:
பாரேஸமுத்ரம் ஸ ஹி பாண்ட்யதேச: I
ஆசாமகஸ்த்யாத்யுஷிதாம் கதோऽபி
ஸர்வோத்தரோ யோ ஜகதி ப்ரதீத: II

அகஸ்தியர் வஸிக்கும் திக்கான தக்ஷிணத்தில் அமைந்திருந்த போதிலும் அந்தப் பாண்டிய நாடானது ஸர்வஜகத்திலேயும் உத்தரமாக (உத்தமமாக) இருக்கிறது.

[2]यत्सङ्गमादेव भवन्ति मुक्ताः
सा जाह्नवी सर्वजनीनमेतत् ।
ततो विदुः दक्षिणजाह्नवीति
तादृग्विधां यत्र हि ताम्रपर्णीम् ।।

யத்ஸங்கமாதேவ பவந்தி முக்தா:
ஸா ஜாஹ்னவீ ஸர்வஜனீனமேதத் I
ததோ விது: தக்ஷிணஜாஹ்னவீதி
தாத்ருக்விதாம் யத்ர ஹி தாம்ரபர்ணீம் II

கங்கையுடன் ஸங்கமத்தால் ஜனங்கள் முக்தர்களாகிருர்கள். (मुक्ता:) தாம்ரபர்ணி ஸங்கமத்தால் ஸமுத்திரத்தில்

(1) சி. லீ. 2-1. (2) சி. லீ. 2-18.

(मुक्ता:) (முத்துக்கள்) உண்டாகின்றன. ஆகையினுலே தாம்ர பர்ணியை தக்ஷிண கங்கை என்று கொண்டாடுகிருர்கள்.

[1]तस्मिन विशाले तरुणेन्दुमौळेः
आवासभूतं पदमद्भुतानाम् ।
वनं जगत्पावनमस्ति किंचित्
नीपद्रुमाणां निकषा वृषाद्रिम् ॥

தஸ்மின் விசாலே தருணேந்து மெளளே:
ஆவாஸபூதம் பதமத்புதானும் ।
வனம் ஜகத்பாவனமஸ்தி கிஞ்சித்
நீபத்ருமாணும் நிகஷா வ்ருஷாத்ரிம் ॥

இப்படிப்பட்ட தேசத்தில் பரமேசுவரனுக்குகந்த அத்புத மானதும், பரமபாவனமானதுமான ஒரு கதம்பவனம் இருக் கிறது.

[2]तस्मिन् कदम्बद्रुममूलसीम्नि तपः परीपाकफलं जनानाम्।
आस्ते जगन्मङ्गळमङ्गजारेः लिङ्गं दयाविग्रहवत्त्वलिङ्गम्

தஸ்மின் கதம்ப த்ருமமூல ஸீம்நி
தப: பரீபாகபலம் ஜனனும்
ஆஸ்தே ஜகன்மங்களமங்கஜாரே:
லிங்கம் தயாவிக்ரஹவத்தவ லிங்கம் ॥

அங்கு ஒரு கதம்ப விருக்ஷத்தினடியில் சர்வஜனங்களின் தபஸ்ஸின் பலனுக உமையின்பாகன் சர்வமங்களமூர்த்தி தயை யின் அடையாளமோவென்னும்படி ஒரு லிங்க ரூபமாக விளங் குகிருர். வேதங்களின் பல சாகைகளில் (கிளைகள்) பலவித மான பலன்கள் (பழங்கள்) தோன்றிய போதிலும் எல்லா

---

(1) சி. லி. 2-25. (2) சி. லி. 2-43.

ஆகமங்களுக்கும் பலன் (பழம்) ஒன்றுதான். அதுதான் கதம்ப விருக்ஷத்தின் அடியிலிருப்பது.

[1]शाखासु शाखासु फलानि नाना परमार्थतस्तु ।
सर्वागमानां फलमेकमेव तच्च कदम्बमूले ।

சாகாஸு சாகாஸு பலாநி நாநா பரமார்த்ததஸ்து ।
ஸர்வாகமாநும் பலமேகமேவ தச்ச கதம்பமூலே ।

இவ்விதம் ஆவிர்பவித்த சுந்தரேசுவரர், இந்திரனுக்கு ப்ரம்மஹத்தி தோஷம் நீங்கச்செய்தது முதலாக வன்னிமரம், கிணறு, சிவலிங்கம் இம்மூன்றையும் சாக்ஷியாக வரவழைத்தது வரையுள்ள 64 திருவிளையாடல்கள் செய்தருளினர்.

இந்த 64 லீலைகளில் 58-வதிலிருந்து 61 முடிய சோம சுந்தரக்கடவுள் சிவனடியார் மாணிக்கவாசகருக்கு அருள் செய்த வரலாறு. சிவலீலார்ணவத்தின் 21-வது சர்க்கம் முழுவதுமே மணிவாசகரின் சரித்திரம்தான். அபரிமிதமான பக்தியின் இயல்புகளும் ஆச்சரியம், பச்சாத்தாபம், ஏசல், ஏக்கம் முதலான காவ்யக்கலைகளும், வேதவேதாந்த தத்வங்களும் நிறைந்த 104 சுலோகங்கள் கொண்டது இந்த சர்க்கம்.

உலக இலக்கியங்களுள் தலைசிறந்த ஒன்று என ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கும் திருவாசகத்தைத் தந்தருளிய மணிவாசகப் பெருமானின் சரித்திரத்தைச் சொல்லும் தீக்ஷிதரின் வாக்கு வாசிப்போருக்குப் பேரானந்தத்தைக் கொடுக்கும். விண்ணுக்கொரு மருந்தும் வேதப்பொருளுமான பரமசிவனை நினைப்பது ஆனந்தம், தீக்ஷிதரின் வாக்கால் அநுபவிப்பது பரமானந்தம், அதிலும் தீக்ஷிதரின் வாக்கால் அமைந்த மணிவாசகரின் சரித்திரம் பேரானந்தம்.

---

(1) சி. லீ. 2-33

மாணிக்கவாசகர் மதுரையம்பதிக்குச் சுமார் 12 மைல் தூரத்திலுள்ள திருவாதவூர் என்கிற கிராமத்தில் பிறந்தவர். சிவபக்தி நிறைந்த பிராம்மண குலத்தில் தோன்றினவர். மஹாமேதை. சகல சாஸ்திரங்களிலும் வியுத்பன்னர். திருவாதவூரில் பிறந்தமையால் திருவாதவூரர் (வாதபுரீசுவரர்) என்று அழைக்கப்பட்டார். திருவாசகத்தைப் பாடினதால், மாணிக்கவாசகர், மணிவாசகப் பெருமான் என்றும் அழைக்கப்படுவர். அவர் காலத்தில் மதுரையை ஆண்டுவந்த அரிமர்த்தன பாண்டியனுக்கு திருவாதவூரர் ஸபா பண்டிதராகவும், வித்வத் பூஷணமாகவும், மந்திரியாகவும், இந்திரனுக்கு பிருஹஸ்பதிபோல இருந்துவந்தார். பூர்வஜன்ம வாஸனையினுல் ஏற்பட்ட சிவபக்தி மேலும் பெருகி அரசனுல் குதிரைகள் வாங்குவதற்காகக் கொடுக்கப்பட்ட பணத்தை, சிவகைங்கர்யங்களில் செலவு செய்து, அதனுல் அரசனின் துன்புறுத்தலுக்கு ஆளாகி, சோமசுந்தரக் கடவுளின் கருணையால் ஆட்கொள்ளப்பட்டு, கடைசியில் சிதம்பர க்ஷேத்திரத்தில் சிவனுடன் இரண்டறக் கலந்தார் என்பது அவருடைய சரித்திரம். சுந்தரேசுவரர் மணிவாசகரை ஆட்கொண்டவிதமோவெனில், நரியைப் பரியாக்கியது, பரியை நரியாக்கியது, வைகை ஆற்றில் பெருக்கு உண்டுபண்ணினது, பிட்டுக்கு மண் சுமந்தது— என்ற நான்கு லீலைகளில் தெளிவாகவுள்ளது. தீக்ஷிதர் திருவாதவூரரை,

[1]आस्थानभूषामणिरस्य राज्ञः
सर्वागमज्ञः सचिवः सुमेधाः ।
आसीत् द्विजो वातपुरीशनामा
वाचस्पतिः वासवसंसदीव ।।

ஆஸ்தான பூஷா மணிரஸ்ய ராக்ஞ:
ஸர்வாகமக்ஞ: ஸசிவ: ஸுமேதா: 1

(1) சி. லீ. 21-2.

ஆஸீத்த்விஜோ வாதபுரீச நாமா
வாசஸ்பதி: வாஸவஸம்ஸதீவ ll

என்றவாறு அறிமுகப்படுத்துகிருர். பாண்டியன் ஏராள மாகப் பணத்தை திருவாதவூரரிடம்தந்து உயர்ந்த குதிரைகளை வாங்கிக் கொண்டு வரவேண்டுமென்று சோழ தேசத்திலுள்ள துறைமுகங்களுக்குச் செல்லும்படி ஆஞ்ஞாபித்தார்.

வாதவூரரும் சில நாட்கள் பிரயாணம் செய்து சமுத்திரத் திலிருந்து மேற்குதிக்கில் ஒரு யோஜனை தூரத்தில், மா, வாழை இவைகள் நிறைந்த ஒரு பரமேசுவர க்ஷேத்திரத்தைக் கண்டார்.

[1]माकन्दरम्भावनसान्द्रमेकं माहेश्वरं धाम समालुलोके ॥

மாகந்த ரம்பாவன ஸாந்த்ரமேகம்
மாஹேச்வரம் தாம ஸமாலுலோகே ll

பக்தகோடிகள் நிறைந்த அந்த வல்மீகநாதரின் இடத் தைப் பார்த்ததும் வாதபுரீசுவரருக்கு வர்ணிக்க முடியாத ஸ்வாபாவிகமான அந்தக்கரண சுத்தியானது பூர்வஜன்ம புண்யவசத்தால் ஏற்பட்டது.

[2]अध्यासितं पाशुपतैः महद्भिः
आलक्ष्य वल्मीकपतेः पदं तत् ।
अप्राकृतीं भाग्यवशात् ततोऽयं
आध्यात्मिकीं कामपि शुद्धिमूहे ॥

அத்யாஸிதம் பாசுபதை: மஹத்பி:
ஆலக்ஷ்ய வல்மீகபதே: பதம்தத் l
அப்ராக்ருதீம் பாக்யவசாத் ததோऽயம்
ஆத்யாத்மிகீம் காமபி சுத்திமூஹே ll

---

(1) சி. லீ. 21-16. (2) சி. லீ. 21-17.

அங்கு மதுரமான வார்த்தைகளினால் நூற்றுக்கணக்கான மஹரிஷிகளுக்கு உபதேசம் செய்து கொண்டிருக்கிற கருணையே வடிவெடுத்த ஆசார்ய மூர்த்தியாக சந்திரசூடனைத் தன் கண்ணால் பிரத்யக்ஷமாகப் பார்த்தார்.

[1]आस्थाय कारुण्यरसैकरूपां
आचार्यमूर्त्तिं मधुरैः वचोभिः ।
प्रबोधयन्तं शतशो महर्षीन्
प्रत्यक्षं ऐक्षिष्ट स चन्द्रचूडम् ॥

ஆஸ்தாய காருண்யரஸைகரூபாம்
ஆசார்யமூர்த்திம் மதுரை: வசோபி: ।
ப்ரபோதயந்தம் சதசோ மஹர்ஷீன்
ப்ரத்யக்ஷம் ஐக்ஷிஷ்ட ஸ சந்த்ரசூடம் ॥

கண்களில் நீர்ததும்ப ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்த வாதபுரீசுவரரை தூரத்திலிருந்து பார்த்து பரமகருணையுடன் அவரை அருகில் வரும்படியாக பரமேசுவரன் ஆஞ்ஞாபித்தார். அவருடைய உன்னதமான மனபக்குவ நிலையை ஊஹித்துப் பார்த்து சிவஞான தீக்ஷையால் அவரை ஆட்கொள்ளவும் செய்தார்.

[2]संभावयन् नैष्ठिकदीक्षया तं
चन्द्रार्धचूडः स्वयं अन्वगृह्णात् ॥

ஸம்பாவயன் நைஷ்டிக தீக்ஷயா தம்
சந்த்ரார்த்தசூட: ஸ்வயம் அன்வக்ருஹ்ணத் ॥

இந்த சம்பவத்தை மணிவாசகப்பெருமானே தனது திருவாசகத்தில் சொல்லலுற்றார் :—

''மறையோர் கோல நெறியேபோற்றி'' (போ.அ.189)

---

(1) சி. லீ 21-18. (2) சி. லீ. 21-20.

''மெய்தரு வேதியனுகி வினைகெட,
கைதரவல்ல கடவுள் போற்றி'', (போ.அ.88-89)

மாஹேச்வர ஆச்ரமத்தை அடைந்ததும் வாதபுரீசுவரர் ஸகல பந்தங்களிலிருந்தும் அறுபட்டவராய் குதிரை வாங்கக் கொண்டு வந்திருந்த எல்லா திரவியங்களாலேயும் பரமேசு வரனை ஆராதித்து, அந்த ஆராதனையே தன் அரசனுக்கு ரக்ஷை, ஸகல மங்களங்களேயும் தரும் என்ற திருப்தியுடன் இருந்துவந்தார். சிவாராதனையின் பலம் என்ன? நசித்துப் போகக்கூடிய ஸாதனங்களின் பலம் என்ன? அரசனின் செல்வமும் நல்ல வழியில் ஸம்பாதிக்கப்பட்டதனுலே ஸத்கார் யமான சிவாராதனைக்கு உபயோகப்பட்டது. அரசன் தூதர் களை அனுப்பி அவர்கள் மூலம் குதிரைகள் வாங்கியாய்விட் டதா என்று கேட்டதற்கு வாதபுரீசுவரரும் குரைகளுடன் வந்து சேருகிறேன் என்று பரமேசுவரனின் ஆஞ்ஞைப்படி பதில் சொல்லியனுப்பினுர்.

மறுபடியும் பரமேசுவரன், 'தானே விலைமதிக்க முடியாத கணக்கற்ற குதிரைகளைக்கொண்டு வருகிறேன், அரசனை ஸந் தேகப்படாமல் இருக்கச்சொல்' என்று நிச்சயமாகச் சொல் லவே, வாதபுரீசுவரர் அதை பூர்ணமாக நம்பி மதுரைக்குத் திரும்பி வந்து அரசனிடம் குதிரைகள் வந்துவிடும் என்று வாக்குறுதி செய்தார். ஸுந்தரேசுவரர் ஆலயத்துக்குச் சென்று தான் அரசனிடம் சொன்ன வாக்குறுதியை ஸுந்த ரேசுவரரிடமும் தெரியப்படுத்தினுர். மறுநாள் ஸாயங்காலம் வரையிலும் குதிரைகள் வரவில்லை. பண்டியனும் குதிரைகள் வரும் திக்கை நோக்கிப் பார்த்துப் பார்த்து அலுத்துப்போய் ரொம்பவும் கொபங்கொண்டார்.

இந்த இடத்தில் தீக்ஷிதர், ராஜகார்யங்களில், கெட்ட எண்ணம் படைத்தவர்கள் எந்த ஸந்தர்ப்பத்தையும் பயன் படுத்தத் தயங்கமாட்டார்கள் என்பதைச் சித்தரித்துக்காட் டுகிருர். (தீக்ஷிதரும் இந்தவிதமான பல தொல்லைகளுக்கு

ஆளானுர் என்கிறது அவருடைய சரித்திரம்.) கோள் சொல்லு பவர்கள், க்ரூரமான மனமுள்ளவர்கள், ஸந்தர்ப்பவாதிகள் பாண்டியனின் கோபத்தைத் தூண்டிவிட்டார்களாம். வாத புரீசுவரரை அவமானப்பேச்சுக்களால் வெகுகால த்வேஷம் காரணமாக துன்புறுத்தினர்கள். வாதபுரீசுவரரும் துன்பத் தைப் பொறுக்க இயலாமல் பெரிதும் புலம்பினுர்.

''ஹே ப்ரபோ, பரமேசுவரா, நீ என்னுடைய கதறலைக் கேட்காமலிருக்கிருயே, விஷ்ணு பிரம்மாதிகளுடன் ஏதாவது ஆலோசனையில் ஈடுபட்டிருக்கிருயா, அல்லது பார்வதியின் மதுரமான பேச்சில் மயங்கி இருக்கிருயா, நான் வெகுகாலம் மாயை, காமம், கர்மா இவை மூன்றினுல் கட்டுப்பட்டு இருந்து வருகிறேன். இவைகளை நீ நீக்குவாய் என்ற உறுதியுட னிருக்கும் சமயம் இப்பொழுது நான்காவதாக இன்ஞெரு பந்தத்தில் தள்ளியிருக்கிருயே, இது நியாயமா? காலகதி, கர்ம பலன் என்று எத்தனையோ பேர்கள் சொல்லுவார்கள். அவை என்னை என்ன செய்யமுடியுமென்று ஜகத்தையே த்ரு ணமாக நினைத்து உன்னையே சரண் அடைந்த எனக்கு இப் படி ஒரு தசை வந்திருக்கிறதே! இது உனக்குத் தெரியாதா என்ன, இதனுல் வரும் கீர்த்தியோ, அபகீர்த்தியோ உன்னைச் சேர்ந்ததுதானே, நான் அரசனிடத்திலும் பயப்படவில்லை, அரச சேவகர்களிடத்திலும் பயப்படவில்லை, அவர்கள் மரணத் திற்கும்மேல் என்ன செய்வார்கள்? ஆனுல் இப்படி யமனிடம் அகப்பட்ட என்னிடத்தில் நீ உதாஸினமாக இருப்பதினுல் உன்னுடைய ஸ்தானம் என்னவாகுமென்பதே என்னை நடுங்க வைக்கிறது.

உலகில் ஒன்றையே பிடித்துக்கொள்ள வேண்டும் என்ற நீதியைப் புறக்கணித்து இருவரைப் பிடித்துக்கொண்டேன். ஒருவரில்லாவிட்டாலும் ஒருவர் காப்பாற்றுவாரென்று. அதா வது உனது இரு திருவடிகளைப் பிடித்துக்கொண்டேன். எனக்கு இந்தப் பெரிய ஆபத்து வந்த சமயத்தில் இருவரும் என்னைக் காப்பாற்றவில்லை. என்னைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பை வலது பாதம் இடது பாதத்திற்கும், இடது

பாதம் வலது பாதத்திற்கும் கொடுத்துவிட்டபடியால் இருவரும் என்னை உபேக்ஷை செய்து விட்டார்களோ என்று நினைக்கிறேன். நான் இப்பொழுது இருக்கும் நிலையில் ஞானயோகங்களினாலோ, கர்மானுஷ்டானங்களினாலோ, தபஸ்ஸினாலோ உன்னை ஸந்தோஷிக்கச் செய்ய முடியாது. அழுது, புரண்டு என்னுடைய ஏழ்மைத் தன்மையைக் காண்பித்தே உன்னை ஸந்தோஷப்படுத்தி, திரும்பவும் உறுதியாக என்னுடைய தாஸ்யப்பதவியை நன்கு வஹிக்கிறேன், (தாஸனாகவே இருக்கிறேன்) என்று கதறுகிறார். (சுலோகம் 21-32) மேலும்,

[1]प्रारब्धकर्मणि चलति अविलङ्घनीये
भक्तिः करिष्यति किमीशपदार्पितेति ।
दुर्निश्चयो हतधियामिह दुःश्रवोऽयं
निन्देव ते मनसि मे परिवर्तमानः ॥

ப்ராரப்தகர்மணி சலதி அவிலங்கனீயே
பக்தி : கரிஷ்யதி கிமீசபதார்பிதேதி ।
துர்நிச்சயோ ஹததியாமிஹ துச்ரவோऽயம்
நிந்தேவ தே மனஸி மே பரிவர்தமாந: ॥

தாண்டமுடியாத ப்ராரப்தகர்மா ஆட்டிக்கொண்டிருக்கும் பொழுது ஈசுவரனிடத்தில் அர்ப்பணம் செய்விக்கப்பட்ட பக்தியானது என்ன செய்யமுடியும் (ஒன்றும் செய்யமுடியாது) என்று கேள்வி கேட்கும் முட்டாள்களின் பேச்சுக்கள் உன்னை நிந்தனை செய்வதுபோலவே என்று என் மனம் எண்ணுகிறது. இந்த மன வேதனையை திருவிளையாடல் புராணத்திலும் பின் வருமாறு சித்திரிக்கிறார்.

ஊரார் உனைச்சிப்ப தோராய் என்றுன்னடிமைக்கு
ஆராய் அடியேன் அயர்வேன் அஃதறிந்தும் வாராய்......
உன் தன்மை இதுவோ, பரமேட்டி.

---

1. சிவ. லீ. 21-33.

மேலும் வாதவூரர், என்னைக் காப்பாற்றுவதற்கு நீ என்ன புதிதாக அவதாரம் எடுக்கவேண்டுமா, இது உனக்குப்பழக்க மில்லாததா அல்லது மல்லயுத்தம் செய்யவேண்டுமா, இவை ஒன்றுமே வேண்டாம், நீ மனஸினால் நினைத்தாலே போதுமே, ஆனால் ஒன்று தோன்றுகிறது, கணக்கிலடங்காத என் பாபங்கள் உங்களால் ஒன்றும் செய்யமுடியாதபடி ஜெயித்துவிட்டன. தவிரவும், என்னுடைய பக்தி திடமாக இருந்தால் இவ்விதக் கஷ்டங்கள் ஏற்படுமா (ஏற்படாது) என்கிற உண்மை என் அந்தரங்கத்தில் இருக்கத்தான் செய்கிறது. அந்த விஷயம் மற்ற யாருக்குத் தெரியும்? நான் உயர்ந்த பக்திமான் என்றே உலகம் (உண்மை தெரியாமல்) சொல்லுகிறது. உன்னையும் பக்தனுக்குக் கட்டுப்பட்டவன் என்றும் சொல்லுகிறது. இந்த உலகப்பேச்சுக்காகவாவது நீ எனக்கு தயை செய்யமாட்டாயா? செய்யத்தான் வேண்டும்.

ஹே, சந்திரமௌளே! உன்னுடைய சரணங்களில் இந்த மதியீனன் ஒரு பண்டிதனைப்போல பாவித்துப் புலம்பியிருக்கிறானே, அதை மன்னிக்கவேண்டும். எனக்குப் பேச என்ன அதிகாரம் இருக்கிறது? என்னவோ சொன்னேன். ஸ்வாமி, அதைத் தீர அலசிப்பாருங்கள் (ஏதாவது நியாயம் இருக்கிறதா என்று). அதைத்தள்ளினாலும் தள்ளிவிடுங்கள்.

வாதபுரீசுவரர் தைன்யத்துடன் புலம்பியதைக் கேட்டு கருணாநிதியான சந்திரசேகரனும் லக்ஷக்கணக்கான குதிரைகளைக் கொண்டு வந்து காண்பித்தார். தானே குதிரை காஸாரியாகவும் ஆவிர்ப்பவித்தார். ''மதுரைப் பெருநன்மாநகரிருந்து குதிரைச் சேவகனாகிய கொள்கையும்'' என்கிறது திருவாசகம். அக்குதிரைகளோ, ஆம்பல் பூ நிறம், கண்ணின் மை நிறம், சிவப்பு நிறம், மாதுளைப்பூ நிறம், தங்கநிறம், பொன்கொன்றை நிறம் இவ்விதமாகப் பல நிறமுள்ளவைகள். கடுமையான கனைப்பினாலேயே எதிரிகளைப் பயமுறுத்துபவைகளாயும் வேகமாக ஓடுகின்றனவும், உயர்ந்த நடைபோட்டு கம்பீரமாக வருகின்றனவுமான குதிரைகள் புழுதியைக்

கிளப்பிக்கொண்டு வந்தன. தீக்ஷிதரின் சுலோகங்கள் குதிரைகளின் நடைபோலசப்த ஜாலங்களுடன் அமைந்திருக்கின்றன. அரிமர்த்தன பாண்டியனும், அந்த அதிருபவானுயும் மரியாதையாக வணக்கம் செய்கிறவனுயுமுள்ள அந்த காஸாரியை வெகு ஆச்சரியத்துடன் கண்கொட்டாமல் பார்த்தான். இந்த வைபவத்தை "பரிமாவின் மிசைப்பயின்ற வண்ணமும்" என்கிறது திருவாசகம். லஜ்ஜையாலும் பச்சாத்தாபத்தினுலும் பாதிக்கப்பட்டவனுய் பாண்டியன் வாதபுரீசுவரருக்கு நல்ல வார்த்தைகள் சொல்லி காஸாரி சிரேஷ்டன் பக்கத்தில் வந்ததும் ஸந்தோஷமாக எதிர் கொண்டு சென்ருன். காஸாரியும் குதிரை விற்க வந்தவனுகப் பேச ஆரம்பித்தான்.

[1]आनीतमासीत् धनं अश्वहेतोः
अनेन यत्ते सचिवेन राजन् ।
तत्सर्वमादाय तवैव भूत्यै
मयाहृताः पश्य शिवास्तुरङ्गाः ॥

ஆனீதமாஸீத் தனம் அச்வஹேதோ:
அனேன யத்தே ஸசிவேன ராஜன் ।
தத்ஸர்வமாதாய தவைவ பூத்யை
மயாஹ்ருதா: பச்ய சிவாஸ்துரங்கா: ॥

உன்னுடைய இந்த மந்திரியால் குதிரை வாங்குவதற்காகக் கொண்டுவரப்பட்ட தனத்தைப் பெற்றுக் கொண்டு உன்னுடைய க்ஷேமத்துக்காக மங்களகரமான குதிரைகளைக் கொண்டுவந்திருக்கிறேன், பார்! மங்களகரமானவை, நரிகள் என்று இருபொருள் கொண்ட 'சிவா:' என்ற பதம் கவனிக்கத்தக்கது.

---

1. சிவ. 21-47.

[1]गुल्मेषु कुञ्जेषु वनोदरेषु
केदारकेषूपवनेषु चामी ।
स्वच्छन्दचारा लघुविक्रमाश्च
तरन्ति तोयेषु अपि दुस्तरेषु ॥

குல்மேஷு குஞ்ஜேஷு வனோதரேஷு
கேதாரகேஷூபவனேஷு சாமி ।
ஸ்வச்சந்தசாரா லகுவிக்ரமாச்ச
தரந்தி தோயேஷு அபிதுஸ்தரேஷு ॥

(நிர்யத்னமாகக் கொட்டும் ஸ்ரீ தீக்ஷிதரின் வாக்குக்கு இந்த சுலோகம் ஓர் உதாரணம்) புதர்களிலும் பூஞ்சோலை களிலும், நடுக்காடுகளிலும் வயல்களிலும் உத்யான வனங் களிலேயும், தங்கள் இஷ்டப்படி ஸஞ்சாரம் செய்ய அலக்ஷ்ய மான கதியோடு கூடினவைகள் இக்குதிரைகள், ஆழமான நீர் நிலைகளை நீந்தித் தாண்டக்கூடிய சக்தி உடையவைகளும் கூட-என்று தன் குதிரைகளை அறிமுகப்படுத்தினர் காஸாரி உருவம் கொண்ட சந்திரசேகரர். (இந்த வர்ணனை முழு வதும் நரிகளுக்கும் பொருந்தும்) மேலும் சிலேடையாகச் சொல்லுகிறார்.

[2]न श्वो अयमस्तीति किलाश्वशब्दः
तन्त्रैर्निरुक्तो विदितस्तवापि ।
सम्यक् परीक्ष्य त्वं इमान् गृहाण
धनं ममैतत् तुरगास्तवेमे ॥

(न श्वः = अश्वः)

நச்வோ அயமஸ்தீதி கிலாச்வசப்த:
தந்த்ரைர்நிருக்தோ விதிதஸ்தவாபி ।

1. சிவ, லீ 21-48 2. சிவ. லீ, 21-49

ஸம்யக் பரீக்ஷ்ய த்வம் இமான் க்ருஹாண
தனம் மமைதத் துரகாஸ்தவேமே ||

அசுவசப்தத்துக்கு "நாளை இருக்காது" என்ற பொருள் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது என்பது தங்களுக்குத் தெரிந்ததுதானே, நன்கு சோதனை செய்து இவைகளைப் பெற்றுக்கொள்ளும். பணம் என்னைச்சேர்ந்தது, குதிரைகள் தங்களைச்சேர்ந்தன. அரசனோ காஸாரியின் கம்பீரத்திலும் குதிரைகளின் லாவண்யத்திலும் ஈடுபட்டிருந்தானேயன்றி, வார்த்தைகளின் தாத்பர்யத்தை அறிந்தானில்லை. ஸர்வேசுவரனின் மாயை அல்லவா! சரி என்று ஒப்புக்கொண்டு பிரதி வந்தனம் செய்து, ஸன்மானங்களால் கௌரவித்து காஸாரியை விடைசொல்லி அனுப்பினான். தன்னுடைய குதிரை லாயங்களில் ஏற்கெனவே உள்ள மற்றக்குதிரைகளுடன் புதிய குதிரைகளைக் கட்டுப்படி ஆக்ஞாபித்தான் (47, 48, 49-வது சுலோகங்களில் ஈசுவரன் ஸத்யவாக்குச் சொல்லியும், 47-வது சுலோகத்தில் பின்னால் வரும் மங்களகரமான செயல்களை ஸூசிப்பித்தும் பாண்டியனுக்கு அநுக்ரஹமாகவே செய்தார்.) மணிவாசகர் இந்த அற்புதலீலையைப் பின்வருமாறு திருவாசகத்தில் உறுதி கூறுகிறார்.

"நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்,
ஆண்டு கொண்டருள அழகுறுதிருவடி
பாண்டியன் தனக்குப் பரிமாவிற்று......".

(கீ. தி. 36—38)

"நரியைக் குதிரைப் பரி ஆக்கி,
ஞாலமெல்லாம் நிகழ்வித்து,
பெரிய தென்னன் மதுரை எல்லாம்
பிச்சு அது ஏற்றும் பெருந்துறையாய்". (ஆனந்தமாலை-7)

காஸாரி எச்சரித்தபடியே மறுநாள் காலையில் புதுக்குதிரைகள் அனைத்தும் நரிகளாக மாறி ஊளையிட்டுக் கொண்டும் பழைய குதிரைகளைக் கடித்துக் கொண்டும் ரகளை செய்தன. ராஜஸேவகர்கள் நடுங்கிப்போய் அரசனிடம் முறையிட்டார்

கள். கோபத்துடன் ஜ்வலிக்கிற பாண்டியன், நடந்த இந்திர ஜாலமெல்லாம் தன்னுடையமந்திரி வாதவூரராலேயே செய்யப்பட்டிருக்கிறது, ஸந்தேகமில்லை என்று உறுமினன்.

அவகாசத்துக்குக் காத்துக் கொண்டிருக்கும் ராஜாவின் துஷ்ட பிருத்தியர்கள் திரும்பவும் தங்களுக்கு ஒரு ஸந்தர்ப்பம் கிடைத்ததே என்று வெகு வேகத்துடன் வாதபுரீசுவரரைத் துன்பப்படுத்தினர்கள். அவரோ, கொஞ்சமும் கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் ஆத்மதியானத்திலேயே ஈடுபட்டிருந்தார்.

இந்த இடத்தில் ஆத்மத்யானத்தில் அமர்ந்திருந்த நிலை ஸ்ரீஸோமஸுந்தரக் கடவுளை ஹ்ருதயத்தில் நிறுத்தி மற்றெல்லாவற்றையும் மறந்து ஆனந்தானுபவத்தில் ஒடுங்கியிருந்தார் என்பது வெளிப்படை. ஸ்ரீநீலகண்ட தீக்ஷிதர் வாதவூரரை ராஜபடர்கள் துன்புறுத்தினர்கள் என்று மட்டும் சொல்லி நிறுத்திவிட்டார். என்ன மாதிரியான துன்புறுத்தல் என்பதை வாசகர்களே ஊஹித்துக்கொள்ளட்டும் என்று விட்டுவிட்டார். காவ்யங்களில் இது ஒரு அழகு. பரஞ்சோதி முனிவர், வாதவூரரைத் தண்டலாளர்கள் கடிய உச்சிப்பொழுதிலே சூரியனைப் பார்க்கும்படி அசையாமல் நிற்கச்செய்து இரண்டு கைகளிலும் நெற்றியிலும் கல்லேற்றித் துன்புறுத்தினர் என்கிருர். வாதவூரர் அவ்வேதனையைப் பொறுக்கமுடியாது சூரியன் சந்திரன் அக்னி என்னும் முச்சுடராகிய கண்களையுடைய ஸோமஸுந்தரக்கடவுளை அழைத்து அழுது துதிப்பாராயினர் என்று பல பாசுரங்களைப் பரஞ்சோதி முனிவர் பாடியிருக்கிருர் :

அத்தவோ! கல்லாக்கடையேனை ஆட்கொண்ட பித்தவோ
பொய்யுலகை மெய்யாகப் பேதிக்கும் சித்தவோ!
சித்தம் தெளிவித்து எனைத்தந்த முத்தவோ!
மோனமயமான மூர்த்தியவோ!

யோகியானவன் தன் மனதைக் கட்டுப்படுத்தியிருக்கும் நிலையில், குழந்தை போலவும், பைத்தியம் பிடித்தவன் போலவும் ஆனந்தித்து இருப்பான் என்கிருர் ஆதிசங்கரர் தமது

பஜகோவிந்தத்தில். பரஞ்சோதி முனிவரின் இப்பாடல்கள் சங்கரரின் யோகிஸ்வருபத்தையும், தீக்ஷிதரின் ஆத்மானுஸந் தானத்தையும் ஒட்டியே இருக்கின்றன. மஹான்களின் வாக்கு ஸத்யத்திலேயே நிற்கும்!

பரமதயாளுவான கதம்பவனேசுவரன் பக்தனுக்கு அனு க்ரஹம் செய்ய ஆலோசித்து, வாதவூரடிகளின் பெருமையை அரிமர்த்தனனுக்குத் தெளியவைக்கவும், வந்திக்கு மோக்ஷம் கொடுக்கவும், ஹாலாஹல விஷத்தை ஈந்த ஸமுத்திரத்துடன் நான் கலக்கமாட்டேன் என்று உறுதியுடன் ஓடுகின்ற வைகை நதியின் மண்ணைத் தன் சிரம்மேல் தாங்கவும் தீர்மானித்தான். (வைகை ஸமுத்திரத்தில் சேரவில்லை')

அகாலமாகவிருந்தபோதிலும் வைகை நதியைப் பெருக்கு எடுக்கும்படித் தூண்டினர். வெள்ளப்பெருக்கு பயங்கரமான அலைகளுடனும் அதிவேகமாகவும், மரம், செடி, கொடி முதலிய வற்றைப் பிடுங்கிக் கொண்டு மதுரையம்பதியில் பிரவே சித்தது. வாதபுரீசுவரரும் விடுவிக்கப்பட்டவராய் ஹாலாஸ்ய நாதரை தரிசிக்கவந்தார். அரசனின் ஆக்ஞைப்படி நூற்றுக் கணக்கான ஆட்கள் நதியின் பிரவாஹத்தைக் கட்டுப்படுத்த அணைகள் போட்டும் கட்டுப்படுத்த முடியவில்லை. அரசன், மதுரை மக்கள் அனைவரும் (குழந்தைகள் பெண்கள், வயோதி கர்கள் உட்பட) வெள்ளத்தடுப்பு வேலைக்கு இறங்கவேண்டு மெனஆக்ஞாபித்தான். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாகம் கொடுத்து அதனதன் எல்லையையும் தீர்மானப்படுத்தினன். இத்தனை ஜனக்கூட்டத்தில் ஒரு கிழவி பிட்டுச் சுட்டு விற்கிற வந்தி என்பவள் ஒருத்திக்கும் ஒரு பாகம் விதிக்கப்பட்டது, வயது முதிர்ந்தவள், யாருமற்ற தனியாள், நாள்தோறும் தான் அவித்த பிட்டினை ஸோமஸுந்தரக் கடவுளுக்கு மனத் தால் நிவேதனம் செய்த பின்னே விற்பவள்.

கடவுளே கதி என்று இருப்பவள். தனக்கு அளந்துவிடப் பட்ட பங்கினை அடைப்பதற்குக் கூலியாள் கிடைக்காமல் நடுங்கி ஒடுங்கி மதுரை நாயகனை நினைந்து கண்ணீர் சொரிய

அழுது, "பேதையாகிய நான் இதுவரையும் உன் திருவருளால் துன்பம் எள்ளளவும் இல்லாமல் இருந்தேனே. இப்பொழுது இடையூறு வந்தவிட்டதே. அரசன் ஆணையை நிறைவேற்ற எனக்கொரு கூலியாள் வேண்டுமே. அவன் கிடைப்பனே, வருவனே'' என்று பலவாருகப் பிரார்த்தித்தாள், நாலாபக்கங்களிலும் அலைந்தாள். அப்படி அலைந்து தேடிக்கொண்டிருக்கும்பொழுது எல்லா வேதங்களும் எவனைத் தேடுகின்றனவோ, அந்த ஸர்வேசுவரன் தோளில் மண்வெட்டியுடன் ஒரு வாலிப வேலையாளாக அக்கிழவியின்முன் தென்பட்டான். கிழவியும் பார்த்தாள்.

[1]गवेषयन्ती जरती समन्ताद्गवेष्यमाणं निगमैः समस्तैः ।
ऐक्षिष्ट सा कर्मकरं युवानं अंसोपरि न्यस्तखनित्रमेकम् ।।

கவேஷயந்தீ ஜரதீ ஸமந்தாத் கவேஷ்யமாணம்
நிகமை: ஸமஸ்தை: l
ஐக்ஷிஷ்ட ஸா கர்மகரம் யுவானம்
அம்ஸோபரிந்யஸ்த கனித்ரமேகம் ll

கிழவியும் ஸர்வேசுவரனுடைய தயாபாத்ரமானுள். மஹாதேவன் கிழவியை அணுகி 'உனக்கு என்ன வேலை செய்ய வேண்டும் அம்மா! அதை எனக்கு கட்டளையிடு, நான் ஜனங்களுக்காக உழைப்பவன், எனக்கு யஜமானன் யாரும் கிடையாது, ரொம்ப நாளாக யஜமானன் கிடைக்கமாட்டனு என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனக்குப் பணமாக கூலி தரவேண்டாம். நன்ருகச் சமைத்த பிட்டை நீ வியாபாரம் செய்து கொள், வேகாதது, அதிகமாக வெந்தது, உதிரிப் போனது இவைகளை எனக்கு சாப்பாட்டுக்காகக் கொடுத்தால் போதும். நதியில் எந்தப் பாகம் அடைக்கவேண்டும் என்று உனக்கு அளந்து விடப்பட்டிருக்கிறது சொல்லு, என்னிடம்

1. சிவ. லீ. 21-61.

பொறுப்பை ஒப்படைத்து நீ கவலையில்லாமல் பிட்டுச் சமைத்துக்கொண்டிரு' என்றார்.

[1]मातः पच पिष्टकं त्वं विन्यस्य भारं मयि वीतशङ्का

மாத: பச பிஷ்டகம் த்வம் வின்யஸ்ய
பாரம் மயி வீதசங்கா ll

கிழவியுடன் பேச்சுக் கொடுத்துக்கொண்டு, ஏ தாயே, தேவியே, பாட்டியே என்று பலவிதமாகக் கூப்பிட்டுக் கொண்டும், கிழவியை மோஹிக்கச் செய்து சமைக்கச் சமைக்க கொஞ்சம் கொஞ்சமாக எல்லாப் பிட்டினையும் எடுத்துக் கொண்டார். அவளுடைய பக்தியையும் கிரஹிப்பதுபோல கொஞ்சம் பேசுவது, சிறிது சிரிப்பது, அழகாக நடிப்பது, விளையாட்டாகப் பேசுவது இவ்வாறாக மற்ற வேலையாளர்களையும் மயக்கி உல்லாஸமாக அங்குமிங்கும் திரிந்துகொண்டிருந்தார். காவலாளர்கள் பார்வையிட வந்தால், இந்தா இதோ பார் என் மண்வெட்டி, கூடை, நான் குவித்த மண் குவியல், இது இன்று நான் செய்த வேலை எனக் காட்டிவிட்டு அவர்கள் போனதும் தான் சிரித்துச்சிரித்து விளையாடுவார்.

நதியும் கட்டுக்கடங்காமல் அலைகளோடு இரண்டு கரைகளுக்கும்மேல் புரண்டு ஓடுகிறதைப் பார்த்து பயந்து ஸேவகர்கள் அரசனிடம் தெரியப்படுத்தினர், அரசனும் தான் நேரில் பார்வையிட வந்தான். மற்ற ஆட்கள் ஜாக்கிரதையாகத் தங்கள் வேலைகளை முடித்துவிட்டு நிற்பதைப்பார்த்து தானும் பூமியைத் தோண்டுவது போலவும், நதியில் மண்ணைப் போடுவதுபோலவும் துரிதமாக வேலைசெய்வது போல்தோற்றமளித்தான் ஸர்வேசுவரன். பிட்டுக்கிழவியின் பங்கோ அடைபடவில்லை.

வரிசையாகக் கரை முழுவதும் பார்வையிட்டுவரும் அரசன் அங்கங்கே அடைபட்டகரையை கவனித்துக்கொண்டு, அடை

1. சிவ. லீ. 21-64.

படாமல் பள்ளமாக இருந்த இடத்தைப் பார்த்து அதிக கோபத்துடன் இந்த இடம் யாருடையது பங்கு, ஏன் அடைபட வில்லே என்று அதட்டிக்கேட்டான். வேலேயாட்கள் பிட்டுக் கிழவியின் கூலியாளேக் கையைப்பிடித்து இழுத்துவந்துஇவன் தான் வேலேயைமுடிக்காதவன், ரொம்ப வயதான பிட்டுக்கிழவி யால் அமர்த்தப்பட்டவன், தேகவலிவுள்ளவன், பிட்டுக்கிழவி யிடமிருந்து கூலியையும் பெற்றுக்கொண்டவன், ரொம்பவும் போக்கிரியாக இருக்கிருன், அசையமாட்டேனென்கிருன், மரியாதை காட்டுபவன்போல் பேசுகிருன். ஆனுல் பின்னுல் சிரிக்கிருன், கேலிசெய்கிருன். விளேயாட்டாக பேசி மற்றவர் களேயும் சிரிக்கவைக்கிருன். மேலும்,

[1]दत्तं कियत् दारुणया जरत्या
दत्ते तु किंचित् शिथिलान् अपूपान् ।
अहो ममाभाग्यमियं किलासीत्
नाथेति शेते मुहुरात्तशोकः ।।

தத்தம் கியத் தாருணயா ஜரத்யா
தத்தே து கிஞ்சித் சிதிலான் அபூபான் l
அஹோ மமாபாக்யமியம் கிலாஸீத்
நாதேதி சேதே முஹுராத்தசோக: ll

நிரம்ப துக்கத்துடன் அடிக்கடி படுத்துக்கொள்கிருன். எதற்காக எனக் கேட்டால் இந்தக் கிழவி கருணேயில்லாதவள். ஏதோ கொஞ்சம் பிட்டினேக் கொடுக்கிருள். அந்தப் பிட்டோ சிதறிப்போன பொடிகள். (ஒரு யஜமானனேத் தேடிவந்த) எனக்கு என்னுடைய துரதிருஷ்டத்தினுல் இப்படி ஒருயஜமானி கிடைத்தாளே. எனக்கு அப்பா இருக்கிருரா, அம்மா இருக் கிருளா, வேறு ஆதரவுதான் உண்டா, கொஞ்சம் செல்வ மாவது இருக்கிறதா, ராஜஸேவகர்களின் ஏச்சோ, என்னேப்

1. சிவ. லீ. 21-74.

போன்ற ஏழைகளிடம் 'போடா, வாடா' என்றபடி கீழ்த் தன்மையாகவுள்ளது.

[1]किं मे अस्ति तातो जननी किमास्ते
किं आस्पदं किं धनमस्ति किंचित् ।
किं राजभृत्याः कृपणेषु कुर्युः
यातेति नः अधःकुरुते कदापि ॥

கிம்மே அஸ்தி தாதோ ஜனனீ கிமாஸ்தே
கிம் ஆஸ்பதம் கிம் தனமஸ்தி கிஞ்சித் ।
கிம் ராஜப்ருத்யா : க்ருபணேஷு குர்யு :
யாதேதி ந : அத : குருதே கதாபி ॥

என்று பலவாருக ப்ரஸங்கம் செய்கிருன். இப்படி ப்ரலாபிக் கிருனே என நினைக்கும்பொழுதே மிகவும் மிருதுவாக தத்வம் சொல்கிருன். "ராஜா அநியாயவிருத்தியில் இருந்தால் நகரம் வெள்ளத்தில் முழுகத்தான் செய்யும், வேலையாட்களை அடிக் கிறதனுல் என்ன லாபம்" என்று.

[2]अन्यायवृत्ते नृपतो अमुष्मिन् आप्लाव्यते किं नगरं न तोयैः ॥

அன்யாய வ்ருத்தே ந்ருபதோ அமுஷ்மின்
ஆப்லாவ்யதே கிம் நகரம் ந தோயை : ॥

இவ்விதம் ராஜபிருத்யர்கள் சொன்ன விருத்தாந்தங்களைக் கேட்டு பாண்டிய ராஜா, அந்தக் கூலியாள் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டிருப்பதையும் பார்த்து வெகு கோபத்துடன் கீழுதடு துடிக்க, தன் கைப்பிரம்பைச் சுழட்டி அப்பிரம்பினுல் அவனை அடித்தான். (முந்தின சுலோகத்தில் வேலையாட்களை அடிப்பதினுல் என்ன பிரயோஜனம் எனும் வார்த்தை அரசனை

1. சிவ. லீ. 21-75. 2. சிவ. லீ. 21-76.

வந்தியின் ஆளை அடி எனத் தூண்டிவிடுவதுபோல் அமைந்திருக்கின்றது.)

எந்த சந்திரசேகரனுடைய சரீரம் மூவுலகங்களாகவே உள்ளதோ அந்தச் சரீரம் அரசனால் அடிக்கப்பட்டதும் அப்பொழுதே, சொன்னவர்களும் அடித்தவனும் பார்த்தவர்களும் ஸகல உலகங்களும் அப்பிரம்பினால் அடிபட்டனவாக ஆகின.

[1]अङ्गं त्रिलोकीमयमिन्दुमौळेः
अभ्याहतं तेन यदा तदैव ।
वक्ता च हन्ता च निरीक्षिता च
वेत्राहतं विश्वमभूत् समस्तम् ॥

அங்கம் த்ரிலோகீமயமிந்து மௌளே :
அப்யாஹதம் தேன யதா ததைவ l
வக்தா ச ஹந்தா ச நிரீக்ஷிதா ச
வேத்ராஹதம் விச்வமபூத் ஸமஸ்தம் ll

ஸகலலோகங்களும் ஸ்தம்பித்து விட்டன, அரசனும் கூட. பிரக்ஞை திரும்பிவந்ததும், அரசன் இது எவ்விதம் நேர்ந்தது என்று சிந்தனை செய்வதற்குள் பரமேசுவரன் மறைந்து விட்டார். வைகை வெள்ளமும் தணிந்தது. பரமேசுவரன் பக்திக்குக்கட்டுப்பட்டவன். எங்கிருந்தாலும், எந்த வேளையிலும். வேறு தெய்வத்தைக் கனவிலும் நினையாது, சிவத்யானம் செய்வதே போதும். உடம்பை வாட்டி அலைந்து திரிந்து காணமுடியாததைக்காண உழைக்கவேண்டாம், 'யாம் ஆர்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்,' என்று தன்னையே சிவார்ப்பணம் செய்து, அவனைத்தவிர வேறு புகலிடம் இல்லை என்ற நிச்சயபுத்தியுள்ள ஜீவன்களுக்கு, ஆதிகுரு பரமேசுவரன் தானாகவே வந்து அருள் புரிவார் என்பதைத் தெளிவூட்டுகிறது

---

1. *சிவ. லீ.* 21-78.

இந்தத் திருவிளையாடல். மனமுருகவைக்கும் திருவாசகத்தில் இந்தப்பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலை,

குதிரைச்சேவகனாகிய கொள்கையும்,
ஆங்கு, அதுதன்னில், அடியவட்கு ஆக,
பாங்கு ஆய், மண்சுமந்தருளிய பரிசும். (கீர்த்தித்திருவகவல்)
பாண்டி நாடேபழம்பதி ஆகவும் (கிர்த்தித்திருவகவல்)
பிட்டுநேர்பட, மண்சுமந்த பெருத்துறைப்பெரும் பித்தனே
(திருக்கழுக்குன்றப்பதிகம்)
மண்பால், மதுரையில் பிட்டுஅமுது செய்தருளி
தண்டாலே பாண்டியன் தன்னைப்பணி கொண்ட
புண்பாடல்பாடி, நாம்பூவல்லி கொய்யாமோ. (திருப்பூவல்லி)
பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்,
பெண் சுமந்த பாகத்தன், பெம்மான் பெருந்துறையான்,
விண் சுமந்த கீர்த்தி வியன் மண்டலத்தீசன்,
கண் சுமந்த நெற்றிக்கடவுள், கலி மதுரை
மண் சுமந்து கூலிகொண்டு, அக்கோவால் மொத்துண்டு,
புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்.
(திருவம்மானை)

முதலான பாட்டுக்களில் தன் அநுபவத்தை முத்திரை வைக்கிறார்.

இவ்விதம் அற்புதமாக பகவான் செய்த லீலையை எண்ணி எண்ணி நகர ஜனங்களும், பாண்டிய ராஜனும் ஆனந்த பாஷ்பம் சொரிய தட்டுத்தடுமாறின வார்த்தைகளால் அவரவர்கள் பக்திக்கு ஏற்றவாறு அம்பிகாநாதனைப் புகழ்ந்தார்கள். 81-வது சுலோகத்திலிருந்து 101-வது சுலோகம் முடிய தீக்ஷிதர் மதுரை மக்களின் வாயிலாக பார்வதீசனை ஸ்தோத்ரம் செய்கிறார். வேத ஆகம சாஸ்திர ஸாரமாகவும், ரஸம் அலங்காரம் நிறைந்தும் அமைந்துள்ளது. இந்த பிரார்த்தனைகளை அனுஸந்தானம் செய்தால் ஸகல கஷ்டங்களும் நிவர்த்தியாகி பரமேசுவர பிரஸாதம் கிடைக்குமென்று

என்னுடைய மாதாமஹர் தருவை நீலகண்டசிவன் சொல்லிக் கேட்டிருக்கிறேன். (இவை முழுமையும் பின்னேரு சமயம் தனி யாகப் பிரசுரிக்கப்படும்) இவற்றில் ஒருசில சுலோகங்களின் கருத்துக்களை சுருக்கமாக எடுத்துச் சொல்கிறேன்.

"ஹே புஜங்கபூஷண ! உன் முடியின்மேல் வ ஸி க் கு ம் நாகம் பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிறது. அந்தப் பூமியி லிருந்து சிறிது மண்ணைத் தட்டினுல் வைகைக்கரை அடைந்து விடுமே ! ஆனுல் நீ மண் சுமக்கும் வ்யாஜத்தை வைத்துக் கொண்டு பரம பக்தையான வந்தியின் பி ட் டை வாங்கிச் சாப்பிடத்தானே வந்தாய் ?"

"ஹே ஸாது ஜனங்கேள ! கேளுங்கள். இப்பொழுதே நாம் எல்லோரும் சேர்ந்து இந்த சிவனிடத்தில் ஓர் விண்ணப் பம் கொடுக்க வேண்டும். பிரம்படியைப் பங்கு போட்டுக் கொண்டு நம்மால் தாங்கமுடியாது என்று. இல்லாவிடில் இதே ரீதியில் அவருக்குக் கிடைக்கும் கல்லால் அடி காலால் உதை, வில்லால் மொத்து, எச்சில் நீர் குளிப்பாட்டு இவற்றிலும் நாம் பங்குகொள்ளவேண்டிவரும். இதை ந ம் மா ல் தாங்கிக் கொள்ள முடியாது."

"ஹாலாஸ்யநாதா ! உன்னை அடையும் வழியை வெகு காலமாக யோசித்து யோசித்துப்பார்த்து ரொம்ப சிரமப்பட்டு இப்பொழுது ஒரு தீர்மானத்திற்கு வந்திருக்கிறேன். அதா வது தெய்வ வசத்தால் என்னுடைய சரீரமானது வை கை நதியில் விழுந்ததானுல் ஏதாவது ஒரு காலத்தில் அச்சரீரம் அந்நதியின் மண்ணேடு கலந்து உன்னுடைய சிரஸ்ஸில் ஏறியிருக்குமல்லவா ?"

"நீ மண்ணைச்சுமந்து சந்திரகலை அழுக்காகிவிட்டது, கங்கை சேறு கலந்ததாக- ஆகிவிட்டது. பிரம்மகபால மாலை அறுந்து தொங்குகிறது, பாம்புகள் வாடிவிட்டன, இந்தமாதிரி எதற்காகத் தான் மண் சுமப்பதை ஒப்புக்கொண்டாய் ? அந்த பிட்டில்தான் என்ன குணத்தைக் கண்டாய் ? அந்தக் கிழவி

ரொம்ப துஷ்டை, உனக்கு என்ன மருந்து இட்டாளோ தெரிய வில்லையே !''

''தேவர்களே ! கொஞ்சம் விலகுங்கள். முனிவர்களே ! கொஞ்சம் மௌனமாக இருங்கள். சிவகணங்களே ! ஈசுவர னுக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கும் சிரமதசையை நேரில் கண்டபடி ஜகன்மாதாவிடத்தில் போய்ச் சொல்லுங்கள். தேவர்களால் திவ்யபுஷ்பங்களால்கூட மெதுவாக அர்ச்சிக்கப் படுகிறது, மென்மையான ஈச்வரனுடைய திவ்ய சரீரம் பாண்டியனின் பிரம்பினுல் அடிக்கப்பட்டதென்று.''

''ஸ்வாமின் ! ஸமஸ்தலோகத்தையும் ஸம்ரக்ஷிப்பதற்காக நியமிக்கப்பட்டவர் (மஹாவிஷ்ணு) வைகையில் வெள்ளப் பெருக்கெடுத்து மதுராநகரம் அழிந்துபோகும் சமயத்திலும் ஸமுத்ரத்தில் ஆனந்தமாகத் தூங்குகிருர், கேள்வி கேட்பார் இல்லை. மண் சுமந்து சிரமப்பட்டுக்கொண்டிருக்கும்தருவாயில் உமக்குப் பிரம்படியும் கிடைத்தது. இந்த அநியாயத்தை யாரிடம் முறையிடப்போகிறீர் ? நீர்தான் அநாதையாய் இருக்கிறீரே ?''

''ஐயா. ! பாண்டியன்தான் அடித்தான். பாண்டிய புத்திரி எப்படி அதைப் பார்த்துக்கொண்டிருந்தாள் ? அவள் எனக்குத் தாயார்தான். ஆனுலும் நான் நியாயத்தைச் சொல்லத்தானே வேண்டும். பிரபோ ! மண் சுமையைத் தலை யின் இடது புறத்தில் வைத்து, பிரம்படிக்கும் இடது பாகத் தையே காட்டுங்கள். அப்பொழுது தேவியின் நிலையைப் பார்க்கலாம்''.

''ஈச்வரனுடைய பாதி புருஷபாகம், பாதி ஸ்திரீபாகம், ஸ்திரீபாகம் உன்னைச் சேர்ந்தது, தாயே! நீ ராஜ்ய பரிபாலனம் செய்கிருயா அல்லது குடும்பபாரம் வஹிக்கிருயா என்பதே தெளிவாக இல்லையே. ஏனென்ருல் மதுராபுரி நாயகியின் கணவன் அவள் ராஜ்யத்திலேயே அடிபடுகிருனே ? நீ ஸர்வ ஜகத்துக்கும் அன்னமளிப்பவளாக இருந்தும் உன் கணவனை பிக்ஷையெடுக்க விட்டுவிட்டாயே ?''

"சம்போ ! வைகையின் மண்ணைத் தலையில் தூக்கும் பொழுது, யோகிகளுடைய மனஸ்களிலும் வேதங்களின் சிரஸ் ஸான வேதாந்தங்களிலும் அந்த பாரம் வந்துவிட்டதென்று நினைக்கிறேன் (யோகிகள் ஹ்ருதயத்திலும் வேதாந்தத்திலும் ஈச்வரன் இருப்பதனாலே)"

"பிரம்படியைப் பங்கிட்டுக் கொடுத்ததில் தாங்கள், ஸர்வ ஜகத்தும் தாங்களே என்பதைப் பிரகாசப்படுத்தினீர்கள். பிட்டுச் சாப்பிட்ட விஷயத்திலோ (மற்றவர்களுக்கு பிட்டு கிடைக்காததால்) சிவாத்வைதத்தை பிரகாசப்படுத்தினீர்கள்."

"உன்னுடைய கூட்டாளியாக இருந்து பிரம்படியைப் பங்கு போட்டுக்கொண்டு வேதனையைப் பொறுத்திருந்தார் களே ஜனங்கள், அவர்களின் ஜனன மரணதாபத்தை நீ போக்காமல் இருக்கிறாயே, இது என்ன நியாயம், விளை யாட்டு?"

"ஒரே ஒரு பக்தனை காப்பாற்றும் பொருட்டு நீ எத்தனை பேருக்கு சிரமம் கொடுத்துவிட்டாய். தலையிலுள்ள கங்கை, பாம்புகள், இதைத்தவிர பிரம்படிபட்ட ஸர்வஜகத்தும் எத்தனை சிரமப்பட்டன."

"கங்கையையும் பிரம்மகபாலத்தையும் தூக்கித் தாங்கிக் கொண்டிருக்க வேண்டியது உன் கடமை. அதுபோகட்டும், பிட்டுக்கு ஆசைப்பட்டு இன்னொரு பாரமான மண்ணைச் சுமந் தீரே ! நான் என்னுடைய ஆத்மாவை உம்மிடம் வைத்துள்ள பக்தி என்கிற அமிருதத்தில் தோய்த்து ருசியாக உமக்குத் தருகிறேன், அதைக் கண் எடுத்தும் பார்க்கமாட்டேனென் கிறீர்களே ! இது என்ன நியாயம் ? பெரியவரான தங்களுக்கு தான் இந்த நியாயம் சரிபோலும் !"

"பாண்டியனால் பிரம்பால் அடிக்கப்பட்டாய், அர்ஜுன னின் காண்டீபத்தால் தாக்கப்பட்டாய், வேடன்(கண்ணப்பன்) காலால் உதைக்கப்பட்டாய், ஏதோ ஒரு சிறுவனின் (சாக்கிய நாயனார்) கல்வீச்சை வாங்கிக்கொண்டாய். இவையெல்லாம்

உனக்குத் தபஸ்செய்ததாகவே உன்னால் அங்கீகரிக்கப்பட்டன. ஆனால் நான் (சாஸ்த்ரோக்தமாக) செய்யும் பூஜையிலோ குற்றங்களையே நெடுகப்பார்க்கிறீர்கள். இதற்கு நான் என்ன செய்யமுடியும் ? என் விஷயத்தில் தெய்வ ஸங்கல்பம் இவ்வாறாக இருக்கிறது''

இவ்வாறு பலவிதமாக ஸ்தோத்திரங்கள் செய்து கொண்டு ஸகல ஜனங்களும், ஆச்சரியத்தில் மூழ்கியிருக்கும்பொழுது, அதிஸௌந்தர்ய ரூபத்தை அடைந்தவளான பிட்டுவந்தியை (சிவகணங்கள்) அழகான விமானத்தில் கைலாஸத்துக்கு அழைத்துச் சென்றார்கள். சிவபக்தனுக்கு அபசாரம் செய்த தனாலே மிகவும் வருத்தத்தை அடைந்தவனாய் அரிமர்த்தன பாண்டியனும், தன்னுடைய ஸசிவோத்தமரின் (வாதபுரீசு வரரின்) பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தும், பிரியமான வார்த்தைகள் பேசியும், ஸமாதானப்படுத்தி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். அப்பொழுது ஒரு அசரீரிவாக்கு ஏற் பட்டது. அதை பரமேசுவரனின் ஆக்ஞை என்று உணர்ந்து பயங்கொண்டு அப்பொழுதே வாதபுரீசுவரரை (அவர் விருப் பப்படி) சிதம்பரக்ஷேத்திரத்துக்கு அனுப்புவித்தான் ஸர்வ வேததத்துவத்தையும் அறிந்த வாதபுரீசுவரும், வைராக்யத் தையே ஹ்ருதயத்தில் வைத்துக்கொண்டு சிதம்பரத்தை அடைந்தார்.

பரஞ்ஜோதி முனிவரின் தென்மொழி திருவிளையாடல் புராணத்தில் பாண்டியன் வாதவூரரைப் பிரியா மனத்துடன் விடை கொடுத்தனுப்பிவிட்டு கோவிலுக்குச் சென்று சோம சுந்தரக் கடவுளை மனமாரப் பாடித் துதித்தான் என்று சொல்லப் படுகிறது:

அடையாளம் படவொருவன் அடித்த கொடுஞ்சிலை தழும்பும்
தொடையாக ஒருதொண்டன் தொடுத்தெறிந்த கல்லும்போல்
கடையானேன் வெகுண்டடித்தக் கைப்பிரம்பும்
உலகமெலாம் உடையானே, பொறுத்ததோ, உன் திருமேனி!

வேதங்களுக்கும் அப்பாற்பட்ட நீ, நரியைப்பரியாக்கிக் குதிரைக்காஸாரியாக என் பாசம் அறுக்கவே வந்தாய் என்று தெரியாமலேயே குதிரை மேல் ஆசைவைத்து இறுமாப்புடன் இருந்து விட்டேனே, என் செய்வேன் !

விண்சுமக்கும் புள்ளாய் விலங்காய்ச் சுழன்று மனம்
புண்சுமக்கும் சூழ்ச்சி வலியுடைய புத்தேளிர்
மண்சுமக்கும் மள்ளராய் வந்திலரே வந்தக்கால்
பண்சுமக்கும் சொல்லி பங்கன் பாதமுடி காண்பாரே !

(வைகை வெள்ளத்தை அடைக்க வந்திருந்த பல மக்களில் ஒருவராய் பிரமனும் விஷ்ணுவும் வந்திருந்தால், அன்னமாக வும், பன்றியாகவும், அலேயாமலேயே, பரமனின் பாதத்தையும் சிரஸ்ஸையும் கண்டிருக்கலாமே !)

மாணிக்கவாசகரும், வந்தியும், அரிமர்த்தன பாண்டி யனும், மதுரை மாநகரவாசிகளும், பல ஜன்மங்களில் செய்த புண்யவசத்தால், சிவபக்தி ததும்பும் ஸந்நிவேசத்தில் ஸோம ஸுந்தரக் கடவுளுடைய அருளுக்குப் பாத்திரமானுர்கள் !

ஹர ஹர மஹாதேவ !

வாதபுரீசுவரருக்காக மதுரையம்பதியில் ஸோமசுந்தரர் அநுக்ரஹித்த லீலேகள் இத்துடன் முடிவடைந்தபடியால் தீக்ஷிதர் இதற்கு மேல் சொல்லவில்லே. பரஞ்ஜோதிமுனிவரோ மாணிக்கவாசகர் சிதம்பரம் சென்று அங்கு புத்தர்களுடன் வாதம் செய்து ஜயித்து, பல சிவ ஸ்தலங்களுக்குச் சென்று ஈச்வரனே தரிசித்து, திருவாசகம் இயற்றி, சிவனேடு இரண் டறக்கலந்த வைபவத்தையும் சேர்த்திருக்கிருர்.

ஸுந்தரேசுவரரின் லீலேகள் மதுரை வட்டாரத்தில் நடந்தன. பிட்டுக்கு மண்சுமந்த லீலேகளுக்கு அடையாள மாகப் பல சின்னங்கள் இன்றும் இருக்கின்றன. அவற்றில் சில.

| | |
|---|---|
| திருவாதவூர் : | மதுரைக்கு வடகிழக்கே பத்து மைல் தூரத்தில் |
| ஆவுடையார்கோவில் : | மணிவாசகரை ஆட்கொண்டஸ்தலம், பெருந்துறை. |
| மானபுரம் : | வாதவூரரின் சுற்றத்தார் இருந்த ஊர். |
| நரிக்குடி, எழுநூற்றுமங்கலம் : | நரியைப் பரியாக்கிய இடங்கள். |
| மண்டியூர் : | குதிரைகளின் புழுதி மண்டிய இடம். |
| மாநகர் : | குதிரைகளை ஓட்டிக்காட்டிய இடம். |
| மதிச்சயம் : | குதிரைகளின் விலையை மதிப்பிட்ட இடம். |
| தத்தனேரி, தொடர்நரி, செல்லூர். | பரி நரியாகிச் சென்ற இடங்கள். |
| பிட்டுத்தோப்பு : | சுந்தரர் மண் சுமந்த இடம், வைகைத் தென்கரையில். |

இவற்றுக்கெல்லாம் சிகரமென, ஓர் அற்புத அடையாளத்தைச் சொல்லுகிறுர் நமது தீக்ஷிதர் :

[1]पाण्ड्यार्पिता भाति अधुनापि यस्मिन्
नृज्वायता वेत्रनिपातरेखा ।
नानारहस्यागमबोधनीयां
नादात्मतां अस्य विवृण्वतीव ।।

பாண்ட்யார்பிதா பாதி அதுனுபி யஸ்மின்
ந்ருஜ்வாயதா வேத்ரநிபாத ரேகா : l
நாநாரஹஸ்யாகம போதனீயம்
நாதாத்மதாம் அஸ்ய விவ்ருண்வதீவ ll

---

1. சி. லீ. 2-45

இன்றும் மதுரை மீனாக்ஷி ஸுந்தரேசுவரர் கோவிலில் ஸுந்தரேசுவரர் லிங்கத்தில், பாண்டியன் தங்கப்பிரம் பாலடித்த தழும்பு ரேகை, வேதங்கள் போதிக்கும் நாத ஸ்வரூபமாயிருப்பதைப் பிரகாசப்படுத்திக் கொண்டிருக்கிறது என்கிறார். இப்பொழுதும். பிரம்படிக்கு சாய்ந்து கொடுத்தது போல லிங்கமும் சிறிது சாய்ந்தே இருக்கிறது.

62, 63, 64-வது லீலைகளையும் சிவலீலார்ணவத்தில் இருபத்திரண்டாவது கடைசி ஸர்க்கத்தில் பாடியிருக்கிறார். ஸுந்தரேசுவரருடைய அறுபத்து நான்கு லீலைகளையும் பாடியாய்விட்டது, ஏ மீனாக்ஷி, எனக்கு எப்பொழுதும் தயைசெய் என்று பிரார்த்தித்துக் கடைசி சுலோகத்தால் ஸமர்ப்பணம் செய்கிறார்.

[1]मलयध्वजपाण्ड्यकन्यका चरणद्वन्द्वनिवेशितात्मना ।
शिवयोः कविनेदमर्पितं शिवलीलार्णव काव्यमद्भुतम् ।।

மலயத்வஜபாண்ட்யகன்யகா சரணத்வந்தவ நிவேசிதாத்மநா
சிவயோ : கவிநேதமர்பிதம் சிவலீலார்ணவகாவ்யமத்புதம் ll

பக்திரஸம் பொதிந்த இந்த சிவலீலார்ணவக்ரந்தம் கி. பி. 1911ம் ஆண்டில் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்ஸில் அச்சிடப்பட்டுப் பிரசுரிக்கப்பட்டது. பிரதிகள் இப்பொழுது கிடைக்கவில்லை. சிவலீலார்ணவத்தைத் தமிழ்—ஆங்கில உரையுடன் திரும்பவும் அச்சிட்டு, பிரசுரிக்க வேண்டும் என்ற அவா உண்டு. பரமேசுவரன் சக்தியைக் கொடுக்கவில்லை. இதைப்படிக்கும் ஏதாவது ஒரு அன்பர்—சிவபக்தர் இத்தொண்டை ஏற்றுக்கொண்டு ஜயமடையுமாறு,

---

1. சி. லீ. 22-100

पाणिग्रहे पर्वतराजपुत्र्याः पादाम्बुजं पाणिसरोरुहाभ्याम् ।
अश्मानमारोपयतः स्मरारेः मन्दस्मितं मङ्गळमातनोतु ॥

பாணிக்ரஹே பர்வதராஜபுத்ர்யா:
பாதாம்புஜம் பாணிஸரோருஹாப்யாம் ।
அஸ்மானமாரோபயத: ஸ்மராரே:
மந்தஸ்மிதம் மங்களமாதனோது ॥

மீனாக்ஷி ஸுந்தரேசுவரர் விவாஹத்தில் ஸப்தபதீ செய்யும் பொழுது, ஸுந்தரேசுவரர் மந்தஹாஸம் செய்தாராம். அந்த மந்தஹாஸம் நமக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும் என்று ப்ரார்த்திப்போம்.

சிவாப்யாம் நம :

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# வில்லிபாரதத்தில் சிவபிரான் பெருமை—2

சங்கரனடிமை ஆங்கீரஸ சர்மா

வில்லிபுத்தூரார் என்ற வைணவப் பெரும் புலவர் பாடிய பாரதக் காவியத்தில் ஆதிபருவத்தில் அடங்கிய கவிமொழி யாக அமைந்த சிவபிரான் பெருமை கூறும் பாடல்களையும் அவற்றின் விளக்கங்களையும் சென்ற 1985ம் ஆண்டு சிவஞான பூஜாமலரில் (பக்கம் 203 முதல் 244 வரை) ஓரளவு கண் டோம். இனி ஆதிபருவத்தில் கதாபாத்திரங்களின் வாயிலாக வும் சபாபருவத்தில் கவிமொழியாகவும் பாத்திரங்களின் வாயி லாகவும் வில்லிபுத்தூரார் சிவபெருமானின் பெருமையை எங்ஙனம் புலப்படுத்துகிறார் என்பதை இக்கட்டுரையில் கண்டு இன்புறுவோம்.

ஆதிபருவம் திரௌபதி மாலையிட்ட சருக்கத்தில் குந்தி யின் வார்த்தைப்படி திரௌபதியைப் பாண்டவர் ஐவரும் மணக்க நேரிடுகிறது. இதனையறிந்த துருபதராஜன் மனத் தளர்ச்சியடைந்தபொழுது வேதவியாசர் அங்குத்தோன்றி திரௌபதியின் முற்பிறப்பு வரலாற்றைக் கூறி ஐவரும் அவளை மணப்பது சிவபெருமானின் வரம் என்று அறிவுறுத்து கிறார். இவ்வரலாறு சிவானுக்கிரஹம் என்ற தலைப்பில் நமது 1981 வது ஆண்டு சிவஞானபூஜாமலரில் விரிவாகக் கொடுத் துள்ளோம். இதனைக் கூர்ந்து கவனித்தால் மஹாபாரதத் தின் முக்கிய கதாநாயகர்களின் பிறப்புக்குச் சிவபெருமானே காரணம் என்பதும் அதனால் அவரே மஹாபாரதமென்னும்

இதிஹாஸம் நிகழக் காரணர் என்பதும் புலப்படும். பின்னர் ஸ்ரீகிருஷ்ணர் பாண்டவர்க்குத் துணையாக அமைந்ததும் சிவ சங்கல்பமே ஆகும் என்று அறிஞர்கள் உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

வேதவியாஸர் வாய்மொழியாக திரௌபதியினுடையவும் பாண்டவருடையவும் முற்பிறப்பு வரலாற்றினைப் பதினைந்து பாடல்களில் வில்லிபுத்தூரார் பாடியுள்ளார். இவற்றுள் சிவ பிரான் பெருமை கூறும் முக்கிய பாடல்கள் ஐந்து ஆகும். இவற்றுள் மூன்று பாடல்களில் சிவபெருமானது தொன்மைக் கோலமான அர்த்தநாரீசுவரத் திருவடிவம் பேசப்படுகிறது.

1. தன் பங்கைத் திறை நல்கும் ஈசன்
2. தன் ஓர் வடிவில் ஒரு கூறு தையல் ஆளும் முன்னோன்.
3. மென்பாவை பங்கன்.

என்பன அப்பாடற் பகுதிகள். இவற்றால் மாதொரு பாகனாகிய திருக்கோலமே புலவரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது என்பதை அறியலாம். மேலும் இரண்டாவது காட்டப்பட்ட பகுதியில் முன்னோன் என்ற சொல் திருவாசகம், திருவண்டப் பகுதி 29வது வரியான ''முன்னோன் காண்க முழுதோன் காண்க'' என்பதை நினைவூட்டுகின்றது. எல்லோருக்கும் எல்லாவற்றுக் கும் முன்னுள்ளவனான முழுமுதற் கடவுள் பரமேசுவரனேயாம் என்னும் பொருள் பயக்கும் முன்னோன் என்ற சொல்லால் இறைவரைப் பாடிய வில்லிபுத்தூராரின் நேர்மையைப் பாராட்டி மகிழ்வோம்.

அடுத்து ஒரு பாடலில் ஐந்தானனத்தோன் என்றும் ஐந்தான சொல்லான் என்றும் பரமேசுவரன் குறிப்பிடப்படு கின்றார். சிவபெருமான் ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜாதம் என்ற ஐந்து திருமுகங்களை யுடையவர் என்பது 'ஐந்தானனத்தோன்' என்பதன் பொரு ளாகும். 'ஐந்தான சொல்லான்' என்பது ஐந்து எழுத்தான சிவாயநம அல்லது நமச்சிவாய என்ற ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைக்

குறிக்கும். இந்த ஸ்ரீபஞ்சாக்ஷரமே பரமேசுவரரது திருமந்திர மாகவும், திருமேனியாகவும், திருநாமமாகவும் போற்றப் படுதலின் ஐந்தானசொல்லான் என்று சிறப்பித்தார். இவ் வைந்து எழுத்துக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சொல்லாக வும் கூறப்படுதலால் ஐந்து ஆன சொல்லான் என்று பாடிய தாகவும் கொள்க. "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" என்ற சுந்தரமூர்த்தி நாயனர் திருவாக்கும் காண்க. அடுத்ததொரு பாடலில் சிவபிரான் மழுவாளி என்று குறிப்பிடப்பட்டார்.

ஆதிபருவத்தில் வாரணவதச் சருக்கத்தில் வீட்டுமனிடம் துரோணர் தமது வரலாறு கூறுவதாகவுள்ள பகுதியில் தனக்கு அசுவத்தாமன் பிறந்தது சிவபெருமான் திருவரு ளாலேயே எனக்கூறுவதாகப் புலவர் பாடியுள்ளார்: "கந்த மகவை ஈன்ற காளகண்டன் அருளால் வந்த மகவு" என்பது அப்பாடற்பகுதி.

இதே ஆதிபருவத்தில் சம்பவச் சருக்கத்தில் மான் மடி வெடுத்து இன்பம் நுகர்ந்த ஒரு முனிவன் வாய்மொழியாக "நாரிக்கு ஒரு கூறு நல்கும் அரனர்" என்றும், தீர்த்தயாத் திரைச் சருக்கத்தில் பாண்டியன் மொழியாக "கொன்றை நாள் மலரோன்" என்றும் இவ்வாறு வாய்ப்பு கிடைத்தபோதெல் லாம் வில்லிபுத்தூரார் சிவபெருமானைத் தாமும் நினைந்து நம்மையும் நினைவு கூரவைக்கின்றார்.

பாரதத்தில் இரண்டாவது பருவமான சபாபருவத்தில் உள்ள கவிமொழியாகவும், கதாபாத்திரங்களின் வாயிலாகவும் அமைந்த பெருமான் புகழை இனி பார்ப்போம். சபா பருவம் முழுவதிலும் ஒன்பது பாடல்களே சிவபெருமானைப்பற்றியதாக உள்ளன. இவ்வொன்பது பாடல்களிலும் ஒரே ஒரு பாடலில் தவிர மற்றைய பாடல்களில் சிவபெருமானைக் குறிப்பிட வேண்டிய கதைப்போக்கு ஏதுமில்லையெனினும் சிவபிரானைப் பற்றிப் பாடாதிருக்க இயலாமையாலோ என்னவோ இப் பாடல்களைப் பாடியுள்ளார் என்று நினைக்க வேண்டியுள்ளது.

இப்பருவம் இராசசூயச்சருக்கம், சூதுபோர்ச்சருக்கம் என இருபிரிவுகளையுடையது. இவற்றுள் இராசசூயச்சருக்கம் என்ற முதலாவது பகுதியில் ஆறுபாடல்களில் சிவனாரைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவற்றுள் ஐந்து பாடல்களை ஒவ்வொரு பாடலாகப் பார்ப்போம்.

காண்டவ வனம் அக்கினிதேவனால் எரிக்கப்பட்டபோது மயன் என்ற தேவதச்சன் அதிலிருந்து அருச்சுனனால் அபயம் அளிக்கப்பட்டு உயிர் பிழைக்கின்றான். இந்திரபிரஸ்தத்துக்கு வந்து தான் பெற்ற உயிர் உதவிக்குப் பிரதியுதவியாகப் பாண்டவர்க்குச் சிறந்ததொரு மண்டபத்தை அமைத்துத் தருவேன் என்று கூறி அவன் மண்டபங்கட்டிய செயலை இராச சூயச் சருக்கம் 6-வது பாடல் பின்வருமாறு கூறுகிறது.

மீதடுக்கிப் பசும்பொன்னாற் சுவர்செய்து
மரகதத்தூண் வீதிபோக்கி
ஓதிடத்திற் சுருங்காமற் செழுந்துகிர் உத்-
திரம் பரப்பி உலகோரேழும்
மாதிடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ
இதுவென்ன வரம்பில் கேள்விச்
சோதிடத்தோர் நாளுரைப்பச் சுதன்மையினும்
முதன்மைபெறத் தொடங்கினானே.

(இதன் பொருள்) சோதிட நூல்வல்லோர் நல்லநாள் சொல்ல, தங்கக்கட்டிகளை மேலும் மேலும் அடுக்கிச் சுவரைக் கட்டி, மரகதமென்னும் பச்சைமணிக் கற்களால் தூண்களை வரிசையாக நிறுத்தி, சிற்ப சாத்திரங்களில் கூறப்பட்ட இடத் தினளவில் சுருங்காமல் செழுமையான பவழத்தினாலாகிய உத்தரம் போட்டு, ஏழுலகத்து மக்களும் உமையம்மையாரை இடப்பாகத்திலேயுடைய சிவபிரான் வீற்றிருத்தற்கும் இத் தகைய மண்டபம் கிடைக்குமோ என்று அதிசயித்துக் கூறும் படி சுதர்மை என்ற தேவேந்திரசபா மண்டபத்தினும் மேம்படு மாறு மண்டபத்தைக் கட்டத் தொடங்கினான்.

இப்பாடலில் 'மாது இடத்தான் வைகுதற்கு வாய்க்குமதோ' என்று கூற வேண்டியது அவசியம் தானு? கதையின் போக்குக்கும் இதற்கும் உள்ள இயைபு என்னே ? அந்த மண்டபத்தின் சிறப்பை வருணிக்க வேண்டும் எனில் வைணவராகிய புலவர் 'திருமாலுக்கும் வைகுதற்கு வாய்க்குமதோ' என்று கூறியிருக்கலாகாதா ? சிவபெருமானைக் குறித்துப் பேச வேறு வாய்ப்பு இப்பருவத்துள் அதிகமாக இன்மையால் எங்கேனும் பெருமானைப் பாடியே ஆகவேண்டும் என்ற அவரது அவாதான் இதற்குக் காரணம் என்ருல் மிகையாமோ ? என்னே வில்லிபுத்தூராரின் சிவபக்தி !

இராசசூயயாகம் ஆரம்பிக்கப்பட்ட பொழுது அதைச் செய்ய வேண்டியவனுன தருமனையும் உடனிருக்க வேண்டிய திரெளபதியையும் அலங்கரிக்கத் தொடங்கினுர்கள். முதலில் கங்கை நீர் கொண்டு தீர்த்தமாட்டினுர்க்ள் என்ற செய்தியைக் கவி எங்ஙனம் கூறுகிருர் என்பதை இராசசூயயாகச் சருக்கம் 99 வது பாடல் அழகுறக் கூறுதல் காண்க.

> கதியொடு பிறைதவழ் கடுக்கைக் காட்டுநல்
> நதிதரு புனல்கொடு நானம் ஆட்டினர்
> விதிமுறை அறிந்தவர் வேள்விக்கு ஏற்பன
> பதியுடன் அணிந்தனர் பாவை தன்னையும்.

(இதன் பொருள்) அடைக்கலம் பெற்று அங்கு வந்த பிறைச்சந்திரன் ஊர்ந்து செல்லும் கொன்றைப் பூமாலையைத் தரித்த சிவபிரானது சடையாகிய காட்டினின்றும் இழிந்த நல்ல நதியாகிய கங்கையினின்றும் கொணர்ந்த தீர்த்தத்தைக் கொண்டு திரெளபதிக்கும் தருமபுத்திரனுக்கும் ஸ்நானம் செய்வித்தார்கள். மேலும் சாத்திரவிதிகளை அறிந்தவர்கள் அவர்கள் இருவரையும் யாகச் சடங்குகளுக்கு ஏற்றமுறையில் அலங்கரித்தார்கள்.

புலவர் கூறவந்த செய்தி கங்கை நதியின் தீர்த்தத்திஞல் தருமனையும் திரெளபதியையும் நீராட்டினுர்கள் என்பதேயாப்.

ஆனால் கங்கை என்றவுடன் சிவபிரானைக் கூறுதிருக்க முடியுமா? எனவே அப்பெருமானின் சடையினைப் பாடினார். சடைமுடி என்றதும் அதில் தங்கும் கொன்றையையும் பிறைச் சந்திரனையும் நினைவு கூர்ந்தார். பிறைச்சந்திரன் சடைக் காட்டில் ஏன் வந்து தங்கினான்? அதனை விளக்குவார் போல " கதியோடு பிறைதவழ் " என்றார். மாமனின் சாபத்தால் இளைத்து வருந்திய சந்திரன் பிரம விட்டுணுவாதி தேவர்கள் எவரிடமும் பாதுகாப்புப் பெறமுடியாமல் சிவபிரானிடம் வந்தே கதி (புகலிடம்) பெற்றான். இது கந்த புராணம் தக்ஷகாண்டத்தில் உள்ளது. சிவபிரானின் பெரும் ஆற்றலை யும் எல்லையில்லாத கருணையையும் காட்டுகின்ற இவ்வர லாற்றை நம்மை நினைக்கும்படி இப்பாடலை அமைத்த திறம் போற்றுதற்குரியது.

தருமனும் திரௌபதியும் யாகத்துக்கேற்ற முறையில் அலங்காரம் ஆனபிறகு வேள்விச்சாலையில் இருந்த காட்சி இச்சருக்கத்து 104 ம் பாடலில் கூறப்படுகிறது.

> கடகரி உரிவைபோர்த்த கண்ணுதற் கடவுள்மாறி
> இடம்வலம் ஆகப்பாகத்து இறைவியோ டிருந்தவாபோல்
> உடல்கலை உறுப்புத்தோலின் ஒளிந்திடப் போர்த்துவேள்விக்
> கடனினுக் குரியவெல்லாம் கவினுறச் சாத்தினானே.

வேள்வி செய்பவன் தனது உடலை மான் தோலினால் போர்த்திக்கொள்ளும் முறைப்படி தருமபுத்திரன் தனது உடல் மூடுமாறு கிருஷ்ணமிருகம் என்ற கருமானின் தோலைப் போர்த்திக் கொண்டான். இது கிருஷ்ணாஜினம் எனப்படும். இதற்கு முன் பாடலில் (பாடல் 103) கூறியபடி திரௌபதி யைத் தனது வலப்பக்கத்தில் அமருமாறு செய்தான். இந்தக் காட்சியை, அதாவது உடல் முழுதும் தோலினால் போர்த்துக் கொண்டு திரௌபதி வலப்பக்கத்தில் வைகும்படி தருமராசன் வேள்வியில் இருந்த காட்சியை, புலவர் பெருமான் தமது மனக்கண்ணில் இருத்திக் காண்கிறார். தருமன் அப்போது இருந்த நிலைக்கு ஒரு உபமானம் கூறவிருப்புகின்றார். அவரது

நினைவிலே தோன்றியவன் திருமாலல்லன், பிரமனல்லன், இந்திரனுமல்லன், பின் எவரெனின் உமாதேவியாரை இடப் பக்கத்தே கொண்ட சிவபிரானேயாவர். சிவபிரானும் கஜா ஸுரன் என்ற யானையின் தோலை உரித்துப் போர்த்தியவர். எனவே கரியமான் தோலைப் போர்த்திய தருமன் கரிய யானை யின் தோலைப் போர்த்திய சிவபிரானைக் காட்சியளித்தது சரியே. ஆனால் திரௌபதி தருமனின் வலப்பக்கத்தேயிருக்க உமாதேவியார் இறைவரின் இடப்பக்கம் அல்லவோ வீற்றி ருக்கிறார். இதற்கு என் செய்வது? எப்படியும் இங்கு சிவ பெருமானைத்தான் உபமானமாகச் சொல்லவேண்டும் என்று கவிஞர் உறுதி கொண்டு விட்டபடியால், சிவபெருமான் உமா தேவியாரைத் தமது இடப்பக்கத்திலிருந்து வலது பக்கத்திற்கு இடம் மாற்றி வைத்துக் கொண்டு இருந்ததை ஒத்தது என்று திறம்படக் கூறியுள்ளது சிவநேயர்கள் அறிந்து மகிழ்தற்குரிய தாம். வில்லிபுத்தூராரின் சிந்தனையில் சிவபெருமான் எப் பொழுதும் நீங்காதிருந்தமைக்கு இதுவும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இராசசூயயாகம் நிறைவுற்ற பின்னர், தருமன் முதல் பூசையை யாருக்குச் செய்வது என்று பீஷ்மரைக் கேட்டான். பீஷ்மர் வியாஸரை வினவ, அவர் முதற்பூசையைக் கிருஷ்ண னுக்கு செய்யும்படி கூறினர். சபையிலுள்ளோரும் அதை ஒப்பினர். ஆனால் ஒருவன் மட்டும் எதிர்த்துப் பேசினன். அவன் யார் என்பதை இராசசூயச் சருக்கம் 114வது பாடல் கூறுவது காண்க.

பூபாலர் அவையத்து முற்பூசை
பெறுவார், புறங்கானில்வாழ்
கோபால ரோவென்று உருத்தங்கு
அதிர்த்துக் கொதித்தோதினன்
காபாலி முனியாத வெங்காமன்
நிகரான கவினெய்தியேழ்
தீபால டங்காத புகழ்வீர
சுயமன்ன சிசுபாலனே.

(இதன் பொருள்) இந்த நிலவுலகத்து அரசர்கள் கூடி யிருக்கும் இந்த சபையில் முதற்பூசை பெறுபவர் முல்லைநிலம் எனப்படும் காட்டில் வாழும் இடையர்களோ எனச் சினங் கொண்டு பேரிரைச்சலோடு கொதித்துக் கூறினன். (யாவன் எனில்) சிவபிரானுற்கோபித்து எரிக்கப்படாத மன்மதனுக்கு ஒப்பான அழகு பெற்று ஏழு தீவுகளிலும் அடங்காத புகழ் உடையவனும் யானை போன்ற வலிமையுடையவனுமான சிசுபாலனவன்.

இப்பாடலிலும் சிவபிரானைப் பற்றிய கதைத்தொடர்பு ஏதுமில்லை என்பது கவனிக்கத்தக்கது. சிசுபாலன் பேரழகன் என்று கூறவேண்டும். அதற்கு மன்மதனை உபமானமாகக் கூறவேண்டும். மன்மதன் திருமாலின் மகன். எனவே திருமாலின் மகனை மன்மதனை ஒத்த அழகினன் எனக் கூற லாம். அதே மன்மதன் சம்பரன் என்ற அசுரனையழித்தவன். எனவே சம்பராரி எனப்படுபவன் எனவுங் கூறலாம். சிசு பாலன் அழகுமட்டுமல்லாது வீரமும் உடையவன் எனப்படு தால் சம்பராரியான மன்மதனைப் போன்ற அழகுடையவன் என்பதும் பொருத்தமாகலாம். ஆனுல் பாரதக்கதையின் பத்து பருவங்களிலேயும் சிவபிரானைப் பாடவேண்டும் என்று உறுதி யுடன் இருந்தவராகலின், சிவபிரானைப்பாட வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் பாடுவதை மறக்கவில்லை என்பதே இங்கு காபாலி முனியாத வெங்காமன் அதாவது சிவபிரானுல் கோபித்து எரிக்கப்படாத மன்மதன் என்று கூறியதன் காரணம் என்பதில் ஐயமும் உண்டோ ?

சிசுபாலன் கண்ணனின் அத்தைமகனவன். அவன் பிறந்த பொழுதே கண்ணனே அவனைக் கொல்லப்போகிறவன் என்பதை அசரீரி மூலமறிந்த தாய், 'யாதுசெய்யினும் என் மகனைக் கொல்லலாகாது' என்று கண்ணனை வேண்ட, அந்த அத்தையின் வேண்டுகோளுக்கிரங்கி இவன் எனக்கு நூறு பிழை செய்யுமளவும் இவன் பிழையை யான் பொறுப்பேன் என்று கண்ணன் கூறினன். அதன்படி இராசசூயயாக சபையில் சிசுபாலன் கண்ணனை நிந்திக்கத் தொடங்கினதும்

கண்ணன் சிசுபாலனின் நிந்தைகளை நூறு ஆகும் வரை எண்ணிக்கொண்டே வந்து நூற்றுக்குமேற்பட்ட பின்பு பொறுக்கமாட்டாதவனுய்ச் சிசுபாலனுடன் போர் புரியத் தொடங்கினுன். சிசுபாலனும் பெரும் வீரனுதலின் கண்ண னுடன் போர் புரிந்தான். அப்போரின் முடிவில் கண்ணனது சக்கரப்படை சிசுபாலனின் தலையைத் துணித்துவிட்டது. சிசுபாலன் உயிர் கண்ணனது திருவடியைச் சென்றடைந்தது. இராசசூயச் சருக்கம் 145 பாடலில் சபையோர் இது கண்டு வியப்படைந்த செய்தி கூறப்பட்டுள்ளதைக் காண்க.

ஈதொரு புதுமை இருந்தவா என்பார்
இந்திர சாலமோ என்பார்
மாதொரு பாகன் அல்லதிக் கண்ணன்
மதிகுலத் தவனலன் என்பார்
கோதொரு வடிவாம் புன்மொழி கிளைஞர்
கூறினும் பொறுப்பரோ என்பார்
காதொரு குழையோன் இளவலைத் தேர்மேல்
கண்டுதம் கண்ணிணை களிப்பார்.

இப்பாடலில் நமக்குத் தேவையானது முன்னிரண்டு அடிகளில் கூறப்பட்ட செய்தியேயாம். சிசுபாலனது உயிர் கண்ணனது திருவடியைச் சென்றடைந்ததும், சபையிலுள் ளோரில், "ஈது ஒரு புதுமையாக இருக்கிறதே! என்பார் சிலர், இது இந்திரசாலமோ என்பார் சிலர், இந்தக் கண்ணன் உமாதேவியாரைப் பங்கிலே கொண்ட சிவபிரானேயல்லாது சந்திர வம்சத்திலே தோன்றிய மானிடனுகமாட்டான் என்று இன்னும் சிலர் கூறுவர்", என்பது அவ்வடிகளின் பொரு ளாகும். சபையினர் எல்லோருமே இங்ஙனம் ஒருமித்துக் கூறினர் என்று பொருள் கொள்ளினும் பொருந்தும். இங்கு நேயர்கள் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. அதாவது கிருஷ்ணன் திருமாலின் பூரணுவதாரம். திருமாலுக்கும் கிருஷ்ணனுக்கும் பேதமில்லா வகையில் தான் பாரதமும் புராணங்களும் கூறுகின்றன. சபையிலிருந்த பீஷ்மர், வேத வியாஸர் ஆகியோர் இஃது அறியாதவரல்லர். இக்காவியம்

பாடிய வில்லிபுத்தூராரும் இது அறியாதவரல்லர். எனவே கிருஷ்ணன் சந்திரவம்சத்திலே தோன்றிய மானிடனுகான், அவன் வைகுண்டாதிபதியான திருமாலே ஆவன் என்று சபை யோர் கருதினர் எனக் கவிஞர் பாடியிருப்பின் எவ்விதமான பிழையும் இல்லை. ஆயின் அவர் அங்ஙனம் பாடவில்லை.

காவியங்களில் தாம் பாடும் தலைவனைத் தனக்கு ஒப்பும் மிக்கும் இல்லாத மிக உயர்ந்தவனுகவே காட்டுவதும், மிக உயர்ந்தவனேடு ஒப்பிடுவதும் புலவர்கள் கையாளும் மரபு. இம்முறையில் கண்ணனைத் திருமாலாகவே சபையோர் கண் டனர் எனக் கூறுவது சாலும் எனினும் அத்திருமாலினும் உயர்ந்த ஒரு புருஷனுகக் கண்ணனைக் காட்டவிரும்பினர் புலவர். அத்தகைய பரமபுருஷன் சிவபிரானேயன்றி வேறு யாவன்? எனவே "மாதொரு பாகனுகிய சிவபிரானல்லது இக்கண்ணன் மதிகுலத்தவன் அலன்" என்று பெருமிதத்தோடு பாடிமுடித்தார். வில்லிபுத்தூரார் சிவபிரானே திருமாலினும் பெரியவன் எள்று தெளிவாக அறிந்து கொண்டவர் என்பதற்கு வேறு ஒரு சான்றும் வேண்டுமோ?

சபா பருவத்தில் கதாபாத்திரங்களின் வாய்மொழியாக மூன்று இடங்களில் சிவபிரானைப் பற்றிய குறிப்புக்கள் உள வேனும் முக்கியமான இரண்டிடங்களையே இக்கட்டுரையில் காட்டுவோம். இராசசூயச்சருக்கத்தில் பாண்டவர்களுக்கு முற்பிறப்பினை வியாஸர் மீண்டும் உணர்த்துகிருர். அப் பாடல் வருமாறு:

இங்கிதத்து இந்திரர் என்பர் யாவரும்
சங்கரன் விதியினுல் தரணி பாலராய்
வெங்கனல் தோன்றிய மின்னை ஐவரும்
மங்கலம் புவிமகள் வழக்கின் எய்தினீர்.

—இராசசூயச் சருக்கம், 65-ம் பாடல்.

"சிவபிரானை மதியாது தருக்குற்று அதனுல் பிலத்தில் அடைக்கப்பட்ட ஐந்து இந்திரர்களாகிய நீவிர் யாவரும்

சங்கரன் ஆணைப்படி இப்புவியில் அரசர்களாகத் தோன்றி, யாகத்தழலில் தோன்றிய திரௌபதியை மணந்து கொண்டீர் கள்'' என்பது இப்பாடலின் பொருள். எனவே இந்திரர் பூமியில் தோன்றியதும், திரௌபதி யாகத்தழலில் தோன்றிய தும், அவளை ஐவரும் மணந்து கொண்டதும் யாவுமே சிவ பெருமானின் கட்டளை என்பது மறுபடியும் இங்கு உணர்த்தப் பெற்றது. அங்ஙனம் இறைவர் ஆணையிட்டது அவர்களுக்கும் இவ்வுலகுக்கும் நன்மை பயக்கவேயாதலின் சிவபெருமானை சங்கரன் என்ற பெயரால் குறிப்பிட்டார். (சம்—நன்மை, கரன்—செய்பவன்).

அடுத்து, மயன் செய்த மண்டபத்தில் தருமன் தம்பி யருடன் வீற்றிருந்தபோது நாரத முனிவர் விஜயம் செய்தார். அப்பொழுது நாரதரை வரவேற்றுக் கூறிய உபசார மொழி யாகத் தருமன் வாய்மொழியாகச் சிவபெருமானைப் புலவர் கொண்டாடுவது இதோ காண்மின்.

''யான்புரிந்த தவமுலகில் யார்புரிந்தார்
அவனிபரில் இசையின் வீணைத்
தேன்புரிந்த தெள்ளமுதால் அமுதுண்டோர்
செவியிரதம் தெவிட்டு விப்பாய்
மான்புரிந்த திருக்கரத்து மதிஇருந்த
நதிவேணி மங்கை பங்கன்
தான்புரிந்த திருக்கூத்துக் கிசையமகிழ்ந்து
இசைபாடும் தத்வ ஞானி.

—இராசசூயச் சுருக்கம், 11-ம் பாடல்.

இப்பாடலின் பிற்பகுதி இறைவரைப் புகழ்கிறது. ஒரே அடியில் இறைவர் திருக்கரத்தில் மானேந்தியது, தலையிலே பிறைச் சந்திரனைத் தரித்தது, சடையிலே கங்கையைத் தாங்கி யது, ஒருபக்கத்திலே உமையம்மையை வைத்தது ஆகிய

அருட்செயல்களைப் பாடிச் சிவபெருமானின் பெருமையை நிலை நாட்டிய வில்லிபுத்தூராரின் சிவபக்தியைப் போற்றி மகிழ் வோமாக.

அடுத்த மூன்றாவதான ஆரண்ய பருவத்தில் 94 பாடல் களில் சிவபெருமானைக் கவிமொழியாகவும், கதாபாத்திரங்க ளின் வாய்மொழியாகவும் வில்லிபுத்தூரார் பாடி மகிழ்வதைத் தொடர்ந்து வரும் ஆண்டு மலர்களில் கண்டு நாமும் மகிழ் வோம்.

சிவம்.

உ

# திருக்குறள் - உரைக்கொத்து

## அறத்துப்பால்

இந்நூலில் பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார், காலிங்கர் உரைகளும், திரு. கோ. வன்மீகநாதன் பிள்ளையின் ஆங்கில மொழி பெயர்ப்பும் தொகுத்துப் பதிப்பிக்கப்பெற்றுள்ளன. திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு திருக்குறள் நிதி யின் சார்பில் இந்நூல் வெளியிடப்பெற்றிருக் கிறது. 20 பிரதிகளுக்கு மேல் வாங்குபவர்க்கு 20% கழிவு அளிக்கப்படும்.

**ஒரு பிரதி விலை...ரூ. 7-50**

**தபாற்செலவு......ரூ. 3-75**

## திருமுறைகளும் சாத்திரங்களும்

பன்னிரு திருமுறைகள் நூல்களும் உரை யுடன் கூடிய சாத்திர நூல்களும் அடக்க விலைக்குக் கிடைக்கப் பெறும். 20 பிரதிகளுக்கு மேல் வாங்குபவர்க்கு 20% கழிவு அளிக்கப்பெறும். தபால் செலவு தனி.

தொடர்பு கொள்ளும் முகவரி:

**மேலாளர், ஸ்ரீ காசிமடம்**
**திருப்பனந்தாள்—612504.**

உ

# ஸ்ரீ குமரகுருபரர்

## சமய இலக்கியத் திங்களிதழ்

இவ்விதழ் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்திலிருந்து மாதந்தோறும் வெளிவருகிறது. சாத்திரம், தோத்திரம், இலக்கியம் முதலியன பற்றிய கட்டுரைகள் இடம் பெறுகின்றன.

ஆண்டுச்சந்தா......ரூ. 10-00

ஆயுட்சந்தா.........ரூ. 125-00

ஆயுட்சந்தாதாரரின் வாழ்நாட்களுக்குப் பின் வாரிசுதாரர்க்கும் தொடர்ந்து இதழ் அனுப்பப் பெறும். ஆயுட்சந்தா செலுத்துவோர்க்குக் கந்தர் கலிவெண்பா எல். பி. இசைத்தட்டு ஒன்று இலவசமாக அளிக்கப் பெறும். அதைப் பெறுவதற்கு தபாற்செலவு ரூ. 9-00.

தொடர்பு கொள்ளும் முகவரி:

நிர்வாக ஆசிரியர்,
''ஸ்ரீ குமரகுருபரர்''
ஸ்ரீ காசிமடம்
**திருப்பனந்தாள் — 612504**

உ

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

திருவாவடுதுறையாதீனவித்துவான்

சித்தாந்த பண்டித பூஷணம்

சிவஸ்ரீ. ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளையவர்கள்

இயற்றிய

# சிவபரத்துவ நிச்சயம்.

உரைவிளக்கம்:

வித்துவான் ச. இரத்நவேலன் அவர்கள், சங்கரன்கோவில்

(1985 ஆண்டு சிவஞான பூஜாமலர் தொடர்ச்சி)

யோனியி லுதித்த பின்மா லுஞற்றிடு செயல்க ளுள்ளே
யீனமி தி∴தா மென்று மேற்றமி தி∴தா மென்று
மானவ னவற்றை யெல்லாம் வகுக்குமா றுளதோ நேரே
யீனர னுறலி னன்னே னிலீலைகட் கிகழ்ச்சி யின்றே.

(பொ-ரை) நால்வகை யோனியுள் ஒருயோனி வாய்ப்பட்டுத் திருமால் பிறந்தது முதல் செத்து வரை எல்லாச் செயல்களையும் ஒன்றும் விடாமல் இது இது மாந்தர் முதலிய உயிர்ச்செயல், இது இது தெய்வச்செயல் என ஒரு மனிதன் பிரித்துக் காணும் வழியுண்டா? ஆனால் நால்வகை யோனியுள் ஒருயோனி வாய்ப்பட்டுப் பிறந்திறவாது இவ்வுலகில் நேரே திருமேனி தாங்கி வெளிப்படும் அரனது மனிதர் போல் தோன்றும் திருவிளையாடல்களுக்கு நிந்தை எக்காலத்தும் இல்லை என்றுணர்க என்பதாம்.

ஈன்+அரன்+உறலின் எனப்பிரிக்க. ஈன்-இவ்வுலகில், உறலின்—திருமேனி தாங்கி வெளிப்படுவதால்.

இச்செய்யுளால் திருமேனி தாங்கி வந்த சிவபிரானிடம் நிந்தை போல் தோன்றும் லீலைகளும் அவரின் பிறவாமை ஒன்றுனேயே மதிப்படையும் என்பது கூறப்பட்டது. (106)

காரண வீசன் யாண்டுங் கருப்புகா மேன்மை தன்னைக்
காரண மின்றி யாருங் கருவினுட் புகுவா ரென்றுங்
காரண மவாவே யாகக் கடவுளங் குறுவா னென்றுங்
காரண வழுக்கள் கூறுங் கற்றிலா ரறிவார் கொல்லோ.

(பொ-ரை) காரணமின்றியே யாருங் கருவினுள் புகுவார் (Birth is accidental) என்னும் நாத்திகராதியோர் கூற்றும், இச்சை வசத்தால் கடவுள் கருவுட்பட்டுப் பிறத்தலுங்கூடும் என்னும் வைஷ்ணவராதியோர் கூற்றும் காரண வழுக்கள் கூறும் கல்லாதவர் கூற்றெனத் தள்ளுக. அப்படியாதலின், மடவோர் நிமித்த காரணனுகிய சிவபரம்பொருள் எக்காலத் தும் கருவுள் படான் என்னும் மேலாம் பொருண்மைக் கூற்றை உள்ளங் கொள்ளுவரோ? மாட்டாரென்க.

காரண காரியக் கிரமங்களை அறியாதவரே கடவுளுக்குப் பிறப்புண்டென்பா ரென்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (107)

சூக்கும வுடம்பின் பாலாய்த் தோன்றுமித் தூல தேகஞ்
சூக்கும வுடம்பை விட்டித் தூலநீங் கிடலே சாவாஞ்
சூக்கும வுடம்பு மாயை யாதலாற் சோமன் ரேயான்
சூக்கும தூல மாமத் துவயமு மதனுற் சாகான்.

(பொ-ரை) சூக்கும உடம்பினின்றும் கண்ணுக்குத் தெரி யும் இத்தூல உடம்பு தோன்றும். சூக்கும உடம்பு இத்தூல உடம்பை விட்டுப் பிரிதலே சாவு என்று உலகில் கூறப்படும். சூக்கும தூல உடம்புகள் இரண்டும் மாயாகாரியங்கள் ஆத லால் அவ்விரண்டு உடம்புகளையும் சிவபிரான் பொருந்த மாட் டான். அப்படிப் பொருந்தான் ஆதலினுலேயே சாவும் அப் பிரானைப் பொருந்ாது.

சிவபிரான் சாகாதவர் என்பது இச்செய்யுளால் கூறப் பட்டது. (108)

தீவினை தனக்குத் தந்த சென்மமெப் பயனு மின்றிப்
போவது விரும்பா விண்டு புராரிபாற் பணிந்து தன்ம
தாவன முலகிற் செய்யும் சதுரினை வேட்டா னம்மால்
மேவிடு பிறப்பின் வித்தா விளம்பவாப் பொருடா னஃதே.

(பொ-ரை) பிருகு மஹரிஷியின் மனைவியைக் கொன்ற தீவினையால் ஏற்பட்ட சாபப்பயனாகிய பிறப்புக்கள் பயனுடையனவாக வேண்டுமென்று மஹாவிஷ்ணு விரும்பித் தர்ம ஸம்ஸ்தாபனம் செய்யும் பிறவிகளெடுக்கும் வன்மையை விரும்பித் தவம் செய்து சிவபிரானிடம் வேண்டி நின்றார். அத்திருமால் கொண்ட பிறப்புக்குக் காரணமாகச் சொல்லப்படுகின்ற சுவேச்சைக்கு அர்த்தம் அவ்வேண்டி நின்றதேயாம்.

'நாராயணஸ்ய ஸ்வேச்சாநு சாரேணைந்மேஷோ ஜாயதே' 'நாராயணஸ்யேச்சாவ சாந்நிமேஷோ ஜாயதே' என்ற திரிபாத் விபூதி மஹாநாராயணோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

விஷ்ணு பிறந்தது அவரிச்சையாலென்பதற்குப் பொருளிதுவென்பது இச்செய்யுளால் காட்டப்பட்டது. (109)

மாமியி னுயிரை வாங்கி மாமனுற் சபிக்கப் பட்டுப்
பூமிமா லுதித்த போது புராரிகைப் பட்டு நைந்தான்
வாமன மச்சங் கூர்மம் வராகமா மடங்கல் தன்னில்
காமமோ வதனு லந்தக் கார்வணற் கவதா ரங்கள்.

(பொ-ரை) பிருகு மஹரிஷியின் மனைவி கியாதியின் உயிரை வாங்கித் தமது மாமனாகிய பிருகு மஹரிஷியால் சபிக்கப்பட்டுத் திருமால் பூமியில் உதித்த அவதாரங்களாகிய பத்தில் வாமன, மச்ச, கூர்ம, வராக, நரசிம்ம அவதாரங்கள் சிவபிரான் கைப்பட்டு நைந்தன. இப்படித் தண்டிக்கப்பட்ட அவதாரங்களும் விஷ்ணுமூர்த்தியின் இச்சை வயத்தனவோ? இல்லையென்க.

காஞ்சிப்புராணம் அரிசாப பயந்தீர்த்த தானப்படலத்தில் 5, 6, 7, 8 ஆவது செய்யுட்களும், 'யோ மத்ஸ்ய கூர்மாதி

வராஹ ஸிம்ஹாந் விஷ்ணும் க்ரமந்தம் வாமந மாதி விஷ்ணும் விவிக்லபம் பீட்யமாநம்...தஸ்மை ருத்ராய நமோ அஸ்து', என்ற சரபோபநிஷத்தும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

தசாவதாரங்களுட் சில தண்டிக்கப்பட்டபடியால் அப்பத்தவதாரங்களும் பிறவும் கர்மவசமேயாம் என்பது இச்செய்யுளால் தெரிக்கப்பட்டது. (110)

வெப்புறு கருப்பை தன்னுள் விட்டுணு கிடந்த காலை
யப்பனே யன்னையே தானே யயலவர் தாமே கண்ட
தெப்பய னெடுமால் கர்ப்பத் திழிந்திட லிச்சை யென்ரு
யிப்படி விருதா வேலை யியற்றிடா னெங்க ளீசன்.

(பொ-ரை) வெம்மை பொருந்திய கருப்பையில் விஷ்ணு மூர்த்தி கிடந்த பொழுது அப்பன், அம்மை, கருப்பத்துட் கிடந்த மால் மற்றும் அயலவர் கண்ட பயன் என்ன? துன்பமே யல்லவா? திருமால் கர்ப்பத்தில் பிரவேசித்தல் இச்சையென்று பேசப்பட்டால், அப்படிப்பட்ட விருதா வேலையை எங்கள் ஈசன் எக்காலமும் செய்திடான்.

'பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டவப்பாங்கினல்' என்ற நாலாயிரப் பிரபந்தமும், 'பயனில்சொல் பாராட்டுவானை மகனெனல், மக்கட் பதடி எனல்' என்ற திருக்குறளும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

கடவுளாயின் அவர்க்குக் கர்ப்பவாசம் வீண்காலப் போக்கென்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (111)

கருவுட லனைத்தும் பெற்ரோர் கழிமல பரிண மங்கள்
மருவலி னுடல்மா லாங்கே மற்றது மலமா மன்ருேற்
குருபிறி தாமங் கென்னி னெழிகுவர் தாணுய்ப் பெற்ருேர்
தருகிழ லுறலாஞ் சேயாய்த் தமர்க்குமா லீசன் போல.

(பொ-ரை) கர்ப்பத்தில் உண்டாகின்ற சரீரங்கள் தாய் தந்தையர் கழிக்கின்ற சுக்கில சோணிதங்களாகிய அசுத்த

பதார்த்தங்களின் காரியங்களே. திருமாலும் அக்கருப்பத்துள் சென்று உடல் பொருந்துதலினுல் அவ்வுடல் திருமாலுக்கும் அம்மலபரிணுமங்களல்லாமல் அப்பிராகிருதமாகாது. ஆகு மெனின் நரசிம்மம் வந்த தூண் அந்நரசிம்மத்துக்குத் தந்தையும் தாயுமாகாதவாறு இராமன் கிருஷ்ணன் முதலியோருக்குத் தசரதன், கோசலை முதலியோர் தந்தை தாயாராக மாட்டார். அன்றியும் திருமால் சுயேச்சை வசத்தால் பிறப்பெடுத்தாராயின் ஈசன் போலத் தம் அன்பர் கண்காண மரநிழல், குளக்கரை, புஷ்பமத்தி முதலிய இடங்களிற் குழந்தையாய்க் கிடக்கலாமே.

'ஜாதம் ம்ருதமிதம் தேஹம் மாதா பித்ரு மலாத்மகம்', 'மாத்ரு ஸூதக ஸம்பந்தம் ஸூதகே ஸஹஜாயதே! ம்ருத ஸூதகஜம் தேஹம் ஸ்ப்ருஷ்ட்வா ஸ்நாநம் விதீயதே' என்ற மைத்ரேயோபநிஷத் இச்செய்யுட்குப் பிரமாணம்.

விஷ்ணுவின் அவதார சரீரங்கள் பெற்ருேரின் சுக்கில சோணித பரிணுமங்களே யாமென்பது இச்செய்யுளால் நிறுத்தப்பட்டது. (112)

தருநிழ லாதி தன்னிற் சங்கர னருளாற் சேயி
னுருவது கொண்ட சீரை யுணர்குவ தெவ்வா றென்னிற்
கருவரு முடல்போ லன்றிக் காண்டகு மச்சேய் மேனி
யிருளுரு நிழலைச் செய்யா வியல்பினு லறிய லாமால்.

(பொ ரை) மரநிழல், குளக்கரை, புஷ்பமத்தி முதலிய இடங்களில் சிவபிரான் திருவருளால் குழந்தை உரு வெளிப்படுவது அப்பிராகிருதம்; ஏனையன மாயாகாரியம் என்னும் உண்மையை உணர்வது எவ்வாறு என்ருல் கருவிலிருந்து வருகின்ற உடல் போலன்றிக் காணத்தக்க அக்குழந்தையின் திருமேனி இருளைத் தரும் நிழல் செய்யாது, அந்நிழல் செய்யாமை ஒன்ருனே அத்திருமேனி அப்பிராகிருத சரீரம் என்று அறிந்து கொள்ளலாம்.

'சடைமுடியும் வெண்ணீறுந் தாழ்வடமு மரவுரி
முடையவளாய்த் தவம் புரிந்து முருநிழற்ற விலேயென்பார்
கடைபயின்ற மடமுடையீர் கரிசுபடு மாயையினும்
வடிவதுவோ வாநந்த வடிவன்றோ விதுவென்பார்'

என்ற காஞ்சிப் புராணம் இச்செய்யுட்குப் பிரமாணம்.

அப்பிராகிருத சரீரம் நிழல் செய்யாதென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (113)

தாய்தலே துணித்தான் சாம தக்கினி தந்தை சொல்லா
லேய்வறு மனையை விட்டா னிராகவன் ருனு ம∴தாற்
காய்வினே யவரைத் தந்தை கருவினும் புகுத்திற் றென்ற∴
தாய்பவ ரறிவார் யாரே யரற்குமக் குறையுண் டென்பார்.

(பொ-ரை) தந்தை ஏவலுக்குக் கட்டுப்பட்டுப் பரசுராமன் தாயாகிய இரேணுகை தலேயைத் துண்டித்தான். கோதண்டராமனும் அவ்வாறே நிகரற்ற மனையைப்—பேரழகுடைய சீதையைப்—பிரிந்தான். அவ்விதமான பிதுர்வாக்ய பரிபாலனத்தாலேயே அவ்விரண்டு ராமர்களேயும் இருவினே காய்ந்தது என்பதும் அதுபற்றி அவ்விருவரும் தந்தை கருவினுள் தங்கும் தாழ்வுடையார் என்பது ஆய்பவரால் தெள்ளிதின் அறியப்படும். ஆனல் அப்படிப்பட்டதொரு தந்தை கருவுள் தங்கும் குறை, சிவபிராற்குண்டெனக் கூறுவார் யாரேனும் உளரோ? இல்லேயென்க.

காஞ்சிப்புராணம் இரேணுகேசப்படலம் 9,11,13 ஆவது செய்யுட்களும், வீரராகவேசப்படலம் 7,8,9 ஆவதுசெய்யுட்களும் 'மணிவாயிடை முத்தந் தருதலு முன்றன் ருதையைப் போலும் வடிவுகண்டு கொண்டு உள்ளம் உள்குளிர' என்ற நாலாயிரப் பிரபந்தமும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

விஷ்ணு தந்தை கருவினுங் கிடந்தாரென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (114)

சங்கட மின்றிச் சூலேத் தாங்கலு முயிர்த்த ருனு
மிங்கெவ டனக்கு மாகா யிருவினே யுயிரே யன்னுள்
மங்கல வுமைக்கே லீலே யாமவை யவாவால் மாலோன்
தங்கிய தகட்டிற் பாரிற் சனித்தது துயர்தாய்க் கன்ரே.

(பொ-ரை) துன்பமின்றிக் கருவைத் தாங்கலும் அவ்வாறே துன்பமின்றி மகவைப் பெறுதலும் இவ்வுலகில் இருவினே வயப்பட்ட எப்பெண்ணுக்கும் ஆகா. ஆனுல் அவ்விரண்டும் இல்லாமை மங்கல உமாதேவியாரிடத்து மாத்திரம் லீலா மாத்திரையால் உண்டென்க, அவளொருத்தியே தெய்வத் தாயாகலான். இச்சையால் திருமால் தங்கியது மாதா வயிற்றிலும் சனித்தது பூமியிலும் எனின் அவரை ஈன்ற தாய்க்குத் துயர் வரலாமா? வந்ததேயல்லவா?

கடவுள் இச்சையால் பிறந்தாராயின் தாய்க்குப் பிரசவம் சுகமாயிருத்தல் வேண்டும். உயிர்த்தாய்கட்கெல்லாம் சுகப் பிரசவம் கிடையாது. தேவகி, கோசலே, ரேணுகை முதலியோர் உயிர்களே. அவர்கட்குப் பிரசவ வேதனேயைத் தந்த விஷ்ணுவின் கர்ப்பவாசமும் கர்மவசமேயென்பது இச்செய்யுளால் தெரிக்கப்பட்டது. (115)

கோசலே யுதரம் பாய்ந்தோன் குதித்தொரு நதியிற் செத்தான்
தேசறு கருவாய் வந்து தேவகி யுதரம் பாய்ந்தோன்
நீசன தம்பாற் செத்தா னிதியோ வவர்தே வென்ற
ஞசமு முதிப்பு மில்லா நம்பனே வணங்கல் நன்றே.

(பொ-ரை) தசரதன் மனேவியர் மூவருள் மூத்த கோசலே வயிற்றில் தங்கிப் பிறந்த மஹாவிஷ்ணுவின் அவதாரமாகிய இராமன் ஸரயு நதியிற் குதித்து உயிர் துறந்தான். தேவகி வயிற்றில் பிறந்த பிறிதொரு அவதாரமாகிய ஸ்ரீகிருஷ்ணன் ஜரன் என்னும் வனவேடனது அம்பால் உயிர்நீத்தான். அவ்விருவரையும் முதற்கடவுள் என்று கூறுவது பொருந்துமோ? பிறப்பு இறப்பு இல்லாத சிவபிரான் ஒருவனே முதற்கடவுளும் வணங்கத்தக்கவனுமாவான்,

'எந்தத்தீர்த்தத்தில் ராமர் தேகத்தைவிட்டு...ஸ்வர்க் கத்தை அடைந்தாரோ (அந்த) ஸரயூநதி' என்ற பாரதத்து வனபர்வம் 323ஆவது பக்கமும், 'தசரத புத்திரரான ஸ்ரீராமரும் மாண்டார்' 'அந்த ராகவரே மாண்டார்' என்ற பாரதத்து துரோணபர்வம் 59ஆவது அத்தியாயமும், 'பிறகு பலராமர் கிருஷ்ணர் இருவர்களுடைய சரீரங்களையும் பார்த்து...எரிக் கும்படி செய்தான்' என்ற பாரதத்து மௌஸலபர்வம் 8ஆவது அத்தியாயமும் 'ஸ்ரீகிருஷ்ணர் பலராமருடன் சரீரத்தை விட்டு விட்டுப் பரமபதம் சென்றுவிட்டார்' என்ற ஷை, ஷை, 9-ஆவது அத்தியாயமும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள். இதில் குறிப் பிடப்பட்ட பாரதம் ம. வீ. இராமானுஜாச்சாரியா பதிப்பித்த வியாச பாரத மொழிபெயர்ப்பு.

இச்செய்யுளால் மஹாவிஷ்ணு சாவாரென்பது தெரிக்கப் பட்டது. (116)

பசுபதி நன்மா தேவன் உருத்திரன் பருக்க ஞதி
சசிதரன் நாமஞ் செப்பித் தவிர்ப்பனென் பிறப்பை யென்று
சுசியறு கருவி னுள்ளுந் துணியுமே சீவ னென்னி
னுசிதம தாமோ வேரே ருயிர்ப்பிறப் பறுப்ப ரென்றல்.

(பொ-ரை) சுத்தம் நீங்கிய கருவுள் தங்கி வளரும் உயிர் 'பசுபதி, மஹாதேவன், உருத்திரன், பர்க்கன்' முதலிய திரு நாமங்களால் சிவபிரான் ஒருவனையே தியானிக்கும். ஏனெ னில் 'என் பிறப்பைத் தவிர்ப்பவன் சிவபிரானே' என்னுமுண் மையை அவ்வுயிர் உள்ளவாறு உணர்ந்ததாகலான் அவ்வாறு தியானிக்கும். இவ்வுண்மையை கர்ப்போபநிஷத் எடுத்த குரலில் முழங்கியிருப்ப ஏனைய தேவர்கள் உயிர்களது சனன மரண துக்கத்தை நீக்குவர் என்று பேசுவது தகுமா? தகாது என்க.

'யதியோந்யாம் ப்ரமுச்யேயம் ப்ரபத்யே பரமேச்வரம் பர்கம் பசுபதிம் ருத்ரம் மஹாதேவம் ஜகத்குரும்' என்ற கர்போப நிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

கர்ப்பத்திலிருக்கும் குழவியுஞ் சிவபிரானைத் தியானித்தே பிறவியை நீக்கிக்கொள்ள விரும்புமென்பது இச்செய்யுளால் கூறப்பட்டது (117)

பொய்யுரு மனைவி தன்னைப் பொய்யுருப் பிதாவைச் சென்னி
வெய்யவ ரறுத்த போது வெங்களத் திராமன் கண்ண
னையகோ வென்று தேம்பி யழுதவர் மாயத் துற்றார்
துய்யதொ ரறிவு வேட்டார் தொழுதிட சிவனற் றுனே.

(பொ-ரை) மாயாசீதையை இந்திரஜித்தும், மாயாவசுதேவனைச் சால்வராஜனும் போர்க்களத்தில் கொன்ற பொழுது முறையே இராமனும் கிருஷ்ணனும் 'ஐயகோ' என அலறித் தேம்பித் தேம்பி அழுத செய்திகள் இராமாயண பாரதங்களுட் பேசப்படுகிறதே. அதுபற்றி இராமனும் கிருஷ்ணனும் இந்திரஜித், சால்வராஜனது மாயையில் அகப்பட்டுத் துயருற்றார் என்பது வெள்ளிடைமலையன்றோ? மாயையின் நீங்கிய திவ்விய ஞானத்தை விரும்பினர் மாயையுட்பட்ட இராம கிருஷ்ணர்களைவிட்டுச் சிவபிரான் திருவடித் தாமரைகளையே தொழுவாராக.

கம்பராமாயணம் மாயாசீதைப்படலமும், மஹாபாரதத்து வனபர்வம் 20, 21, 22ஆவது அத்தியாயங்களும், 'அதிமோஹ கரீ மாயா மம விஷ்ணோச்ச ஸுவ்ரத। தஸ்ய பாதாம்புஜத்யா நாத் துஸ்தரா ஸுதராபவேத்' என்ற சரபோபநிஷத்தும் இச் செய்யுட்குப் பிரமாணங்கள்.

மாயையிலகப்பட்டு உழல்பவர் விஷ்ணுவாகலின் ஞானம் சிவோபாசனையாலேயே வரற்பாலதென்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (118)

தராதல மதிக்க வாழ்ந்த தசரதன் வசுதே வன்சீர்ப்
பிராமண சமதங் கிப்பேர்ப் பெரியனுஞ் சைவ மேலோ
ரராவுமா நாமத் தந்த மாகிய விராவை மாவை
விராவியே விராமா வென்றார் விளங்குதம் புதல்வர் தம்மை,

(பொ-ரை) இப்பூவுலகத்தார் மதிக்க வாழ்ந்த தசரத சக்கரவர்த்தி, ஜமதக்நி முனிவர், வசுதேவன் ஆகிய மூவரும் சைவசமயம் பற்றி ஒழுகிய மேலோராவர். அதனால் தத்தம் புதல்வர்க்கு 'ஹரா, உமா' என்ற சிவசக்திகளின் திருநாமங்களது ஈற்றெழுத்தைச் சேர்த்து 'ராமா' எனக்கூட்டிப் பெயரிட்டழைத்தனர். அம்மூவரையும் உலகம் பிரித்தறிந்து கொள்ளவே ரகுராமன், பரசுராமன், பலராமன் என வழங்கா நிற்கும்.

'சிவோமா ராம மந்த்ரோயம் வஸ்வர்ணஸ்துவஸுப்ரத:' என்ற ராமரஹஸ்யோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

இச்செய்யுளால் இராமநாம சரித்திரம் இதுவென்பது தெரிக்கப்பட்டது. (119)

கோசலை யீன்ற சேயே குவலயத் திராம னென்னி
ஞசக லந்த நாம மவன்பினே பரவ வேண்டும்
தேசுறு பரசி ராமன் றிகழ்ந்தன னவற்கு முன்னே
பேசிடு மிராம நாமம் பிஞ்ஞுகற் கென்று வேதம்.

(பொ-ரை) கோசலை பெற்ற தசரத புத்ர ராமனே இப்பூமியில் முதல் இராமனுவான் என்று கூறுவையாயின் அத்தசரத ராமனுக்கு முன்னே ராமநாமம் இருந்திருக்க நியாயமில்லை. தசரத ராமனுக்குப் பிற்பட்டோர்தான் அந்நாமம் தாங்குதல் ஏலும். ஆனல் அக்கோசலை ராமன் பிறப்பதற்கு முன்னமேயே சிவபிராற்கு அந்நாமம் வேதத்தில் படிக்கப்பட்டமையால் பரசுராமனுக்கும் பெயராக இடப்பட்டது. பரசுராமன் கோசலைராமனுக்கு முந்தியவன் என்னுமுண்மையைச் சிறுமகாரும் அறிவர்.

ராமம் த்ரிநேத்ரம் ஸோமார்த தாரிணம் சூலிநம்பரம் ‌।
பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் கபர்திநமுபாஸ்மஹே ॥

என்ற ராமரஹஸ்யோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

இச்செய்யுளும் மேலதன் உண்மையை வலியுறுத்தியது. (120)

சீமதோ நீல கண்டன் சிறியனேற் கருண்மா தேவன்
தோமறு பிரபு வென்று துதித்தலோ டிராமே சத்தி
லோமொழி வாழ்வைப் பூசை யுஞற்றினன் சீதை நாத
ஞமவி லவற்குச் சம்பு நற்குல தெய்வ மன்றே.

(பொ-ரை) 'ஸ்ரீமத் நீலகண்டன் சிறியனுகிய எனக்கு அருள் செய்த மஹாதேவன்; குற்றமற்ற பிரபு அவனே' என வான்மீகி இராமாயணத்தில் இராமனே கூறி வணங்குதலானும், ஓம் என்னும் தாரகமந்திரத்துக்கு வாழ்வளிக்கும் சிவபிரானை இராமேச்சுரத்தில் சிவலிங்கந் தாபித்து வழிபடுதலானும் அச்சீதாராமற்குக் குலதெய்வம் ஸ்ரீசிவபிரானே என்பது ஐயமின்றிப் புலனுகின்றது.

'ஸ்ரீமதோ நீலகண்டஸ்ய க்ருத்யம்ஹி துரதிக்ரமம்', 'அத்ர பூர்வம் மஹாதேவ: ப்ரஸாதமகரோத் ப்ரபு:', 'வரதாநம் மஹேந்த்ரேண ப்ரஹ்மணுவருணே நச I மஹாதேவ ப்ரஸாதாச்ச பித்ரா மம ஸமாகம:' என்ற வான்மீக ராமாயணமும், 'பக்த்யாநம்ரதநோ விஷ்ணு ப்ரஸாத மகரோத் விபு:' என்ற சரபோபநிஷத்தும், 'ப்ரஸாதாத்கதயேச்வர' என்ற யோக சிகோபநிஷத்தும், 'சிவபூஜாரதச்சைவ' என்ற ராம ஸகஸ்ரநாமமும், 'தக்ஷ ஹஸ்த ஸதா பூஜ்ய சிவலிங்க நிவிஷ்டதீ:' என்ற அநந்த பற்பநாபஸ்வாமி அஷ்டோத்தரமும், தேவாரத்து திருவிராமேச்சுரப்பதிகமும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

இராமர் சிவோபாசனை செய்தாரென்பது இச் செய்யுளால் கூறப்பட்டது.
(121)

வாதரா யணனேர் காலே வன்கலிக் கஞ்சிக் காசி
போதரல் செய்து மாங்கே புத்திதான் கெட்டு மாலே
நாதனென் றுணே யிட்டா னந்தியாற் றூணு மானு
னேதம தரனைச் சொற்று ரெங்கணுங் கலிக்குத் தப்பார்.

(பொ-ரை) வாதராயணன் என்னுமியற் பெயருடைய வியாசமுனிவர் கலியுகம் பிறக்கப் போவதைக் கண்டு பயப்பட்டுக் காசிக்குப்போயும் அங்கே முனிவரர் ஐயத்தை நீக்க,

நாராயணனே பரப்பிரமம்' என்று விச்வநாதர் சந்நிதியில் சத்தியம் பண்ணினன். அதனல் திருநந்திதேவர் சாபத்துக் காளாகி தூணும் ஆனன். சிவபிரானுக்கே உரிய பரத் துவத்தை ஏனையோர்பாற் சார்த்துவது சிவபிரானைப் பழிப் பதேயாகும். சிவபிரானுக்குப் பரத்துவ ஹானியாகிய குற்றத் தைச் சொன்னவர் கலிபீடைக்குத் தப்பமாட்டார் என்பதை இச்சரித்திரத்தால் அறியலாம்.

காஞ்சிப் புராணம் சார்ந்தாசயப்படலம் இச்செய்யுட்குப் பிரமாணம்.

விஷ்ணுவைப் பரம்பொருள் என்று வேதவிரோதம் பேசிய வியாசர் தண்டிக்கப்பட்டாரென்பது இச்செய்யுளால் கூறப் பட்டது. (122)

அடியினை யறியப் பன்றி யச்சுதக் கடவு ளானன்
முடியினை யறிய வன்ன முளரியோ னுன ஞற்
கடிவிரி கொன்றை வேணிக் கண்ணுதல் கீழு மேலும்
வடிவுறு நெருப்பா யண்ண மலையென வளர்ந்தா னங்கே.

(பொ-ரை) ஒரு கல்பகாலத்தில் பிரம விஷ்ணுக்கள் தாமே முதல்வன் என முரணிச் சண்டையிட்ட சமயத்தில் வாசனை பொருந்திய கொன்றைப் பூச்சூடிய சடையானகிய கண்ணுதற் பரம்பொருள் கீழும் மேலும் நெருப்பு வடிவான அண்ணமலை யாய் நிற்க, அதன் அடியைக் காண விஷ்ணுமூர்த்தி பன்றி வடிவாய்க் கீழ்நோக்கிச் சென்றும், அன்னவடிவாய்ப் பிரம தேவன் மேல் நோக்கிச் சென்றும், அடிமுடி காணர் ஆயினர்.

'ப்ரஹ்மாவை ஹம்ஸோ பூத்வா, சிரோந்வேஷ்டவ்ய: ஸஹஸ்ரம் ஸமா ஆஸந் ப்ரஹ்மா ஆஹம் சிரோஜாநே த்வ மேவ மாதாஸி, த்வமேவபிதாஸி, த்வமேவ ப்ராதாஸி த்வமேவ த்ருஷ்டாஸி ச்ரோதாஸி, கர்த்தாஸி, காரயிதாஸி, ஜ்யேஷ் டோஸி, ச்ரேஷ்டோஸி, ய ஏவம்வேதா, சிவஸாயுஜ்யமாப் நோதி சிவஸாயுஜ்யமாப்நோதி', 'விஷ்ணுர்வை வராஹம்ரூப மாஸ்தா்ய, பூமிந்விதாரயந் ஸஹஸ்ரம்ஸமா ஆஸந், பாதாந்

வேஷ்ணே பரேபூத்வா த்வமேவ மாதாஸி, த்வமேவ பிதாஸி, த்வமேவ ப்ராதாஸி, த்வமேவ ஜ்யேஷ்டோஸி, த்வமேவ ச்ரேஷ்டோஸி, யஏவம் மஹிமாநம் வேதா த்ருஷ்டாபவதி, விஜ்ஞாதாபவதி, கர்த்தாபவதி, காரயிதாபவதி, யஏவம் வேதா சிவஸாயுஜ்யமாப்நோதி சிவஸாயுஜ்யமாப்நோதி' என்ற ருக் வேதமும், 'யத்பாதாம்போருஹ த்வந்த்வம் ம்ருக்யதே விஷ்ணு நாஸஹ' என்ற சரபோபநிஷத்தும், 'ப்ரஹ்ம விஷ்ணு ரஜஸா பத்தவைரௌமத்யே தயோந் த்ருச்யதி ஜாதவேதா: ஸ்தாணு ருத்ர ஸ் தி ஷ் ட த் புவநஸ்யகோப்தா । த்ருஷ்ட்வாஸ்தாணு முபரம்ய யுத்தம் ப்ரதஸ்ததுர்தூரமஸௌ தித்ருக்ஷு: । வராஹௌ விஷ்ணுர்ணிமமஜ்ஜபூமௌ ப்ரஹ்மோத்பபாத பூமேர் திவமாசுக்ருத்ர:' என்ற பாஸ்கர ஸம்ஹிதையும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

சிவபிரானுடைய அடிகளையும் முடியையும் அரியும் பிரமனும் தேடி அலுத்தனரென்பது இச்செய்யுளால் பெறப் படுகிறது. (123)

வேங்கட ராம னென்போன் வேங்கட மலையாய் நின்றான்
வேங்கட சுப்ப னென்போன் வேங்கட மலைமே னின்றான்
வேங்கட மலையாய் நின்று வேலனைச் சிரமேற் றாங்க
வேங்கட ராமன் செய்த விழுத்தவம் செப்பற் பாற்றோ.

(பொ-ரை) வேங்கடராமன் என்ற பெயர்க்குரிய விஷ்ணு மூர்த்தி வேங்கடமலை வடிவில் நின்றார். வேங்கடசுப்பிரமணி யன் என்பார் அவ்வேங்கட மலைமேல் நின்றவர். வேங்கட மலை வடிவில் நின்று சுப்பிரமணியக் கடவுளைத் தாங்கும் மேன் மையான தவத்தைச் செய்த மஹாவிஷ்ணு மூர்த்தியின் சிறப் பைச் சொல்லவும் முடியுமோ?

'சிலாதர முனிவருடைய திருக்குமாரராகிய நந்திபகவான் தன்னைச் சிவபெருமான் வாகனமாக்கிக் கொண்டது போல ஆசனமாகவும் கொண்டெழுந்தருளியிருத்தற்குச் சிந்தித்துத் தவங்கிடந்து ஸ்ரீசைலம் என்னும் மல்லிகார்ஜுன பருவதமாகத்

திருவுருக்கொண்டு ஸ்ரீசிவபெருமானைத் தம் முடிமீது தாங்கும் பேறெய்தினர். அவரைத் திரிபுரதகன காலத்தில் உபாசித்து அவருருப் பெற்றுச் சிவபெருமானைத் தாங்கினோமாகையால் அவருக்கும் நமக்கும் ஸம்பந்தமுடைமை காரணமாக அவர் பருப்பதமாய் நின்று சிவபெருமானைத் தாங்குவது போல நாமும் அவரைப் பருப்பத வடிவமாய் நின்று தாங்கவேண்டு மென்று விஷ்ணுவானவர் சிந்தித்துத் தவஞ்செய்கையில், சிவ குருவாகிய குமாரக்கடவுள் தோன்றி அவருக்கு வேங்கட மென்னும் மலையுருவந்தந்து அம்மலையினுச்சியிற்றுமெழுந் தருளித் தம்மைத் தாங்கும்படியான பெரும் பாக்கியத்தை அவருக்குப் பிரஸாதித்தனர் என்று திருவேங்கடமான்மியத் திற் சொல்லப்பட்டிருக்கின்றது' என்ற சிவாதிக்ய ரத்நாவளி இரண்டாம் பாகமும், தணிகைப் புராணத்து வீராட்டகாசப்பட லமும் இச்செய்யுட்குப் பிரமாணம்.

திருப்பதி முருகன் கோயிலென்பது இச்செய்யுளால் தெரிக் கப்பட்டது. (124)

சித்தசன் றன்னைச் செற்றோன் சிதம்பரந் தன்னிற் செய்த
வித்தக நிருத்தங் கண்டு மெய்ம்மறந் தவச மாகிப்
பத்துறழ் பன்னி ரண்டு பகலவ னடியில் வீழ்ந்த
சித்திர கூட மாயன் செப்பருங் கிடக்கை பாராய்

(பொ-ரை) மன்மதனைக் காய்ந்து கொன்ற சிவபிரான் சிதம்பரத் தலத்தில் ஸ்ரீநடராஜமூர்த்தியாய் எழுந்தருளி ஆனந்தத் தாண்டவம் செய்ய அதனைத் தரிசித்துப் பரவச மடைந்த விஷ்ணு, சித்திரகூடமாயன்—தில்லைக்கோவிந்தன்— எனப்பெயர்தாங்கி நூற்றிருபது நாட்கள் (நான்குமாதங்கள்) எழ மாட்டாதவராய் அவசமாய்க் கிடந்த சொல்லுதற்கரிய தோற்றத்தைக் காண்பீராக.

'சொல்லரிய பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சித்
தொல்லைதனி லறிவிழந்து துணைவிழிகள் புனல்பெருகப்
பல்லுயிர்க்கு முயிராகும் பரமசிவ பூரணத்தி
னெல்லைதனிற் புக்கழுந்தி யெழுந்தில னீரிருதிங்கள்'

என்ற கந்தபுராணம் இச்செய்யுட்குப் பிரமாணம்.

சிதம்பரம் நடராஜருடைய நடன வைபத்தைக் கண்டு அவசமாகித் தலைகால் தெரியாமல் வீழ்ந்து கிடக்கின்றார் தில்லைக்கோவிந்தர் என்று இச்செய்யுளால் கூறப்பட்டது.

(125)

தில்லைக்கோ விந்தன் முன்னர்த் தில்லையில் முன்றில் வீழ்ந்தான்
தில்லைக்கோ விந்தன் பின்னர்த் தெருநடுக் கிடந்தா னிப்பாற்
தில்லைக்கோ விந்தன் சென்றான் திருப்பதி யென்னே மாயந்
தில்லைக்கோ விந்த னின்றெந் திருநடன் றளியுட் சேர்வே.

(பொ-ரை) தில்லைக்கோவிந்தன் முற்காலத்தில் ஸ்ரீநடராஜ பிரபுவினது நடன தரிசனத்தை விரும்பித் தில்லை அம்பலத்து முற்றத்தில் கிடந்தான். பின் ஒரு காலத்தில் அக்கோவிந்தன் நடுத்தெருவில் கிடந்தான். அதன் பின் ஒரு காலத்தில் அக் கோவிந்தன்தானே திருப்பதியில் சேர்க்கப்பட்டான். இன்றே ஸ்ரீநடராஜர் திருக்கோயிலுள் அக்கோவிந்தன் வந்திருத்தல் மாயம்தானோ? அன்றிச் சைவர் ஏமாற்றம் தான் காரணமோ?

'வரங்கிடந்தான் தில்லையம்பல முன்றில்அம்மாயவனே' என்ற திருக்கோவையாரும், 'ஸ்ரீசிதம்பரத்திலுள்ள வைதிக சைவர்களால் நடுத்தெருவிற் கிடத்தப்பட்ட நாராயண விக்கிரகத்தை,' 'நடுத்தெரு நாராயணன் எனும் சொல்லும் அது காரணமாக வுண்டாயிற்று' என்ற சைவசமய சரபமும், 'அந்த விழவெல்லாம் தீரும்படி திருப்பதிக்கெழுந்தருளி ஸ்ரீகோவிந்த ராஜனை மூலபேரஸஹிதமாக திருப்பிரதிஷ்டையும் பண்ணி வைத்து' என்ற தென்கலைக் குருபரம்பரையும்,

'சென்றனன் றில்லைச் சித்திரகூடஞ் செறிந்தனன் செறிவதன் முன்னே, யன்றதிற் றிருக்கண் வளர்ந்தருண்மாயனனந்தனே முதல்வரோடு, மொன்றுமாங்கின்றி மறைந்தனன் மறைந்தாங் கோங்கு வேங்கடமென மறைகளென்று, நின்றேத்துந் திருப் பதி தனிலே யெழுந்தனன் யாவருமிறைஞ்ச' என்ற எம்பெரு மானார் வைபவமும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

இப்போதிருக்குந் தில்லைக்கோவிந்தரின் கோயில் அவருடையதன்று என்பது இச்செய்யுளால் விளங்கும். (126)

சங்கின ஞதி வானோர் தாம்விடு படைக டம்மை
யங்கொரு துரும்பா லாற்ற லழிவுசெ யியக்கன் றன்னைச்
சங்கர னென்று தேர்ந்து தாழ்ந்தன ரென்னி னன்னோன்
மங்கலி லாண்மை தன்னை வரைசெய வல்லார் யாரே.

(பொ-ரை) முன்னொரு காலத்தில் ஸ்ரீசிவபிரான் யக்ஷ வடிவங்கொண்டுவந்து, தேவர்கள் முன்னே துரும்பொன்றைப் போட்டு அதனை அசைக்குமாறு ஏவ, மஹாவிஷ்ணு முதலிய தேவர்கள் சுதர்சன சக்கரமாதி தத்தம் ஆயுதங்களால் சேதிக்க முற்பட்டு அத்துரும்பை அசைக்க இயலாதவர் ஆயினர். அப்படி ஒரு துரும்பால் தேவர்களாற்றலை அழிவுசெய் யக்ஷனை சங்கரன் என உமாதேவியாரால் அறிவுறுத்தப்பட்டுத் தெளிந்து தேவர்கள் தத்தம் செருக்கு நீங்கினார்கள். தாழ்வு சிறிதும் பெறாத அச்சங்கரனது வல்லாண்மை அளவிட யாரே வல்லார்கள்.

'கிமிதம் யக்ஷமிதி' என்று தொடங்கி 'பஹுசோபமானாமுமாம் ஹைமவதீம் தம்ஹோவாச கிமே தத் யக்ஷ மிதி ஸா ப்ரஹ்மேதி ஹோவாச' என்றது வரையிலுள்ள கேனோபநிஷத் இச்செய்யுட்குப் பிரமாணம். இவ்வுபநிஷத்தில் மென்மை கூறப்பட்டவர் கூட்டத்தில் விஷ்ணுப் பிரஸ்தாபமில்லை யென்பர் ஒரு சாரார். யக்ஷவடிவமாய் வந்தவர் சிவபிரான். அது உமாதேவியாராலேயே தெளிவிக்கப் பட்டது. படவே அக்கூட்டத்துள் விஷ்ணு அடங்கவில்லையென்பது யாங்ஙனம்? அது உய்த்துணரவைக்கப்பட்டது. ஆகலினன்றே

மற்றைத் திசைக்கண் உறைவோரும் வன்மை முழுதுஞ் செலுத்தி வலியில்
ஒற்றைத் துரும்பை அசைவிக்கும் ஆற்றல் இலராய் உடைந்து விடலும்

செற்றத் தெழுந்த அயனூர் தமது படையைச் செலுத்த அரியும்
அற்றப் படாத படைவீசி ஆர்ப்ப அவைகூர் மழுங்கி யனவே.'

என்றது ''காஞ்சிப் புராணத்து'' அமரேசப் படலம் செய்யுள் 12.

இவ்விடத்து ஷை புராணத்து ஷை படலத்தில் வரும் கீழ்க் கண்ட உமாதேவியார் வாக்காக வரும் செய்யுள்கள் சிந்திக் கத் தக்கன.

எவன்வாணி கேள்வன் முதலோர் பதங்கள் நிலைபேறு செய்யும்
இறைவன்
எவன்எப் பொருட்கும் ஆதாரமாகி எவருந் தொழப் படுபவன்
எவன்முற் றுமாக்கி நிலைசெய்து போக்கி அறிஞர்க் கினிக்கும்
அமுதன்
அவன்என்று காண்மின் இமையீர் இயக்க வடிவாகி வந்த
அழகன்.
எவனுக்கு முற்றும் வடிவங்க ளாகும் எவன் உண்மை யாரும்
அறியார்
எவன்எங்கும் யாவும் அறிவுற்று நிற்பன் எவனல் நடக்கும்
உலகம்
எவனைத்துதிக் கும்மறைஈறு முற்றும் எவன்அங் கவைக்கும்
அரியான்
அவனென்று காண்மின் இமையீர் இயக்க வடிவாகி வந்த
அழகன்.
எவன்நாமம் எண்ணின் எவன்தாள் பழிச்சின் எவனைக்
கருத்தின் நிறுவின்
எவன்அன்பர் சேவை புரியிற் பவங்கள் இரிவுற்று முத்தி
மருவும்
எவன்உண்மை இன்ப அறிவாகி நிற்பன் எவன்இந்து வேணி
முடியான்
அவனென்று காண்மின் இமையீர் இயக்க வடிவாகி வந்த
அழகன்.

இச்செய்யுளால் சிவனன்றி ஓரணுவும் அசையாதென்பது தெரித்து நிலைநாட்டப்பட்டது. (127)

சிவ : 1987-88 : 10

சங்கர பரனை நீக்கிச் சக்கர பரனை வைத்துப்
பொங்கிய தக்கன் வேள்வி புரிந்தன னங்கம் மாலை
வெங்கயி றதனால் யாத்தவ் வேள்வியை யழித்தான் வீரன்
சங்கர னியாக தேவன் சக்கிரி யாகந் தானே.

(பொ-ரை) சங்கரனாகிய பரம்பொருளை நீக்கி, சக்கரப் படையைத் தாங்கிய விஷ்ணுவை யாகத்தலைவனாகக் கொண்டு அதிகாரம் பொங்கிய தக்ஷன் வேள்வி செய்தான். அவ்வியாக சாலையில் யாகத்தலைவனாக இருந்த விஷ்ணுவை நாகபாசத்தில் கட்டியுருட்டி யாகத்தை அழித்தார் வீரபத்திரதேவர். எனவே யாகதேவனும் வன்மை விஷ்ணுமூர்த்திக்கில்லை. சங்கரன் ஒருவனே யாகதேவ ; யாக வடிவினன் விஷ்ணுமூர்த்தி என்பதன்றோ வேதம் கூறும் உண்மை.

'யோ தக்ஷயஜ்ஞே ஸுரஸங்காந் விஜித்ய விஷ்ணும் பபந்தோரகு பாசேந வீர: தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' என்ற சரபோபநிஷத்தும், 'மேதபதிம் ருத்ரம்', 'ஆவோராஜாநமத்வரஸ்யருத்ரம்...அயஸேக்ருணுத்வம்', 'த்ரிஸ்ஸப்தயத் குஹ்யா நித்வே...நிஹிதா' 'ருத்ரம் யஜ்ஞா நாம ஸாததிஷ்டமபஸாம்' என்ற ருக்வேதமும், 'ருத்ரோ யாகதேவ:' என்ற பாசுபத ப்ரஹ்மோபநிஷத்தும், 'யஜ்ஞோவை விஷ்ணு:' என்ற சுருதியும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

விஷ்ணு யாகம், சிவபிரான் யாகதேவன் என்பது இச்செய்யுளால் விளக்கப்பட்டது. (128)

முன்னவ னழிக்கும் போது முகுந்தனைப் பிறரை நெற்றி
துன்னெரி விழியா னீற்றித் தூவிட மயான மாகு
மன்னாதி லவனே யேக னாகிவீற் றிருப்பா னப்போ
தின்னொரு தேவ னங்கே யிருப்பதற் குளனோ செப்பாய்.

(பொ-ரை) மஹாசங்கார காலத்தில் சிவபிரான் சர்வலோகத்தையும் அழிக்கும் பொழுது மஹாவிஷ்ணு முதலிய தேவர் யாவரையும் தமது நெற்றித் தனிவிழியால் சுட்டு எரித்துச் சாம்பராக்கிச் சிதறுகிற தனியிடமே மயானம் என்று

சொல்லப்படும். அத்தனியிடத்தில் சிவபிரானே ஏகனாக வீற்றிருப்பான். அம்மயானத்தில் இன்னொரு தேவனாக இருப்பதற்கு யார்தான் உளர்? அதனைக்கூறு.

'பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி யிறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமுங்கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே'

என்ற அப்பர் சுவாமிகள் அருளிய தனித்திருவிருத்தம் (நான்காம் திருமுறை) இச்செய்யுட்குப் பிரமாணம்.

சிவபிரான் எழுந்தருளியிருக்கும் சுடுகாடு இதுவென்பது இச்செய்யுளால் தெரித்துணர்த்தப்பட்டது. (129)

வனிதைய ரின்பம் வேட்டு மாயவன் பிரம னாதி
யனைவரு மவர்தம் மாணைக் கடங்கிடச் செய்யும் வேளைத்
தனதொரு நுதற்கட் டீயாற் றகித்தவன் மலர்த்தா டன்னை
யனுதின நினைவார் தாமே யாழ்குறார் காமநோயில்.

(பொ-ரை) மகளிர் இன்பத்தை விரும்பிய விஷ்ணு, பிரமன் முதலிய பெருந்தேவர்களையும் தனது ஆணைக்கு அடங்கிடச் செய்யும் மன்மதனைத் தனது நெற்றிக் கண்ணால் எரித்து அவனதாற்றல் அழித்து தனது ஒப்பற்ற தனித்தலைமையை நிறுத்திக் காட்டியவன் சிவபிரான். அச்சிவபிரானது தாமரையன்ன பாதமலர்களை நாள்தோறும் நினைந்து வழிபாடு செய்பவரன்றோ காமநோயில் ஆழமாட்டார்.

"யோ...பஸ்மீசகாரம் மந்மதம்...தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' என்ற சரபோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

ஸ்ரீசிவபிரான் மன்மதனை எரித்த தனித்தீரர் என்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (130)

கமலனும் புகைய மாலுங் கருகிடக் கடலில் வந்த
சமனிகர் விடத்தை யீசன் தன்மிடற் றடக்கி னாலே

விமலமென் பூமேன் மாதர் மிடற்றினிற் காத்தா னென்னி
னெமதிடர் களைய வல்லா னேவனவ் வீச னன்றி.

(பொ-ரை) பிரம்மதேவன் புகைநிறம் அடையவும், மஹா விஷ்ணு கருநிறம் அடையவும் செய்து பாற்கடலில் வெளிப் பட்ட ஆலால விஷத்தை வாயிலோ அன்றி வயிற்றிலோ வைத் திராது சிவபிரான் தன்து திருக்கண்டத்தில் அடக்கியமை யாலல்லவா வெண்டாமரை, செந்தாமரைகளில் வீற்றிருக்கும் சரஸ்வதி லக்ஷ்மி ஆகிய தேவியர் கழுத்தில் தாலி தங்கியது. அப்படியாயின் எம்மனோர் துன்பத்தை ஈசனன்றி வேறு எவர் களைய வல்லவர்? எவருமிலர் என்க.

'பபேதோ ஹாலாஹலம் தஹந்தம் தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' என்ற சரபோபநிஷத்து இச்செய்யுட்குப் பிர மாணம்.

ஸ்ரீ சிவபிரான் நீலகண்டனாகி அமரமாதர் கண்டத்து மங்கலநாண் காத்தானென்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (131)

பசுபதி நாமே யென்று பண்ணவர் செருக்குக் கொண்டார்
பசுபதி யதனைத் தந்தாற் பாற்றுவ னெயில்க ளென்றான்
பசுபதி சுயநீ யென்றப் பரமனைப் பணிந்தா ரன்னோர்
பசுபதி விரைந்து சென்று பாற்றினா னெயில்கண் மூன்றும்.

(பொ-ரை) 'யாங்களே உயிர்க்கூட்டத்திற்குத் தலைவர்' என்று இறுமாந்திருந்த தேவர்கள் முப்புரத்தவர்களை வெல்ல மாட்டாராய்ச் சிவபிரானைச் சரணடைந்தனர். 'பசுபதி (உயிர் கட்குத் தலைவன்) என்ற பெயருண்மையை எனக்கு உண்டென நீவிர் சொன்னால் முப்புரங்களை அழிப்பேன்' என்று சிவபிரான் கூற 'இயல்பாகவே பசுபதி நீ ஒருவனே' என்று கூறித் தேவர் கள் சிவபிரானைப் பணிந்தனர். பசுபதியாகிய அச்சிவபிரான் மிகவிரைந்து சென்று முப்புரத்தையும் நீருக்கி உயிர்க் கூட்டத்தைக் காத்தான்.

'யோ லீலயைவத்ரிபுரம் ததாஹ விஷ்ணும் ஸல்யம் ஸோமாக்நிம்சபாணம் ... தஸ்மை ருத்ராய நமோ அஸ்து', 'ஸ்வயம் தஸ்மாத் பசுபதிர் பபூவ' என்ற சரபோபநிஷத்தும், 'ஸோப்ரவீத் வரம்வ்ருணு அஹமேவ பசூநாமதிபதிரஸாநி' என்ற எஜுர்வேதமும் இச்செய்யுட்குப் பிரமாணங்கள்.

ஸ்ரீசிவபிரான் திரிபுரதகனஞ் செய்து பசுபதி நாமம் தமக்கேயுரியது எனநாட்டினர் என்பது இச்செய்யுளால் தெரிவிக்கப்பட்டது. (132)

திரிபுர மெரித்த ஞான்று சீதர னம்பாய் வாசம்
விரிமல ருறைவோன் பாகாய் வேறுளார் வெவ்வே ருகி
யெரிநிற மேனி யீச னேவலிற் கிடந்த செய்தி
தெரிதவ முடையோர் தேர்வர் சிவபிரான் றனது மேன்மை.

(பொ-ரை) திரிபுரம் எரித்த காலத்தில், சிவபிரான் பூமித் தேர் ஏறியபோது அத்தேரோட்டும் சாரதியாய்ப் பிரம்மதேவனும், விஷ்ணுமூர்த்தி அம்பாகவும், மற்றைய தேவர்கள் யாவரும் அத்தீமேனி வண்ணன் ஏவலுக்கு வேறுவேறு அங்கமாய்க் கிடக்க நிகழ்ந்ததை தவமுடைப் பெரியோரே அறிந்து சிவபிரான் மேன்மையை உணர்வார்.

மஹாபாரதம், கர்ணபருவத்து 26–ஆவது அத்தியாயத்தில் உள்ள விபரம் இச்செய்யுட்குப் பிரமாணம். திரிபுரதகன காலத்தில் விஷ்ணு சிவபிரான் கையில் அம்பானர் என்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (133)

அம்புரு வடைந்து மென்னே யடியனேன் றருக்கி நின்றேன்
வெம்பவ மகல வேண்டும் விமலனே யருளென் றன்று
சம்புவை யிரதத் தோடுந் தனிவிடை யாகி மாலோன்
கும்பிடு திறத்தா லேற்ருன் குரவையிட் டார்த்தார் தேவர்.

(பொ-ரை) திரிபுர சம்ஹார காலத்தில் தேர் அச்சு முரிந்த பொழுது, 'அம்புருவம் அடைந்தும் அடியனேன் தருக்கி நின்றேன், எனது அக்கொடிய பாவம் நீங்க, எம் பிரானே திருவருள் செய்வாய்' என்று யாசித்து வணங்கியு

மஹாவிஷ்ணுமூர்த்தி ரிஷப வடிவந்தாங்கித் தேரோடும் எம் பிராளுகிய சிவபிரானைத் தாங்கித் தொண்டு செய்ய அப் பிரான் அருள்புரிந்தான். அவ்வரிய நிகழ்ச்சியை நேரில் கண்ட தேவர்கள் கூத்தாடி மகிழ்ச்சியால் ஆர்ப்பரித்தார்.

'மாயனு முப்புரங் கொன்ற வஞ்ஞான், றேருயெமைத் தேரொடு தாங்கினன்' என்ற காஞ்சிப் புராணம் இச்செய்யுட் குப் பிரமாணம்.

விஷ்ணு ரிஷபமாகிச் சிவபிரானைச் சுமந்தார் என்பது இச் செய்யுளால் கூறப்பட்டது. (134)

மானுட மடங்க றன்னை வலிதபக் கொன்று தோலை
மேனியி லணிந்தான் வீரர் வீரனுஞ் சரப மூர்த்தி
யானெனு மகங்கா ரத்தை யெனதெனு மமகா ரத்தை
மானவ னறுக்க வேண்டின் வழுத்துக வவன்மென் ருளே.

(பொ-ரை) ஹிரண்ய கசிபுவைக் கொன்று தருக்கி உலகைத் துன்புறுத்திய நரசிம்மத்தை அதன் வலிமை கெடக் கொன்று சிவபிரான் வீரர்வீரனுஞ் சரபமூர்த்தியாகி அதன் தோலைத் திருமேனியில் போர்த்துக் கொண்டான். எனவே யான் எனது என்னும் அகங்காரமமகாரத்தை எம்மனிதன் அறுக்க விரும்புகிருனே அம்மனிதன் சரபமூர்த்தியின் மென் மையான திருவடித் தாமரைகளை வணங்குவாளுக.

'யோகோரம் வேஷமாஸ்தாய சரபாக்யம் மஹேச்வர: I ந்ருஸிம்ஹம் லோக ஹந்தாரம் ஸம் ஜகாந மஹாபல:I ஹரிம் ஹரந்தம் பாதாப்யா மநுயாந்தி ஸுரேச்வரா: I மாவதீ: புருஷம் விஷ்ணும் விக்ரமஸ்வ மஹாநிசி II க்ருபயா பகவாந் விஷ்ணும் விததாரநகை கரை: சர்மாம்பரோ மஹாவீரோ வீர பத்ரோ பபூவஹ I ஸஏகோ ருத்ரோ த்யேய:' என்ற சரபோப நிஷத் இச்செய்யுட்குப் பிரமாணம்.

விஷ்ணுவின் நரசிம்மாவதாரத்தைச் சிவபிரான் கொன்ரு ரென்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (135)

சங்கரன் மலர்த்தா டன்னிற் ருமரை யெனத்தன் கண்ணைப்
பங்கமின் மால்சூன் றிட்டுப் பரசிவ வென்னையா ளென்ருன்
சங்கரன் கமலக் கண்ணு சக்கர மிந்தா வென்ருன்
பங்கமின் மாலஃ தேற்ருன் பணிந்திது சுருதி வாய்மை.

(பொ-ரை) சங்கரனது திருவடித்தாமரை மலர்களைத் திருமால் நாள்தோறும் ஆயிரம் தாமரைப் பூவால் அர்ச்சித்தார். ஒருநாள் அர்ச்சனைக் காலத்தில் ஒரு தாமரை காணுமற்போக அதற்குப் பதிலாகக் குற்றமற்ற சிவபூஜகராகிய திருமால் தமது ஒரு கண்ணைப் பெயர்த்துச் சிவபிரான் திருவடி மலரில் இட்டுப் 'பரசிவப் பிரபுவே, என்னை அடிமை கொள்' என்று வணங்கி இரந்தார். எங்கள் பிராணுகிய சங்கரன் 'தாமரைக் கண்ணனே! இதோ சுதரிசனச் சக்கரம், பெற்றுக்கொள்' என்று அருளிச் செய்தான். குற்றம் நீங்கிய திருமாலும் பணிந்து வணங்கி அதனை ஏற்ருர். இவ்வுண்மை சுருதியில் கூறப்பட்டதாகும்.

'யோ வாம பாதார்ச்சித விஷ்ணு நேத்ரஸ் தஸ்மை தௌ சக்ர மதீவ ஹ்ருஷ்ட: தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' என்ற சரபோபநிஷத்து இச்செய்யுட்குப் பிரமாணம்.

விஷ்ணு தம்கண்ணைப் பிடுங்கிப் பூவாக வைத்துச் சிவார்ச்சனை செய்து சக்கரம் பெற்ருரென்பது இச்செய்யுளால் பெறப்பட்டது. (136)

மதனுட றன்னை நீற்றி மலரவன் சிரத்தைக் கொய்த
சதுரனை யடியில் வீழ்ந்து தமியனேன் மனைவி சாம்ப
வதிமன மகிழப் பிள்ளை வரமெனக் கெந்தாய் தாவென்
றிதமுற வேத்தக் கண்ண னிறைவனு மவற்கஃ தீந்தான்.

(பொ-ரை) மன்மதனை எரித்து மலரவனும் பிரமனது ஒருதலையைக் கொய்த நாலாம் மூர்த்தியாகிய சிவபிரானது திருவடியில் விழுந்து வணங்கித் 'தமியேனது மனைவி சாம்பவதி மனம் மகிழப் பிள்ளைவரம், எந்தையே! எனக்கு அருளிச்

செய்யும்' என்று ஸ்ரீகிருஷ்ணன் பூசித்து ஏத்தி வேண்டச் சிவ பிரானும் அதற்கிரங்கிப் புகழ்ச்சியின் அமைந்த மகப்பேறு உதவினான்.

மஹாபாரதம் அநுசாசனபருவம் 45, 46ஆவது அத்தியா யங்கள் இச்செய்யுட்குப் பிரமாணம்.

சிவபிரான் கிருஷ்ணனுக்குப் பிள்ளைவரங் கொடுத்தா ரென்பது இச்செய்யுளால் தெரிக்கப்பட்டது. (137)

மன்னவ னென்று செய்வர் மதிப்பவ னடியர் தம்மைத்
தன்னமு மெண்ணார் யாருந் தாசனென் றவன்றன் வேந்தைத்
தென்னுறு கண்ணன் மேலே சிவபூசை பார்த்தன் செய்து
தன்னிய ஞானு னென்னிற் சாற்றுவாய் பரமா ரென்றே.

(பொ-ரை) ஒருவேந்தன் தனதடிமையை மன்னவற்குச் சமமான மரியாதை செய்து மதிக்கலாம். அது பற்றி மன்னன் அடிமையாகான், அடிமை மன்னவன் ஆகான். இறைவனது அடிமையாகிய கண்ணபிரானையே சிவவிக்கிரகமாகப் பாவித்து அர்ச்சுனன் சிவபூஜை செய்து சிவபிரானை வழிபட்டான். அது பற்றிச் சிவபிரானும் கண்ணனும் சமமாவாரா? அவ்விடத்தில் நின்று பார்த்தன் பூஜையை ஏற்றருளிய பரமசிவனே பரம் பொருள் என்று தெள்ளறிஞர் நன்கறிவர்.

மஹாபாரதம் துரோணபருவம் 79, 80, 81 ஆவது அத்தி யாயங்கள் இச்செய்யுட்குப் பிரமாணம்.

அர்ச்சுனன் கிருஷ்ணனை விக்கிரகமாகப் பாவித்துக் கொண்டு அதிற் சிவபூசை செய்தானென்பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (138)

வாணனார் தம்மோ டேற்று மாயனார் முன்னந் தோற்றார்
வாணனார் கரங்க டம்மை மாயனார் பின்னர்க் கொய்தார்
வாணனார் மனத்த ரான மகேசனார் தந்தே யன்றோ
வாணனார் பரங்கள் போக்கும் வலியினை மாயர் பெற்றார்.

(பொ-ரை) சிவபக்தனுகிய வாணுசுரனை எதிர்த்துக் கிருஷ் ணன் பலமுறை முதலில் தோல்வியடைந்தான். பின்னர் உப மன்யு மகரிஷியிடம் சிவதீக்ஷை பெற்றுச் சிவனைப் பூஜித்து அவ்வரபலத்தால் வாணுசுரனைக் கிருஷ்ணன் எதிர்த்தான். அந்த யுத்தத்தில் வாணுசுரனது ஆயிரம் கரங்களில் இரண்டு நீங்கலாக ஏனையவற்றை வெட்டினுன். வாணுசுரன் மனத் துறைந்த மகேசுரன் திருவருளாலல்லவா அவ்வாணுசுரனுக் குப் பாரமாயிருந்த கைகளை வெட்டும் வல்லமை பெற்ருர் ஸ்ரீ கிருஷ்ணர்.

பகவான், "நாராயணரே!...என் அனுக்கிரகத்தினுலே ஒருவனுவது உம்மை...ஹிம்சிக்கமாட்டான். மேலும், யுத் தத்தை நீர் அடைவீராயின் என்னைக் காட்டிலும், மேற்பட்ட வராவீர்' என்று கூறினுர்" என்ற மஹாபாரதம் துரோண பருவம் 202 ஆவது அத்தியாயம் இச்செய்யுட்குப் பிரமாணம்.

கிருஷ்ணன் சிவோபாசனையால் வாணனை வென்ருரென் பது இச்செய்யுளால் கூறப்பட்டது. (139)

நீற்றன துடம்பை மாலோ னீற்றின னென்ருய் வெள்ளை
யேற்றவ னந்த நீற்றற் கீந்துள வரத்துக் கம்மா
லாற்றவு மஞ்சி யன்ரூே வாரணங் குருவங் கொண்டான்
போற்றுக விளையாட் டென்றப் புராரியி னேட்டந் தன்னை.

(பொ-ரை) பஸ்மாசுரன் உடம்பை நீர்றிய செய்தியால் எமது திருமால் ஏற்றம் பெற்றிலரோ எனின், நன்று சொன் ஞய், தம்மால் தீண்டப் பெற்ருர் நீருக வேண்டும் எனச் சிவ பிரான்பால் பஸ்மாசுரன் பெற்ற வரத்திற்கு மிகவும் அஞ்சியேயன்ரூே புருஷோத்தமனுகிய திருமால் மோகினிப் பெண் வடிவு கொண்டு அவன்முன்னுற்று வஞ்சனையால் அல்லவா பஸ்மாசுரனை நீற்றிக் கொன்ருன்? சார்ங்கவில்லும் சக்கராயுதமும் இருக்கப் புருஷோத்தமனுகிய மஹாவிஷ்ணு மோகினியுருக் கொண்டு செய்த செயல் சால அழகியது. புராரியாகிய சிவபிரான் பஸ்மாசுரன் செயலுக்கு நகைத்து

அவ்விடம் விட்டு நீங்கியது திருவிளையாடல் என்று போற்றி உய்வாயாக.

இச்செய்யுள் பிறர்கொள்கையை உடம்பட்டு மறுத்தது. சிவபிரான் கொடுத்த வரத்துக்கஞ்சியே பஸ்மாசுரவதத்தில் விஷ்ணு பெண் வடிவங்கொண்டாரென்பது நிலையிடப்பட்டது. (140)

[பதிப்பாசிரியர் குறிப்பு:—1982, 1983-84, 1985 ஆகிய மூன்று ஆண்டு மலர்களிலும் மொத்தம் 105 பாடல்கள் உரையுடன் பிரசுரிக்கப்பட்டன. இந்த மலரில் மேற்கொண்டு 35 பாடல்கள் பிரசுரிக்கப்பட்டுள்ளன. எஞ்சியுள்ள 60 பாடல்களும் தொடர்ந்து இரு ஆண்டு மலர்களில் பிரசுரிக்கப்படும். இப்பகுதிக்குரிய பாடல்களை உரை விளக்கத்துடன் அனுப்பிப் பேருதவி செய்யும் சங்கரன்கோவில் வித்துவான் திரு. ச. இரத்நவேலன் அவர்கட்கு நமது நன்றிகளை மீண்டும் மீண்டும் தெரிவித்துக் கொள்கிறோம்:—ஆங்கீரஸ சர்மா.] சிவம்.

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழும் சைவநெறியும்

(சைவசமய சண்டமாருதம், நக்கீரன் வழியடிமை,
புலவர், திரு. பி மா.சோமசுந்தரனார், இராணிப்பேட்டை)

சிவஞான பூசாமலரில் (1983-84) வெளிவந்த செந்தமிழும் சைவநெறியும் என்ற கட்டுரையின் இரண்டாவது தொடர் இக்கட்டுரை என்று அறிக.

1. நிறைமொழி மாந்தர்

> நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப.

என்பது தொல்காப்பியம். நிறைமொழி மாந்தர் ஆணையில் தோன்றுவது மந்திரம். மந்திரம் என்பதன் பொருள்யாது? மந்திரம் என்பது எல்லாம் அறியும் தன்மை உடையதும் உயிர்களைப் பிறவிக் கடலினின்றும் எடுக்கும் தன்மையுடையதும் ஆகும் என்று அறிக. இவ்வுண்மையை "மநநம் ஸர்வ வேதித்வம், த்ராணம் ஸம்ஸார ஸாகராத் I மநநத்ராணதர்மித் வாத் மந்த்ரமித்யபிதீயதே II" என்று காமிக ஆகம மந்த்ராவதாரப் படலம் கூறும். நிறைமொழி மாந்தராம் தன்மை இறையருளால் கூடுவது ஒன்று ஆகும். பல்கலைக் கழகப் பட்டங்களோ அரசு விருதுகளோ அதைக் கூட்டுவிக்கமாட்டா. நிறைமொழி மாந்தர் திருவருள் வழி இயங்குவர். இத் தன்மையை

> "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே
> அடக்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே
> ஒட்டுவித்தால் ஆரொருவர் ஒடாதாரே
> உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே

பாட்டுவித்தால் ஆரொருவர் பாடாதாரே
பணிவித்தால் யாரொருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே.''

எனவரும் திருநாவுக்கரசு பெருமானின் திருமொழி உணர்த்தி நிற்கும். அடியவர் செயல் யாவும் அரன் செயல் என்றே நாம் உணர்தல் வேண்டும். அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்ற உண்மையை இப்பாடல் காட்டுவதாகச் சிலர் எண்ணு வர். அப்பொருள் சிறப்புடையதன்று.

கண்ணுக்கு ஒளியூட்டிப் பொருள்களைக் காட்டுவது கதிர வன் ஒளியாகும். அதன் துணைபற்றி உயிர்கள் காணும் திறனைப் பெறுகின்றன. ஆயினும் ஓங்கி உயர்ந்து நிற்கும் திருக்கோயிலைக் கண்டு ஒருவன் இறைவனைப் போற்று கின்ருன். மற்ருெருவன் குளியலறையில் நீராடும் ஒரு பெண் ணின் உறுப்புக்களை மறைவில் நின்று கண்டு மதிமயங்குகின் ருன். இது கண்ணுக்கு ஒளிதந்து பொருளைக் காட்டும் கதிர வனின் குற்றம் அன்று. பார்ப்பவனின் குற்றம் ஆகும். இத னையே சிவசுதந்திர போதம் என்பர்.

(சுதந்திரம் என்பதைச் சுதந்தரம் என்று வழுப்படவரை யும் தமிழறிஞன்மாரும் உளர். இதன் வடமொழி வடிவம் ஸ்வதந்த்ரம் என்பது ஆகும். இந்த்ரன், மந்த்ரம், தந்த்ரம் என்னும் வடசொற்கள் இந்திரன், மந்திரம், தந்திரம் என்று வரையப்படுகின்றன. இவ்வாறே இச் சொல்லும் சுதந்திரம் என்றே வரையப்படல் வேண்டும். சொந்தம் என்பதும் கூறல் ஆம்).

எனவே சிவசுதந்திர போதத்தால் நிகழும் செயல்களைக் குறித்து எழுந்ததன்று இப்பாடல் என்று உணர்க. 'பாட்டுவித் தால் ஆரொருவர் பாடாதாரே' என்ற அப்பர் அடிகளாரே ''சலம்பூ வொடுதூபம் மறந்தறியேன், தமிழோடிசைபாடல் மறந்தறியேன்'' என்றும் அருளிச் செய்துள்ளார். இங்ஙனம்

அவர் தமிழோடு இசைபாடியும் சமணப் படுகுழியில் தான் வீழ்ந்தார். காரணம் திருவருள் நின்று பாட்டுவிக்காமையே யாம். இப்பெருமான் 'நான்' என ஒன்று இல்லை என நிற்கும் நிறைவுடையாராயினர். இறைவன் அவரைத் தனது திரு வருளில் அடங்கச் செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டு நின்றான். அந்நிலையில் அருளப்பட்ட 'கூற்றாயினவாறு' என்ற திருப்பதிகம் அவரை அடர்த்த சூலைநோயை ஒழித்தது. இத் திறத்தை,

> நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்
> தானெனவொன் றின்றியே தானதுவாய்-நானெனவொன்
> றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
> தில்லென்று தானும் இறை.

என்று சிவஞான போத முனிவர் விளக்கியருளினர்.

இஞ்ஞான்று எத்தனையோ கவிஞர்கள் உள்ளார்கள். அவர்கள் பாட்டுக்களை யாராவது பாராயணம் செய்வரா? அப் பாடல்கட்குப் பிணி, இடர் மற்றும் அல்லல்களைக் களையும் ஆற்றல் உண்டா? கோள்களின் தீங்கு நீங்கத் திருஞான சம்பந்தப்பெருமான் அருளிய கோளறு பதிகம்தான் ஓதுகின்ற னர். உடற்பிணி நீங்கத் திருநீற்றுப் பதிகம், 'கூற்றாயின வாறு' முதலிய அருட்பாடல்களைத் தான் ஓதுகின்றனர். திரு ஞானசம்பந்தமூர்த்திகள் 'விங்குவிளை கழனிமிகு கடைசியர் கள்' எனத்தொடங்கும் பதிகத்தினைத் திருமாகறலில் அருளிச் செய்தார். சேலம் சுப்பராயலு செட்டியார் என்ற முதியோர் ஒருவர் இப்பதிகத்தை ஓதியே அவர்தம் முரிந்த கால் கூடப் பெற்றார். திருநீலகண்டர் மரபில் வந்தவர் கன்னியப்ப உடை யார்மகன் மனமோகனம் என்பவர். வாலாசாபாத்தில் வலம் புரி விநாயகர் கோயில் தெருவில் வாழ்கிறார். இவர்க்குற்ற பிணி எம்மருத்துவத்தாலும் மந்திரத்தாலும் ஒழியாததாயிற்று. நாத்திகராயிருந்த இவர் நல்லூழ்வயத்தால் திருமாகறல் திருப்பதிகம் ஓதி நோய்க்கு நோய் செய்து நீறுகண்டிகை யுடன் பொலிகின்றார். எல்லாப் பிணியும், இடரும் அகல என்று

பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அருளிய சண்முக கவசத்தை எண்ணற்றவர்கள் இஞ்ஞான்று ஓதி நலம் துய்த்து வருதலும் கண் கூடு ஆகும்.

இவரெல்லாம் நிறைமொழி மாந்தராகலின் இவர் ஆணையிற்கிளந்த மறைமொழி மந்திரம் ஆயின. ஆளுடைய பிள்ளையார் 'எனதுரை தனதுரையாக' எனவும் ஆளுடைய அரசுகள் 'பாட்டுவித்தென் பனுவல் கொண்டான்' எனவும் அருளிச் செயலை எண்ணுக.

இங்ஙனமே சேக்கிழார் பெருமான் திருவருளில் அழுந்தித் திருத்தொண்டர் புராணம் அருளிச் செய்தார். இந்நாள் மாந்தர் பணம், பதவி, பட்டம், புகழ் ஆகியவற்றையே விழைந்து நடைதருகின்றனர். எனவே சேக்கிழார் மாட்சியை அறிதற்குக் கூடாராயினர். முடியாட்சியில் முதல் மந்திரிப் பதவியைத் தூசாகக் கருதித்தில்லையம்பலவன் திருவடியன்பில் ஈடுபட்டார். 'கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார்' என்ற தம்மொழிகளுக்குத்தாமே இலக்கியமாக விளங்கினார். இவையெல்லாம் ஓராது "சேக்கிழார் கூறுவது வருணாசிரமத்தையே நிலைநாட்டுகிறது. பாவம்! அவர் காலத்திலே அவ்வளவுதான் சொல்ல அவரால் முடிந்தது போலும் என்று கூறுவாரின் பேரறிவை என்னென்று வியப்பது? சேக்கிழார் பன்னிரண்டாம் நூற்றாண்டு. இக்கூற்றுப்படி நாம் வாழும் இருபதாம் நூற்றாண்டு மிகத் தெளிவடைந்த காலம் ஆகும். இக்காலத்தில் வாழும் இக்கூற்றுடையார் ஆதித்திராவிடர் மரபில் தான் பெண்கொள்ளலும் கொடுத்தலும் செய்கிறார் போலும்! சேக்கிழார் மாட்டுக் கழிவிரக்கம் கொள்ளும் இவர் ஆதித்திராவிடர் முன்னேற்றத்துக்கே தம்வாழ்நாளைச் செலவிடுகின்றார் போலும்! வாய் புளித்ததா மாங்காய் புளித்தா என்று பேசும் மேடைப் பேச்சாளரில் இவரும் ஒருவர் போலும்! இதை வெளியிடுவதும் ஒரு சைவ சித்தாந்தக் கழகம் என்றுணரும்போது ஊழ் வலியைத்தான் நோக வேண்டியுள்ளது.

அத்துணை ஏன்? கம்பராமாயணத்தை ஒரு தட்டிலே வைத்து ஏனைய நூல்களையும் ஒரு தட்டிலே வைத்தால் கம்பராமாயணம் உள்ள தட்டுத்தான் ஏனைய நூல்கள் உள்ள தட்டை வென்று மேம்பட்டு நிற்குமாம். சைவ மடாதிபதியாயிருந்த ஒருவர் ஒரு பட்டிமன்றத்தில் உதிர்த்த கீதை மொழி இது. அப்பட்டிமன்றம் தம்பியரில் சிறந்தவன் பரதனு, இலக்குவனு,சுக்கிரீவனு,குகனு,என்பது பற்றியது. தனிமையில் உரையாடுங்கால் அம்மடாதிபதி தாம் தலைமை பூண்ட இப் பட்டிமன்றம் பற்றி என் கருத்தை உசாவினார். "உங்களுக்கு ஏன் சாமி இந்த வீண்வேலை. இராமனே தன் தம்பியாகிய இலக்குவனிடம் "எத்தாயர் வயிற்றிலும் பின் பிறந்தார்கள் எல்லாம், ஒத்தால் பரதன் பெரிதுத்தமன் ஆதல் உண்டோ?" என்று கூறிவிட்ட பிறகு வழக்கு எதற்கு" என்றேம்.

2. சிவன்

இது காறும் கூறிவந்தவை 'மற்ருென்று விரித்தல்' என்னும் குற்றத்தின் பாற்படாவோ எனிற்படா. என்னை? அவை இந்நாள் ஆய்வாளர் திறத்தை வெளிப்படுத்தலால் என்க. இவ்வாய்வாளர் 'சிவன்' என்னும் திருப்பெயர் சங்க நூல்களில் பயிலாமையைக் குறை கூறுவர். இன்னோர் சங்கநூல் இயல்பைச் சற்றேனும் உணர்ந்துளர் என்று கருதவே இயலவில்லை. சங்க நூல்களில் ஒன்று கூட முழுநூலாகக் கிட்டியதில்லை. யாவும் தனிப்பாடல் திரட்டுக்களே. அத்தனிப்பாடல்களின் எண்ணிக்கையும் இரண்டாயிரத்து நானூற்றுக்கும் குறைந்தே உள்ளது. அவற்றுள் நெடுந்தொகை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, கலித்தொகை, நற்றிணை ஆகியவை இன்பத்துப்பால் பற்றியவை. இவை 1850 பாடல்கள் கொண்டவை. புறநானூறு போர் கொடை முதலியவை பற்றியது. பதிற்றுப் பத்தும் அன்னதே. எஞ்சி நிற்பவை பத்துப்பாட்டும் பரி பாடலும் ஆகும். பத்துப்பாட்டுள் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலில் முருகனைப் பற்றிய எட்டுப் பாடல்களும் திருமாலைப் பற்றிய ஏழு பாடல்களுமே இறை நெறி சார்ந்தவை;

முருகனைப் பற்றிய 23 பாடல்களும் திருமாலைப்பற்றிய ஒரு பாடலும் மறைந்துவிட்டன.

இதுகாறும் கூறியவற்றால் சிவபெருமானைப் பற்றிய பாடலோ இறைநெறிநூலோ இல்லை என்பது தெளிவாம். எனவே சங்கநூல்களில் புலவன்மார் சிவபிரானை உவமையாக வைத்தே ஆண்டுள்ளனர். எந்தச் சிறப்பைக் கருதி உவமம் கூறுவரோ அச்சிறப்பைத் தெரிவிக்கும் சிறப்புப்பெயர்களா லேயே சிவபிரானை வழுத்திப் போந்தனர். இதனால் சிவனு ரின் சிறப்புப் பெயர்களே சங்கநூல்களில் பயில்வதாயின என்று அறிஞன்மார் உணர்வர். இந்த நிலையில் எதைப் பற்றுக்கோடாகக் கொண்டு சிவன் என்னும் பெயர் சங்க காலத்தில் வழங்கிற்றில்லை என்று ஆய்வாளர் முடிவுகண்டனர் என்பதை யாம் அறிகிலோம்.

சங்கப் புலவன்மாரில் உருத்திரனார். நல்லுருத்திரனார், சோழன் நல்லுருத்திரன், கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்னும் பெயரிய புலவன்மார் வாழ்ந்துள்ளனர். எனவே உருத்திரன் என்ற பெயர் பெருவழக்கிலிருந்தமையும் அப் பெயரைப் பெற்றோர் தம் மக்கட்குச் சூட்டும் வழக்கும் சங்க காலத்திருந்தமைபுலனும். ஆனால் உருத்திரன் என்ற பெயர் சங்கப்பாடலின் பயின்றுவரக் காணவில்லை. இப்பெயர் பூண்ட புலவன்மார் பாடல்கள் தொகுக்கப்பட்டிராவிடின் ஆய்வாளர் உருத்திரன் என்ற பெயரும் சங்கநாளில் பயின்றிலது என் றுரைக்கப் பின்னிடையார். சிவனார் எனும் பெயருள்ள புலவன்மார் இருந்ததாகக் காணப்படவில்லையே எனில் கூறு தும். 102 பாடல்கள் ஆக்கியோர் பெயரின்றிக் கிடக்கின் றன. தெரிந்த பெயருள்ளும் பல இயற்பெயரல்ல. பாடல் களில் வரும் தொடர்களைக் கொண்டே பாடலாசிரியர் பெயர் வரையப்பட்டுள. அணிலாடு முன்றில் என்ற தொடரைப் பயன் படுத்திய புலவர் அணிலாடு முன்றிலார் ஆனார். மீனெறி தூண்டில் என்ற தொடரைக் கூறிய புலவர் மீனெறி தூண்டி லார் எனப்பட்டார். விட்ட குதிரை என்று பாடிய புலவர்

விட்ட குதிரையார் என்று கூறப்பட்டார். இப்படிப் பலப்பல உள. இவற்றை எல்லாம் கருத்தில் கொண்டு சிந்திப்பின் சிவனார் என்று பெயர் பெற்ற புலவர் வாழ்ந்திலர் என்று துணிவுரைத்தல் இயலாது என்க.

சங்க நூற்களில் வரும் சிறப்புப் பெயர்களும் செய்திகளும் சங்ககால மக்கள் சிவபிரானைப் பற்றிய எல்லாத் தத்துவங்களையும் வரலாறுகளையும் நன்கு உணர்ந்திருந்தனர் என்று சான்று பகரவுள்ளன. புறநானூற்றுக் கடவுள் வாழ்த்தில் வரும் "பெண்ணுரு வொருதிறன் ஆகின்றவ்வுருத், தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" என்னும் வரிகள் சங்ககால மக்களின் சித்தாந்த அறிவை நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

இனி, சங்கநூல்களில் பயிலும் சில செய்திகளை இக் கட்டுரையில் கண்டு இன்புறுவாமாக.

3. கொலைவன்

இறைவன் முத்தொழில் இயற்றுபவன். படைத்தல் காத்தல், அழித்தல் என்பவை அம்முத்தொழில்கள் ஆகும். படைத்தலைப் பிரமனும் காத்தலை விட்டுணுவும் அழித்தலை உருத்திரனும் செய்வர் என்பர். அன்னோர் சிவபெருமானின் அருட்சக்தி இயக்கும் ஆற்றலால் அப்பணியை ஆற்றுவரே யல்லாது தாமே ஆற்றும் ஆற்றலினரல்லர். இதனையுணர்த் தவே ஆளுடையபிள்ளையார் "படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகள் ஆயினை" என்று திருவெழுகூற்றிருக்கையில் போற்றியருளினார். பேருழிக் காலத்தில் உருத்திரன் வாயிலாக எல்லாவுலகுயிர்களையும் (பிரம விட்டுணுக்கள்) உட்பட ஒடுக்கிக் கொண்டு, அவ்வுருத்திரன், மகேசன், சதாசிவன் என்பாரையும் தன்னகத்தே இறைவன் ஒடுக்கிக் கொள்வான். இதனைக் காரைக்காலம்மையார்,

"இறைவனே எவ்வுயிருந் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே ஈண்டிறக்கம் செய்வான்—இறைவனே

எந்தாய் எனவிரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அது மாற்றுவான்''

என்று உணர்த்தியருளினர். இவ்வாறு யாவற்றையும் அழிக்கும் இறைவனை மகாசங்காரக் கடவுள் என்பர். யாவற்றையும் அழித்துத் தனியனாய் நிற்கும் அக்கடவுளே மீண்டும் படைத்தல் வேண்டும். ஆகலினாற்றான் ''ஒடுங்கின சங்காரத்தின் அல்லது உற்பத்தி இல்லை'' என்று சிவஞானபோதம் கூறிற்று.

மகாசங்காரக் கடவுள் என்பதையே தூய தமிழில் ''கொலைவன்'' என்று புலவன்மார் கூறினர்.

''கொலைவன் சூடிய குழவித் திங்கள் போல்''

என்று கலித்தொகை (103 ஆம் பாடல் வரி15) என்று கூறலையறிக. இங்ஙனம் சிறப்புப் பெயர் பெற்ற கடவுளுக்கு இயற்பெயரும் இட்டுத் தமிழர் ஏத்தியிருப்பர் அன்றோ! அவ்வியற்பெயர் யாது என்று ஆய்வாளர் கூறல் வேண்டும்.

4. வாய்மொழிப் பிரான்

இறைவன் அநாதி எனவே அவனைச் சத்து என்பர். அவன் குணம் வாலறிவு, அதனைச்சித்து என்பர். அவன் இன்ப இருக்கை எனவே ஆனந்தம் என்பர். இங்ஙனம் சத்து, சித்து ஆனந்தம் (சச்சிதானந்தம்) ஆக விளங்குகிறான். சத்துப் பொருளகிய அவன் திருமொழி அசத்து ஆகுமா? ஆகாது. இறைவன் திருமொழியே வாய்மை யாகும். அதுவே நிலைபேறுடையது. ஏனையோர் மொழிகள் அவர்களைப் போன்றே பொய்த்துப் பொன்றிவிடும். மற்றும் அவர் இயல்பும் பொய்யுரைப்பது. இறைவனின் திருமுடியைக் கண்டேன் என்று பிரமன் பொய் பேசினான். திருமாலோ ''கார்ப்பாக சாதனன் றன் மகனுக் கெல்லாக், கலகமும் செய் வஞ்சனையே கற்ற கள்வன்'' என்று வில்லிபுத்தூராழ்வார் கூறிய இயல்பினன். எனவே வாய்மையுரை உடையவன் இறைவன் ஒருவனே. சத்துப் பொருளின் மொழியே சத்து. ஏனைய அசத்து. இக்

கருத்தைக் கலித்தொகை,

"ஐயந்தீர்ந் தியார்கண்ணும் அருந்தவ முதல்வன்போல்
பொய்கூருய் எனநின்னேப் புகழ்வது கெடாதேதான்"
(100)

என்று கூறும். அருந்தவ முதல்வன் என்ற தொடர்க்கு உரை வகுத்த ஆசிரியர் நச்சிஞர்க்கினியர் "அரிய தவத்தையுடைய அறம் வளர்த்த நாயஞர்" என்று கூறிஞர். அரிய தவத்துக்கு முதல்வன் சிவபிரான் எனப்படலால் தவம் என்பது அவனே நோக்கியே செய்யற்பாற்று என்ற உண்மையும் தெளியப் படும். இவ்வருந்தவ முதல்வனே சிவன் என்ற பெயரால் சங்க கால மக்கள் அறிந்திலர் எனின் வேறு எப்பெயரால் அறிந் திருந்தனர் என்று ஆய்வாளர் தெரிவிப்பாரா?

5. அந்தணன்

எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகும் அறநெறி யினர் அந்தணர் எனப்படுவர். தேவர்களில் அந்தணன் சிவ பிரான். விட்டுணு அரசன். "திருவுடை மன்னரைக் காணில் திருமாலேக் கண்டேனே" என்பது நாலாயிரப்பிரபந்தம். பிரமன் வணிகன். சாமவேதப் பிராமணம்,

"த்வம் தேவேஷுப்ராஹ்மணோஸி அஹம் மநுஷ்யேஷு
ப்ராஹ்மணோஹி

ப்ராஹ்மணமுபதாவதி உபத்வாதாவாமி" என்றும்

"விஷ்ணுர்வை க்ஷத்ரியோ ப்ரஹ்மாவைச்யஇதி"

என்றும் கூறும். பொருள்:- "உருத்திரன் என்னும் நீ தேவர் களுள் அந்தணன், நான் மாந்தரில் அந்தணன். அந்தணன் அந்தணனேத் தான் வழிபடுவான். ஆகலின் யான் உன்னே வழிபடுவேன்" எனவும் "விட்டுணு அரசன், பிரமன் வணிகன்" எனவும் ஆம். சிவபிரான் அந்தணன் என்னும் கருத்தைப் பரிபாடல்,

"ஆதி யந்தணன் அறிந்து பரிகொளுவ
வேத மாபூண் வையத்தேர் ஊர்ந்து

நாகம் நாணு மலைவில் லாக
மூவகை ஆரெயில் ஓரழல் அம்பின் முளிய
மாதிரம் அழலவெய் தமரர் வேள்விப்
பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்''(5. வரி 22-27)

என்று கூறுதல் காண்க. ''உலகைப் படைக்கும் நான்முகன், நான்மறைகள் ஆகிய குதிரைகளைத் தேர்ப்பாகனாய் நின்று தூண்டவும், மண்ணுலகம் ஆகிய தேரில் எழுந்தருளி ஆதி சேடனை வில்லின் நாணாகவும் மேருமலையை வில்லாகவும் கொண்டு மூவகைப்பட்ட அரிய மதில்களை தீயாகிய ஓர் அம்பைத் திசைகள் வெதும்பும்படி தொடுத்து அழித்து தேவர் களின் வேள்விக்கண் அவிகொண்ட சினத்தால் பசிய கண்ணை யுடைய அந்தணனாகிய ஈசன்'' என்பது அவ்வரிகளின் பொருள் ஆகும். கலித்தொகையிலும்,

''இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்'' (38)

என வருதலும் ஈண்டு நினைவு கூரற்பாற்று.

பரிபாடலில் வரும் ''பைங்கட் பார்ப்பான்'' என்ற தொடர்க்குச் சினத்தால் பசிய கண்ணையுடைய அந்தணன் என்று பரிமேலழகர் உரைத்தாங்கு உரைத்தேம். ஆயினும் அது செம்பொருள் அன்று. உபநிடதங்கள் இறைவனைச் 'சாந்தம்' என்று புகழ்வதற்கு இப்பொருள் முரண்படும். நாரதபரிவ்ராசகோபநிடதம் 'ப்ரபஞ்சோப சமம் சிவம் சாந்தமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே'' என்று கூறுதல் காண்க. மாண்டுக்கியம், நிருசிம்ம பூர்வதாபிந், உத்தர தாபிந், ராமோத்தரதாபிநீ முதலிய உபநிடதங்கள் சாந்தம் என்ற சொல்லையிட்டுக் கோடிக்கும். எனவே பைங்கண் என்பதன் உண்மைப் பொருளைத் தெளிந்து உரைத்தார் நச்சினார்க்கினியர் ஒருவரே. அவர் கூறும் பொருளையும் காட்டுவாம்.

6. பசுங்கட் கடவுள்

''சுடர்விரிந் தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங் கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் தோற்றங்காண்
படரணி யந்திப் பசுங்கட் கடவுள்
இடரிய வேற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்
குடர்கூளிக் கார்த்துவான் போன்ம். (கலித்தொகை 101,
வரி 21-26)

இதன் பொருள்:—''நிலவு விரிந்தாற் போன்ற சுட்டியை நெற்றியில் உடைய கரிய எருது மலைப்பூவாகிய தலைமாலையைக் கொண்ட இடையனை வருத்தி அவன் குடர் சரியும்படி தன் கொம்பாலே குத்திக்குலைக்கும் காட்சியைக் காண்பாயாக. உலகம் குலைவுறும்படி நிகழும் ஊழிக்காலத்திலே பசிய நிறத்தளாய உமா தேவியைப் பாகத்தே கொண்ட உருத்திரன், மார்க்கண்டேயராகிய தன் அடியவர்க்கு இடர் விளைத்த எருமையேற்றை ஊர்தியாகக் கொண்ட கூற்றுவனின் மார்பைப் பிளந்து அவன் குடரைக்கூளிக்கு உணவாக்கும் செயலை ஒத்துள்ளது'' எனவாம்.

இதன் கண் பசுங்கட் கடவுள் என்பதற்குப் பசிய நிறத்தளாய தேவியைப் பாகத்தே கொண்ட இறைவன் என்று நுண்பொருள் கண்ட நச்சினார்க்கினியர் நுண்மாண் நுழைபுலம் பெரிதும் போற்றற்பாலது. எனவே 'பைங்கட் பார்ப்பான்' என்ற இடத்தும் பசியநிறத்தளாகிய தேவியைப் பாகங் கொண்ட அந்தணன் ஆகிய சிவபிரான் என்று பொருள் காண்டலே சிறப்பிற்று. பசுங்கண் = பசுமை + கண் பசுமை அந்நிறத்தையுடைய தேவியைச் சுட்டியது. கண் என்பது அவளைத் தன் இடத்திலே கொண்டமையைக் குறிப்பிடுவது.

இங்ஙனமே நச்சினார்க்கினியர் கூறும் அரிய பொருள் நுட்பங்களில் மேலும் ஒன்றைக் காண்பாமாக,

7. மணிமிடற்று எண்கையான்

இறைவன் மனமொழிகளைக் கடந்து நிற்பவன். இத்திறத்தை'' மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே' என்று

மணிவாசகப் பெருமான் உணர்த்தியருள்வர். அவன் அடியவர் அல்லலே அறுப்பவன். இதனைச் 'சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறிநின்று, பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்' என்று அப்பெருமான் அருளிச் செய்துள்ளார். அவன் அடிய வர்கட்கு வேண்டும் பொருளுதவுபவன். அருணகிரிநாத வள்ளல் 'வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை வேண்டும் அளவில் உதவும் பெருமாளே' என்று போற்றுவார். இச்செய்திகளைக் கலித்தொகை

"ஆறறி அந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக் கரந்து திரிபுரந் தீமடுத்துக்
கூறுமல் குறித்ததன்மேல் செல்லும் கடுங்கூளி
மாருப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி"
(கடவுள் வாழ்த்து)

என்று கூறுகின்றது. நான்முகனுக்கு நான்கு மக்கள். சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமரர் என்பார். நால்வரும் நற் கலை பல கற்றும் வீடுறுநெறியை விளக்கமாகக் கண்டிலர். எனவே சிவபிரானை அணுகினர். அவன் வாக்கிறந்த பூரண மாய் மனக்கப்பாலாய் எல்லாமாய் உள்ளதுமாய் உள்ள பொருளை உணர்த்தினான். அதனை எவ்வாறு உணர்த்தினான்? கரதலம் உரத்தில் சேர்த்து மோன முத்திரையைக் காட்டிச் சொல்லாமல் சொல்லியருளினான். இதனையே

"ஆறறி அந்தணர்க் கருமறை பலபகர்ந்து"

என்றார். மதங்கொண்டயானை யாவற்றையும் அழிவு பண் ணும். ஆனால் அதைவயப்படுத்திப் பயிற்சி தந்தால் மக்கட் குப் பயன்படும் பல பணிகளைச் செய்யும். அதுபோலக் கங்கை யாறு வீறுகொண்டு பாய்ந்தால் உலகம் நீறுபடும். அதை ஒருதுளியாக்கிச் சடையிலே கரந்து அதன் வீறு ஒழித்து நில வுலகிற் பாய்ந்து நலம் பல விளையச் செய்தான் பரமன். அங் ஙனமே உலகை நடுங்கச் செய்த முப்புரங்களையும் முறுவலின் தோன்றிய தீயால் எரித்துக் காத்தருளினான். இதை விளக்கு வது,

''தேறுநீர் சடைக்கரந்து முப்புரந் தீமடுத்து''

என்பது. ''இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன்'' என்று கூற ஒண்ணுதபடி மொழிகடந்து நிற்பவன் இறைவன். ''கூருமல்'' மொழியால் கூறப்படா மல் என்பது பொருள். மனம் சிந்திக்கும் தன்மையுடையது. அச்சிந்தனைகளுக்கு எல்லாம் எட்டாத அசிந்தன் இறைவன். இதனைக் ''குறித்ததன் மேற்செல்லும்'' என்ற தொடர் உணர்த்துகிறது. குறித்த : மனத்தால் குறிக்கப்பட்ட அதன் மேல் செல்லும் அப்பொருளையும் கடந்து விளங்கும் என்பது பொருள். சிவபிரானே சருவ சங்காரகருத்தா என்பதைச்சரப உபநிடதம் ''யோந்தகாலே ஸர்வலோகாந் ஜஹாரஸ ஏக ச்ரேஷ்டச்சஸர்வ'' என்று கூறும். இதனையே ''கடுங்கூளி மாருப்போர்'' என்ருர். கடிதாகிய கூளிகள் தங்கிய முது கிடாத போர் என்பது பொருள். அடைந்தவர்க்கு அளி செய் யும் அண்ணல் அரன். அதனையே நீலமணியொத்த அவனது மிடறு காட்டி நிற்கும். கடலின் தோன்றிய நஞ்சை எம்பிரான் உண்டு உலகைக் காவானேல் யாவரும் அழிந்திருப்பர். இதனை

''பாரோடும் விண்ணேர்கள் பறந்தோடப் புரந்தரனுர் பதி விட்டோடத்
தேரோடும் கதிரோட மதியோட விதியோடத் திருமால் மேனிக்
காரோடத் தொடர்ந்தோடும் கடல்விடத்தைப் பரமனுண்டு காவா விட்டால்
ஆரோடும் நீரிருப்பீர் எங்கோடியுயிர் பிழைப்பீர் அறிவிலீர்காள்''

என்று குற்ருலப்புராணம் கூறும். எனவே இறைவன் அடிய வர் அல்லலை அலைப்பவன் என்று அறிக. இதனையே 'மணி மிடற்று' என்பது குறித்தது. எட்டுத்திக்கில் உள்ளவர்களாய அடியார்களுக்கு வாரி வழங்கும் எட்டுக் கைகளையுடையவன் இறைவன். எனவே 'எண்கையாய்' என்ருர். இத்தனைப் பொருளும்

"கூருமல் குறித்ததன்மேல் செல்லும் கடுங்கூளி
மாருப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி"

என்னும் வரிகளால் உணர்த்தப்படுகின்றன. இறைவன் எட்டுத்திருக்கைகளை உடையவன் என்ற உண்மையை உணர்ந்திருந்த சங்ககால மக்கள் அவன் சிவன் என்னும் பெயருடையான் என்றறியார் என்பது அவம்படுவதே.

இப்பாடலில் 'கூருமல் குறித்ததன்மேல் செல்லும்' என்ற தொடர்க்குப் புலவன்மார் 'வாய்பேசாமல் தான் குறித்த கருத்தின் மேற் செல்லும்' என்று எளிய, சிறப்பு ஏதும் தங்காத பொருளையே கூறுவர். நச்சினூர்க்கினியர் இத் தொடர் இறைவன் 'மாற்றம் மனம் கழிய நின்ற மறை யோன்' ஆதலைக் குறிப்பது என்று உணர்ந்து பொருள் விரித்த நுண்மாண் நுழைபுலம் வியத்தற்குரியது.

8. நீர்சடைக் கரந்தான்

உலகில் உள்ள எல்லாப் பொருளும் அழிவுறும். எல்லா வுயிர்களும் அவ்வப்போது தம் நிலை திரிவுறும். இறைவன் அன்றும் இன்றும் என்றும் அழிவின்றித்திரிபின்றி விளங்குவன். கங்கையாறு கரைபுரண்டு தன்கைப்பட்ட எப்பொருளையும் உந்திச் சென்று கரையிலும் கல்லிலும் மோதவிட்டு ஆரவாரம் செய்யும் நீர்மையது. அதன் முந்தைய நிலையோ பலமடங்கு அச்சம் விளைவிக்கும் தன்மையது. அதன் கடிதாகிய வேகத்தைப் பரமேசுவரனேயன்றித் தாங்குதற்கு வேறு யார் உளர் என்று நான்முகனே உரைத்தான். தேவியின் கைவிரல் நகக்கண்களினின்றும் பிறந்தமையால் அத்தனை ஆற்றல் கொண்டதாயிற்று. இறைவன் அதைச் சடையில் ஒரு துளி யாகத்தரித்துக்கொண்டான். இறைவன் அக்கங்கையைச் சடையில் ஏற்றதற்கு முன்னும் பின்னும் நிலை திரிந்திலன். செல்வம் பலரிடத்தும் சென்று சிலபோது வைகிப் பெயரும் தகைமையது. இவ்வாறு ஓரிடத்தில் நில்லாது பல்லிடங்களில் சென்று தங்கினும் செல்வம் இறைவனைப்போலவே தன் நிலை திரியாது நிற்கும். (ஒரு பொற்காசு எப்போதும் ஒரு பொற்

காசாக இருக்குமேயன்றி வெள்ளிக்காசாகவோ செம்புக்காசாகவோ நிலை திரியாது. இப்படிக் கண்டுகொள்க). இக்கருத்தைக் கலித்தொகை,

"இறந்துதாம் எண்ணிய எய்துதல் வேட்கையால்
அறந்துறந் தாயிழாய் ஆக்கத்தில் பிரிந்தவர்
பிறங்குநீர் சடைக்கரந்தான் அணியன்ன நின்னிறம்
பசந்துநீ இனையையாய் நீத்தலும் நீப்பவோ (150)

என்று விளக்குதல் காண்க.

9. புரம் எரித்த புண்ணியன்

"ஆதியந்தணன்" என்று முற்காட்டிய பாடலிலே சிவபிரான் புரமெரித்த வரலாறு நன்கு விளக்கப்பட்டுள்ளது. புறநானூறும்

"ஓங்குமலைப் பெருவில் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல்'

என்று கவினுறப்பாடும். இத்துணைவரலாறுகளும் வழங்கி வந்தகாலை சிவபிரானின் பெயர் மட்டும் வழங்கவில்லை என்று கொள்வது நறிதோ? சிந்திமின்! இவ்வரலாற்றைக் கலித்தொகை கூறும். சிலப்பதிகாரமும்

"திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம் பேவல் கேட்ப"

என்று இவ்வரலாறு கூறும். திருமங்கையாழ்வாரும் இவ்வரலாற்றை

"தழல்நிற வண்ணன் நண்ணார் நகரம் விழநனி மலைசிலை வளைவுசெய்தங்
கழல்நிற அம்பது ஆனவனே"

என்றுகூறித் திரிபுரம் எரித்தகாலே அம்பாய் நின்ற தன் கடவுளேப்போற்றி செய்தார். இவ்வாறு அம்பாகிய செயலேச் சீவகசிந்தாமணியும்

''மேகம் ஈன்ற மின்னனே யாள்தன் மிளிர்பைம்பூண்
ஆகம் ஈன்ற அம்முலே யின்பால் அமிர்தேந்த
போகம் ஈன்ற புண்ணியன் எய்த கணேயேபோல்
மாகம் ஈன்ற மாகதி யன்ஞன் வளர்கின்ருன்''

என்று உரைத்தது. போகம் ஈன்ற புண்ணியன் எய்த கணேயே போல் = தான் சத்தியும் சிவனுமாய் உலகத்துக்கெல்லாம் போகத்தை உண்டாக்கின புண்ணியன் ஆகிய பரமேசுவரன் திரிபுரவிசயத்தில் எய்த கணேயாகிய திருமால் (அவதாரம் ஆகிய கண்ணன் ஆய்ப்பாடியில் ஒளித்து வளர்ந்ததைப்) போல.

10. நஞ்சுண்ட நம்பன்

இத்திருப்பெயர்ப் பற்றிய விளக்கம் முற்கட்டுரையிலேயே வந்துள்ளது. திருவண்ணுமலே என்பது திருமால் பிரமர்களுக்கு எட்டாத மலே என்பது யாவரும் அறிந்ததே. இதன் வடமேற்கில் திரிசூலகிரி என்று ஒரு மலே உள்ளது. இதைப் பருவதகிரி என்றும் வழங்குவர். இதன் தொன்மைத் தமிழ்ப் பெயர் நவிர மலே என்பது ஆகும். இம்மலேயில் இறைவன் எழுந்தருளியுள்ளான். அவன் இஞ்ஞான்று காளகண்ட ஈசுவரன் என்று வழுத்தப்படுகின்ருன். பெருமான் நஞ்சையுண்டு அதைத் தன் மிடற்றில் நிறுத்திப் பளிங்கன்ன தன் மேனியின் நிறத்தால் அதனே நாம் எல்லாம் கண்டு உய்யும் வண்ணம் காட்சிப்படுத்துவதால் இப்பெயர் பெற்ருன். இதே பொருளில் அமைந்ததே இவனது தொன்மைத் தமிழ்ப் பெயரும். அது காரியுண்டிக்கடவுள் என்பதாகும். இவ்வுண்மையை மலேபடுகடாம்

''நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பேரிசை நவிர மேஎ யுறையும்
காரி யுண்டிக் கடவுள தியற்கையும்''

என்று எடுத்தியம்புதல் அறிந்து இன்புறுக. இதனையே புறநானூறும்

"கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே"
(கடவுள் வாழ்த்து)

என்று கூறிற்று. இதற்கு உரையாசிரியர்

"நஞ்சினது கறுப்பு திருமிடற்றை அழகு செய்தலும் செய்தது. அக்கறுப்பு தான் மறுவாயும் வானோரை உய்யக்கொண்டமையின் வேதத்தைப் பயிலும் அந்தணரால் புகழவும் படும்" என்று உரைவகுத்த திறம் உணர்ந்து மகிழ்தற்பாலது ஆம்.

11. முத்தொழிலோன்

படைத்தல் முதலிய ஐந்தொழில் இயற்றும் இறைவன் என்று சிவபிரானைப் பஞ்சப்ரஹ்மோபநிடதம் போற்றி செய்யும். மைத்ராயண உபநிடத்து நான்காம் பிரபாடகம் "அக்கினி, வாயு, சூரியன், பிராணகாரம், அன்னம், பிரமா, உருத்திரன், விட்டுணு முதலினோர் பிரமத்துக்கு உடம்புகள் என்று கூறும். ஈண்டு உடம்புகள் என்றது அவர்களின் உடம்புகளைக் குறியாது உயிர்களைக் குறிக்கும் என்றறிக. எனவே படைப்பவனும் அவனே, காப்பவனும் அவனே, துடைப்பவனும் அவனே என்று அறிக. இதனை முன்னருங் கூறினும். ஆதியுலாவும்

"அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான்
அரனாய் அழிப்பவனுந் தானே"

என்று கூறியது. இக்கருத்தை

"மணிவிளங்கு திருமார்பின் மாமலராள் வீற்றிருப்பப்
பணிதயங்கு நேமியும் பால்நிறத்த சுரிசங்கும்
இருசுடர்போல் இருகரத்தில் ஏந்தியமர் மாயோனும்
பங்கயத்தில் உறைவோனும் பாகத்தோர் பசுங்கொடி சேர்
செந்தழற்கண் நுதலோனும் தேருங்கால் நீயென்பார்"

எனவரும் பாடல் கூறுதல் காண்க. இப்பாடல் தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியலில் (146ஆம் சூத்திரத்துப்) பேராசிரியராலும் நச்சினர்க்கினியராலும் ஆளப்பட்ட மேற்கோள் செய்யுளாகும். படைத்தலைச் சிவபிரானுக்கு உரியதாக்கி

''நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே''

என்று ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்தும், காத்தலைச் சிவபிரானுக்கு உரியதாக்கி

''எல்லா வுயிர்க்கும் ஏமம் ஆகிய
நீரற அறியாக் கரகத்துத்
தாழ்சடை பொலிந்த அருந்தவத்தோற்கே''

என்று புறநானூறு கடவுள் வாழ்த்தும், துடைத்தலைச் சிவபிரானுக்கு உரியதாக்கி

''படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி யாடுங்கால் கோடுயர் அகலல்குல்
கொடிபுரை நுசுப்பினுள் கொண்டசீர் தருவாளோ''

என்று கலித்தொகைக் கடவுள் வாழ்த்தும் கூறலும் நினைவு கூரற்பாற்று.

இனி முத்தொழிற்கும் உரியோன் என முற்காட்டிய தொல்காப்பிய மேற்கோள் பாடல்

''அவரவர்தம் உள்ளத்துள் அவ்வுருவாய் அல்லாத
பிறவுருவும் நீயென்னில் பிறவுருவும் நீயேயாய்
அளப்பரிய நான்மறையால் உணர்த்துதற் கரியோனே''

என்று கூறிற்று. சிலப்பதிகாரம் இக்கருத்தைத் தேவிமேல் சார்த்தி

> ''வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக்
> கரிய திரிகோட்டுக் கலைமிசைமேல் நின்ருயால்
> அரியரன் பூமேலோன் அகமலர்மேல் மன்னும்
> விரிகதிரஞ் சோதி விளக்காகி யேநிற்பாய்''

என்று கூறலும் உணரற்பாலது. இத்தொல்காப்பிய மேற்கோள் பாடல் கந்தழியைக் குறிப்பதென்று சிலர் கூறுவர். அவரெல்லாம் ''ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே' என்ற மாண்டுக்கியோபநிடத நெறியை விலக்கி ''முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவன் மூரிநீர் வண்ணன்'' என்னும் மயல் நெறியினராகலின் அவருரை கொள்ளற்பாற்றன்று.

12. யாவர்க்கும் அரியவன்

''வான்வந்த தேவர்களும் மாலயனே டிந்திரனும், கானின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய, தான்'' என்று மாணிக்கவாசகப் பெருமானுர் அருளிச் செய்தனர். இக் கருத்தையே, அகநானூறு

> ''மூவா அமரரும் முனிவரும் பிறரும்
> யாவரும் அறியாத் தொன்முறை மரபின்
> வரிகிளர் வயமான் உரிவை தைஇய
> யாழ்கெழு மணிமிடற் றந்தணன். (கடவுள் வாழ்த்து)

என்று ஏத்துதல் கண்டு இன்புறுக.

13. திருக்கோயில்

இங்ஙனம் யாவர்க்கும் அரியவனுயினும் யாவர்க்கும் உரியவனும் ஆதல் பற்றி அவனுக்குத் திருக்கோயில் எடுத்துச் சங்ககால மக்கள் வழிபட்டனர்.

> ''பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
> முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே''

என்று வரும் புறநானூறு (6ஆம் பாடல்) இதனை உணர்த்து கின்றது. இப்பாடலிலும் சிவபிரான் அந்தணன் ஆவன் என்பதை 'முனிவர்' என்ற சொல் உணர்த்தி நிற்றல் அறிதற்பாலது. இக்கோயில்களில் ஒன்ருய்த் திகழ்ந்த மதுரை எம்பிரான் திருக்கோயில் பரிபாடலில் கீழ்வருமாறு விளக்கப் படுகின்றது.

''மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர் பூவின்
இதழகத் தனைய தெருவம் இதழகத்
தரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்''

திருமாலின் திருவுந்தியில் மலர்ந்த தாமரையை நிகர்த்து சிறப்பையுடைய மதுரை விளங்குகின்றது. அப்பூவின் இதழகம் போன்றவை தெருக்கள். அவ்விதழகத்துத் தங்கிடும் குமிழி போன்றது சிவபிரான் திருக்கோயில் என்பது இதன் பொருள். சங்ககாலத்து அண்ணல் (சிவபிரான்) கோயிலாக விளங்கிய இத்திருக்கோயில் இஞ்ஞான்று என் அம்மை (மீனுட்சி)யின் திருக்கோயிலாக வழங்கப்படுகின்றது. இவ் வழக்கம் எக்காலத்தில் தோன்றியது என்பது உணர்தற்குக் கூடவில்லை. அம்மையாயினுமென்? அப்பனுயினுமென்? இருவரையும் ஒருவராகவே நம் பழந்தமிழ் மக்கள் வழிபட்டனர் என்பது

''மூவிலை நெடுவேல் ஆதி வானவன்
இடமருங் கொளிக்கும் இமயக் கிழவி
தனிக்கண் விளங்கும் நுதற்பிறை மேலோர்
மிகைப்பிறை கதுப்பில் சூடி வளைக்கையின்
வாள்பிடித் தாளி யேறித் தானவன்
மானக் கடும்போர் கடந்த குமரி
மூவா மெல்லடித் திருநிழல்
வாழி காக்கவிம் மலர்தலை யுலகே''

எனவரும் ஆசிரியமாலைப் பாடலாலும் முற்காட்டிய ''வரி வளைக்கை வாளேந்தி'' என்னும் சிலப்பதிகாரப் பாடலாலும் நன்கு விளங்கும்.

## 14. அடியார்க்கு எளியன்

முற்கூறியபடி இறைவன் யாவர்க்கும் அரியவனாக இருந்தாலும் அவன் அடியவர்க்கு எளியவனேயாவன். இதனை

''ஒண்மைய னேதிரு நீற்றையுத் தூளித் தொளிமிளிரும்
வெண்மைய னேவிட் டுடுதிகண் டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென்றும் சேயாய் பிறர்கறி தற்கரிதாம்
பெண்மைய னேதொன்மை யாண்மைய னேயலிப்
பெற்றியனே''

என வரும் திருவாசகத்தால் உணரலாகும். சிவபிரான் தேவர்க்கும் திசைமுகற்கும் திருமாற்கும் ஏனைப் பிறர்க்கும் தெரிவரியான். இவ்வுண்மையை எல்லா மெய்ந்நூல்களும் சாற்றுகின்றன. எனவே 'என்றும் சேயாய் பிறர்க்கு' என்றார். இப்படிப்பட்டவனை வழிபட்டு உய்தி பெறவேண்டுமே! வழிபாட்டில் என்னென்ன சிறப்புச் செய்ய வேண்டுமோ என்று எண்ணி மலைத்தல் வேண்டா. அவன் அடியவர்க்கு எளியவன். இதனை ''மெய்யடியவர்கட்கு அண்மையனே' என்றார். அவனுக்குப் பொன்னாலான நகைகள் பூட்டவேண்டுமே என்று கவலேல். பொன் அவனுடைய வீரியம். எனவே பொன் அணிகளைப் பிறர் பூணலாயினர். அவன் பூண்பன பாம்புகள் இதனை

''மையணி கண்டனை வானோர்தம்
ஐயனை யாயிரம் பேழ்வாய்ப்
பையர வம்பல பூணும்
மெய்யனை மேயது வீடே''

எனவரும் பாடல் உணர்த்தும். இப்பாடல் தொல்காப்பியத்தில் பேராசிரியர் காட்டியது ஆகும். சிவபிரான் திருவடியை

அடைவதே வீடுபேறு என்று இப்பாடல் அறிவுறுத்தலையும் அறிக. அடியவர்க்கு எளியவனாகிய இறைவன் தன்னை வழிபடுதற்கு அடியார் வருத்தம் மேற்கொள்ளலை விரும்பான். எனவே நான் தாமரையிட்டுப் பூசித்தாலே ஏற்பேன், முல்லை, மல்லி முதலிய நறுமணமுடைய பணச்செலவை உண்டாக்கும் பூக்களையிட்டுப் பூசித்தாலே ஏற்பேன் என்று இறைவன் கூறுன். இங்ஙனம் உடலுக்கு வருத்தமும், பணச்செலவும் நறுமணமும் கூடிய மலர்களை மக்களே அணிந்து கொள்ளுமாறு நீக்கிவிட்டுப் புல், பச்சிலை, எருக்கு இவைகளை அணிந்து மகிழ்கிறுன். இவை கிடைத்தற்கு எளியவை, பணச்செலவு இல்லாதவை. இவற்றைப் பெறற்கு உடல்வருந்த வேண்டுவதின்று. திருமூலநாயனாரும் "யாவர்க்கும் ஆம் இறைவற்கொரு பச்சிலை" என்றார். இக்கருத்தைச் சங்கப் புலவராகிய கபிலர் கூறலைக் கேண்மின்

"நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்கம் ஆயினும் உடையவை
கடவுட் பேணேம் என்னு வாங்கு
மடவர் மெல்லியர் சொல்லினும்
கடவன் பாரி கைவண் மையே" (புறநானூறு)

இக்கருத்தை வடலூர் இராமலிங்க சுவாமிகள்

பகுதி தகுதி விகுதி யெனும்பாட்டில்
இகலில் இடையையிரட் டித்துத்—தகவின்
அருச் சித்தான் முன்னும் அதுகடையாம் கண்டீர்
திருச்சிற் சபையானைத் தேர்ந்து"

என்று உரைத்தார். தில்லையில் சிற்சபையில் உள்ள பெருமானை உள்ளத்தில் பதித்து வழிபடுக என்கிறார். யாங்ஙனம் வழிபடல் வேண்டுமோ எனில் கூறுதும். பகுதி, தகுதி, விகுதி இவற்றின் இடையெழுத்து கு. மூன்றிலும் உள்ளதைச் சேர்த்தால் குகுகு ஆகும், இதை இரட்டித்தால் குகுகுகுகுகு.

அதாவது ஆறு கு உள்ளன. அதாவது அறுகு. இந்த அறுகம் புல்லைக் கொண்டு சிவபிரானை முறைப்படி வழிபடுக. வழி பாட்டின் பயன் யாதெனில் ''முன்னும்'' அதாவது அச்சொற் களில் முன்னால் உள்ள எழுத்துக்களால் ஆனபொருள். அது பதவி. எனவே இம்மையிலே நல்ல பதவி பெற்று இன்புற்று வாழலாம். அவ்வுலகத்திலே பெறும் பயன் யாதெனில் 'கடையாம்' அதாவது இறுதி எழுத்துக்களால் ஆன பொருள் கிட்டும். அது யாது? திதிதி. அதாவது மூன்று தி=முத்தி. எனவே வீடுபேறு கூட்டும் என்றாராயிற்று.

நாம் இறைவனை நெஞ்சில் நீங்காதவண்ணம் வழிபட்டு அவன் திருவருட்கு உரியராவோமாக.

சிவம்

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# சைவ சித்தாந்த பரிபாஷை

## ஸ்ரீசூரிய சிவாசாரியாரால் வடமொழியில் இயற்றப்பட்டதன் மொழிபெயர்ப்பு

## நான்காவது பசு பரிச்சேதம்

பசுக்களான ஆன்மாக்கள் அநேகர்; சேதனர்; பாசத்தால் தடைபட்ட அறிவையுடையவர்; ஆதலினுல் சுதந்திரத்தன்மை இல்லாதவர்; பதியின்ருெழிலுக்கு விடயமாயுள்ளவர்; அதனுல் பதியாலனுக்கிரகஞ் செய்யத் தகுந்தவர்; நித்தியர்; வியாபகர் என்னும் இவ்விதமான அநேக இலக்கணமுடையவராவர்.

இந்த இலக்கணங்களையுடைய ஆன்மாக்கள் விஞ்ஞானு கலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூன்றுவிதமான வேறு பாட்டையுடையவர்களாய் விளங்குகின்றனர். அம்மூவர் களுக்கும் சுதந்திரத் தன்மையை இல்லை என்னும்படி செய்யக் கூடிய ஆணவமலம், கன்மமலம், மாயாமலமென்னும் பாசங் களுள், விஞ்ஞானுகலரிடத்தில் ஆணவமலம் ஒன்றும், பிரளயா கலரிடத்தில் ஆணவம், கன்மமிரண்டும், சகலரிடத்தில் ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்றும் இருக்கின்றன.

அஃதெவ்வாறெனில், எந்த ஆன்மாக்கள், சாமானிய சாத்திரங்களால் அறியப்பட்ட ஞானம் யோகம் சந்நியாசம் முதலிய உபாயங்களினுலாவது போகானுபவத்தினுலாவது எல்லாக் கன்மங்களும் நாசமடையப் பெற்றவர்களாயும், அந்தக் கன்மங்களின் அனுபவத்திற்குச் சாதகமாயுள்ள

மாயா காரியங்களான சூக்கும தூல தேகங்களின் சம்பந்தத்தை விட்டு மிகவும் விலகியிருக்கிறவர்களாயும், ஆணவமல மொன்று மாத்திரமுடைய கேவலர்களாயும், மலபரிபாகம் நிகழும் வரை பராபர மோக்ஷத்தையடையாமல் மாயைக்கு மேற்பட்ட சுத்த வித்தியா தத்துவத்தில் வசிப்பவர்களாயும் நூல்களில் கேட்கப்படுகின்றனரோ அந்த ஆன்மாக்களே விஞ்ஞானகலராவர். அவர்கள் ஆணவமலமென்னும் ஒரு பாசத்தையுடையவர்கள். எதனுலெனின், அந்த மலத்தின் வேருன கன்மம், மாயையென்னும் இரண்டு பாசங்களுக்கும் மேற்பட்டவர்களாகையாலென்க.

அவர்களுள், சிலர் சிருட்டியின் ஆரம்பத்தில் மலபரிபாகத்தின் வேற்றுமைக்குத் தக்கவாறு பதியால் நேரே அனுக்கிரகிக்கப்பட்டு மேலே கூறப்பட்ட சுத்த வித்தியா தத்துவத்தில் போகானுபவத்திற்காகவும் அதிகாரத்திற்காகவும் முறையே மந்திரேசுவரர்களாகவும் மந்திரமகேசுவரர்களாகவும் ஏவப்படுகின்றனர்.

வேறு சிலர் மலத்தின் பரிபாக மிகுதியால் போகத்தினிடத்தும் அதிகாரத்தினிடத்தும் ஆசையற்றவர்களாய் பதியால் மோக்ஷத்தையடைகின்றனர். எஞ்சிய ஆன்மவர்க்கங்கள் மலபரிபாகம் நிகழும் வரை திடமான மலத்தடையால் ஒன்றுமறியாதவர்களாய் *கைவல்லியாவத்தையிலேயே இருக்கின்றனரென்று பெரியோர்கள் கூறுகின்றனர்.

அவ்வாருயின், விஞ்ஞான கேவலர்களிடத்தும் ஆன்மத்தன்மை யிருக்கின்றமையால் அந்த விஞ்ஞான கேவலர்கள் வியாபகமாயிருக்க வேண்டும். அவ்வாறன்றி விந்துவின் காரியமான சுத்தவித்தை ஈசுவரமென்னுந் தத்துவங்களில் அவர்களுக்கு இருப்பு கூறப்படுகின்றது. அது எவ்வாறு பொருந்துமெனின், கன்மமலமில்லாதவர்களாதலால் மாயா

* கைவல்லியாவத்தை—விஞ்ஞான கேவலாவத்தை

காரியத்தைத் தாண்டினவர்களாயும் சிறிது காலத்துள் விந்துவின் காரியங்களான ஏனைய தத்துவங்களை அடைபவர்களாயும் இருக்கின்ற விஞ்ஞானகலர்களுக்கு ஏகதேசமான நடுப்பாகத்தில் இருப்புக் கூறியது உபசாரமேயாகும்.

அற்றேல், ஆன்மாக்களுக்குக் கைவல்லியமே மேலான மோக்ஷமென்று எல்லா நூல்களாலும் நிச்சயிக்கப்பட்டிருக்கவும் அந்தக் கைவல்லியத் தன்மையில் பசுத்தன்மை நீங்கவில்லையென்பது எவ்வாறு பொருந்துமெனில், அவ்வாறன்று. அந்த கைவல்யரூபமான முக்தியானது சித்தாந்த சாஸ்திரங்களல்லாத வேறுசாத்திரங்களிற்றான் பிரசித்தமாயிருக்கின்றது. சித்தாந்த சாஸ்திரங்களில் தன் சொரூபத்தினுடைய விளக்கமே ஆன்மாக்களுக்கு முத்தி என்பது பிரசித்தம். அந்தச் சொரூபமானது சருவஞ்ஞத்துவ சருவ கருத்திருத்துவ ரூபமான சிவத்தன்மை என்பது மேலே கூறப்பட்டுள்ளது. இவ்விதமான சிவத்தன்மை யென்னும் தனது சொரூபத்தின் விளக்கம் கைவல்யாவத்தையிற்கிடையாது. எதனாலெனில், அந்த கைவல்யாவத்தையிலும் தனது சொரூபத்தை மறைக்கும் மலம் நசியாமையாலென்க. எப்பொழுது மலம் நசிக்குமோ அப்பொழுதே தனது சொரூபம் விளங்கும். பிற மதஸ்தர்களுடைய முத்தியில் சர்வக்ஞத்தன்மை முதலியவற்றின் விளக்கங் கேட்பதில்லை.

அஃதெவ்வாறெனில், வேதாந்த மதத்தில் சச்சிதானந்த ரூபமான ஆன்மாவைத்தவிர வேறுவிதமான பொருள்கள் ஒத்துக்கொள்ளப்படவில்லை. அறியப்படுவதற்கு விடயமின்மையால் அந்த ஆன்மாவுக்கு தர்மி ரூபமான *சுவசம்வித்து, தர்மரூபமான ★பரசம்வித்து என்னும் வேறுபாடு பொருந்

---

* சுவஸம்வித்து—தன்னறிவு, அதாவது யானென்னும் அறிவு.

★ பரஸம்வித்து—பிறபொருளையறியும் எனதென்னும் அறிவு.

தாது. எல்லாத் தர்மிகளுடைய தருமங்களும் எல்லாவிடத்தி லும் தன்னைத்தவிர வேறு பொருள்களிலேயே பிரகாசிக் கின்றது. எதுபோலுமெனின், அக்கினியென்னுந் தருமியினு டைய சூடு என்னும் தருமமானது அந்த அக்கினியின் வேருன விறகு முதலியவற்ருல் விளங்குவது போலுமென்க.

தரும ரூபமான அறிவின்ருெழிற்பாட்டிற்கு உண்மை யான விடயமில்லாவிடினும் பொய்யான விடயம் இருக்கின்ற தென்பையாயின், பொய்யான விடயத்தையறியும் ஆன்ம அறி விற்கும் பொய்த்தன்மை நிகழும். நிகழவே, அந்த அறிவிற் குப் பொருட்டன்மையில்லையென்பது சித்திக்கும். அதுவே நமது கருத்தென்பையாயின், அது பொருந்தாது; ஆன்மாவின் தருமமான அறிவு பொய்யாகவே அந்தத் தருமத்திற்குத் தருமியான ஆன்மாவும் பொய்யெனப்படுமாகையாலென்க.

தருமித் தன்மை தருமத் தன்மையென்னும் இரண்டு தன் மைகள் ஆன்மாவினிடத்து நாங்கள் கொள்கிறதில்லையென்பை யாயின், தரும தருமித் தன்மையில்லாத பொருள் ஒன்றுஞ் செய்யமாட்டாமையின், பகுத்துணரத்தக்க அருத்தாபத்திப் பிரமாணத்தானும், உளதாந்தன்மை மாத்திரையால் ஒரு பொருள் சாதித்துப் பெறப்படமாட்டாமையானும் அக்கூற்று பொருந்தாது. (அஃதாவது—ஒரு காரியத்தைச் செய்தல் தரும தருமித் தன்மையில்லாத பொருளுக்குக் கூடாது. ஆதலின் இரண்டு தன்மையுடைய பொருள் உண்டென்பது அருத்தாபத்திப் பிரமாணத்தால் சித்திக்குமெனக் கூறி, இதன்மேல் தருமியாகப்பொருளும் தருமமாக உளதாந்தன்மை யும் இருக்கின்றனவென்பாரை மறுத்தற் பொருட்டு எல்லாப் பொருளுக்கும் பொதுத் தருமமான உளதாந்தன்மையைக் கொண்டு சிறப்பான ஒரு பொருள் சாதிக்கப்படமாட்டா தென்பது அறிவித்தற்கு இரண்டாவது ஏதுவுங் கூறப்பட்ட வாருமென்க )

இனி, தன்னையறிபவன் வேறு இல்லாமையால் சாதிக்கப் படும் தன்மையில்லையென்பையாயின், இது அழகாகயிருக்

கின்றது; உபாசிக்கப்படுந் தன்மையுண்டென்று கூறுஞ் சுருதி பயனற்றதாகுமாகையால்.

ஒரு பொருளுக்கே உபாசிக்கப்படுந் தன்மையும் உபாசிக்குந் தன்மையும் உண்டென்று கொள்வோமென்பையாயின், அது பொருந்தாது; அந்த இரண்டு தன்மைகளும் சம்பந்த முடைய இரண்டு பொருள்களுக்கு உளவாவனவன்றி ஒரு பொருளுக்கு உளவாகாமையால்.

ஒரு பொருளுக்கே இரண்டு தன்மைகள் உபாதியினுல் சித்திக்குமென்று கருதுவையாயின். அந்த உபாதி சத்தா, அசத்தா? சத்தாயின் உபாதி ஒரு சத்தும், பொருள் ஒரு சத்துமென இரண்டு சத்துக்கள் உளவெனப்பட்டு ஒரு பொருள் உண்டென்னும் அத்துவிதம் நிலையாது. அசத்தாயின் அந்த உபாதியை விலக்குதற்காகச் செய்யும் உபாசனையும் அசத்தாகும். அசத்தான கிரியையால் சத்தான பலன் அடையப்படுகிறதுமில்லை. ஆகையால் உபாசிக்கப்படுபவன் உபாசிப்பவன் என்னும் சிவனுக்கும் சீவனுக்கும் உள்ள வேறுபாட்டிற்குக் காரணமான ஒரு பொருளை உள்பொருளாகவே கொள்ளல் வேண்டும். அந்தப் பொருளே உபாசிக்கப்படுபவன் உபாசிப்பவன் என்னும் அறிவுடைப் பொருள்களின் அறிவால் அறியப்படும் பொருளாம். (அஃதாவது—மலமென்னுமொரு பொருளை உள்பொருளாகக் கொண்டாற்ருன் மலத்தாற் கட்டுப்பட்ட சீவன் மல நிவிர்த்தியின் பொருட்டு உபாசிப்பவனுகவும், மலத்தாற் கட்டுப்படாத சிவனே மலத்தை நீக்குதற்கு உரியனுதலின் உபாசிக்கப்படுபவனுகவும் ஆகுமென்பதாம்.)

ஆகவே, அறிபவனுந் தன்மைச் சத்தி வடிவாய ஆன்மாவினியல்பை மலத்தோடு கூடியதாக முத்தியின்கணுடம்படாத பூர்வபக்ஷியால் அந்த ஆன்ம சொரூபத்தை மறைக்கும் அநாதி மலமென்னும் பெயருடைய ஒரு பொருள் உண்டென எந்தக் காலத்திலாவது கேட்கப்பட்டிருக்க வேண்டுமென்பது சித்தாந்திகளின் கருத்து. ஆகையால் இவ்வாறு வேதாந்திகள் கூறும் கைவல்யமானது (மலம் நீங்காமையால்) விஞ்ஞான கேவலத்தன்மையென்பது காட்டப்பட்டது.

இனி, சாங்கிய மதத்திலும் வேதாந்தத்திற் போலவே முயற்சி விசேடத்தால் பெறப்பட்ட பிரகிருதி புருடவிவேக ஞானத்தால் கன்மம் நசிக்க பிரகிருதியினெடுக்க ரூபமான கேவலத்தன்மையே முத்தியாகக் கூறப்படும். மூலப்பிரகிருதி யினெடுக்க ரூபமான இந்தக் கேவலத்தன்மையும் பசு நிலையே யாகும்; மூலப்பிரகிருதியினெடுக்கத்தில் தான் மாத்திரமாய் நிலைத்திருக்கும் புருடனுக்கு ஒரு பொருளாவது விளங்குவதாக (சாங்கிய நூலில்) எவ்விடத்துங் கேட்கப்படாமையால்.

ஆயின், சாங்கியர்களாலும் முற்றறிவுடைமை உடம் பொடு கூடிய கேவலத்தன்மையாக் கொள்ளப்பட்டிருக்கின்ற தென்பையாயின், இதுவே எவ்விடத்தும் நிறைந்த அறிவு ரூப மாகையால் மேலான உறுதிப்பயனுதல் பற்றி இதனின் மேலான உறுதிப்பயனில்லாமையால் பின்னர் எந்தக்காரணத் தால் இது விடப்படுகிறது? சொல்வாயாக.

துணையாகிய பிரகிருதி நீக்கத்தால் அந்த முற்றறிவு நீக்கப்படுகிறதென்பையாயின், அவ்வாருயின் துணையின் அள வினதாக விளங்கும் அறிவு எல்லாப்பொருளையும் அறிய மாட்டாதாம். ஆகவே, முற்றறிவை மறைப்பதாய் நிச்சய மாகப் பெறப்படும் (மலமென்னும்) பொருள் நீங்கவில்லை யென எம்மாற் கருதப்பட்டதே நிலைபெற்றது.

இவ்வாறே, கன்மநாசம் முத்தியெனக்கூறும் பிறமதவாதி களின் கேவலமும் பசுநிலையே என்பது சித்தித்தமை காண்க.

இனி, பிரளய கேவலத்தன்மை எதுவெனில், கூறுதும், கருணைக்கடலான பரமசிவன் நீண்டநாளாகச் சம்சாரந்தி லாழ்ந்து வருத்தமடைந்த ஆன்மாக்களுக்கு இளைப்புநீக்கத்தின் பொருட்டும், கன்மங்களின் பரிபாகத்தின் பொருட்டும், அளவுக் குட்படாத காரியத்தோற்றங்களால் சத்திதேய்ந்திருக்கும் மாயைக்கு சத்தியை விருத்தி செய்வதின் பொருட்டும், அந்த மாயையினிடத்திலேயே எல்லாக்காரியங்களையும் ஒடுக்கி வைத்துக் கொண்டிருக்கிருர். அவ்வாறொடுக்கி வைத்திருக்குஞ்

சமயத்தில் ஆணவமலம், கன்மமலம் என்னும் இருமலங்களும் கெடாமையினுல், அவ்விருமலமுடையவராயும் போகத்திற்குச் சாதனமான கலை முதலிய மாயாகாரியங்கள் நீங்கப் பெற்றவர்களாயும் உள்ள ஆன்மாக்கள் திரும்பச் சிருட்டி தொடங்கும் வரை மாயையின் மத்தியத்தில் இருக்கின்றனர். அவர்களே பிரளய கேவலராவர். அவர்களுக்குக் கன்மநாசமில்லாவிடினும் பிரளயத்தினுலேயே கலை முதலிய தத்துவங்கள் நாசமாயினமையால் பிரளய கேவலத்தன்மை நிகழ்ந்தது.

இந்தப் பிரளய கேவலருள் எவருடைய மலகன்மங்கள் பரிபாகமடைந்திருக்கின்றனவோ அவர்கள் பரமேசுவரனுல் நேராக அப்பொழுதே பரமோக்ஷத்தையடைவிக்கப்படுகின்றனர். எதனுலெனின், அந்தப் பிரளய காலமானது அதிகாரத்திற்கு உரிமையற்றதாகையாலென்க.

அவ்வாருயின், அந்தப் பிரளயகாலத்தில் போக சாதனமின்மையால் போகமற்றவர்களான ஆன்மாக்களுக்குப் போகானுபவத்தால் நிகழக்கூடிய மலபரிபாகம் எவ்வாறு நிகழுமெனில், இந்தக் கேள்வி பொருந்தாது. எவ்வாறெனிற் கூறுகிருேம். மாயாகாரியங்களின் சேர்க்கையாலுண்டான சுக முதலியவற்றின் அறிவுருபமான போகமானது இந்தப் பிரளயத்துக்கு முன்னர் அனுதி முதல் பரம்பரையில் நாசமாத்திரத்தினுலேயே *பயனடைந்திருக்கின்றமையாலென்க.

திரவிய நாசருபமான பிரளயத்தில் மலமென்னுந் திரவியத்திற்கு ஆன்மாவென்னும் வேறு திரவியத்துடன் சேர்ந்திருத்தல் எவ்வாறு கூடுமெனின், பிரளயத்தில் மாயையென்னுந் திரவியம் சத்திருபமாயிருப்பது போல் ஆணவமலமும் சத்திருபமாயிருக்கிறபடியால் கூடுமென்க.

அன்றியும், பிரளய காலத்திலுமிருக்கும் சிவசத்தியின் சேர்க்கையே மலபரிபாகத்திற்குக் காரணமாயிருக்கின்றது.

---

* பயன்—மலபாகத்தை உண்டுபண்ணுதல்

அவ்வாருயின், எல்லா ஆன்மாக்களிடத்தும் சிவசத்தியின் சேர்க்கை இருக்கின்றமையால் ஒரே காலத்தில் எல்லா ஆன் மாக்களுக்கும் மலபரிபாகம் நிகழவேண்டுமென்று கேட்கக் கூடாது; ஒவ்வொரு ஆன்மாக்கள் தோறும் மலசத்திகள் வெவ் வேருய் இன்றியமையாதிருக்கின்றனவாகக் கேட்கப்படுதலா லென்க.

இனி, கன்மங்களின் பாகமானது மலசத்தியின் பாகத் திஞற்ருன் நிகழ்கின்றது. எதஞலெனின். மலமானது எல் லாப் பாசங்களுக்கும் மூலமாயிருத்தலாலென்க.

சிலவிடங்களில் மலத்திற்குப் பரிபாகமில்லாவிடினும் சிவ சத்தியிஞல் கன்மபரிபாகம் உண்டென்றறியத் தகுந்தது. எத ஞலெனின், ★கன்ம ஒப்பு நிகழ்கின்றமையாலென்க.

கன்மங்கள் பக்குவமடைந்திருந்த போதிலும் திதி காலத்தில் அனுபவத்தால் நசிக்கின்றன. அவ்வாருயின், பிரளயத்தில் போகமின்மையால் போகானுபவத்தால் நிகழக் கூடிய கன்மங்களின் நாசம் எவ்வாறு நிகழுமெனின், அஃதுண்மையே. வேறுபாடுள்ளனவாயும் அளவில்லாதன வாயும் உள்ள கன்மபரம்பரைகளுக்குப் பாகமானது முறையாக வும் ஒரே காலத்திலுமாக இரண்டு விதமாய் நிகழ்கின்றது. அவற்றுள், முறையே பாகமான கன்மங்கள் தேகத்துடன் கூடின அனுபவத்தால் நசிக்கின்றன. ஒரே காலத்தில் பாகமான ஏனைய கன்மங்களனைத்தும் சிவானுக்கிரகவிசேடத் தாலேயே நசிக்கின்றன என்றறிந்து கொள்க.

இனி, பரிபாகமடையாத மலகன்மமாயைகளையுடைய சகல ராயிருக்குந் தன்மை எதுவெனில், கூறுகிருேம். மேற்கூறிய வாறு சிருட்டிகாலம் வரை ஒரு தொழிலுமில்லாமல் ஒடுங்கி

---

★ சிவபுண்ணியத்தால் இருவினையொப்பு நிகழ்ந்து அதனுல்மலபரிபாகம் நிகழுமென்று கூறுமிடங்களை இவ்விடத் தில் எடுத்துக் காட்டியதென்க.

யிருக்கும் அவத்தையினல் இளேப்பாறுதலேயடைந்தவர் களாயும் திரும்பவும் போகானுபவத்திற்கு உரிமையான நிலே யையுடையவர்களாயும் உள்ள ஆன்மாக்களே அறிந்து, மிகவுங் கருணேயுடன் கூடிய பரமசிவன் அனந்தேசுவரரிடம் வைக்கப் பட்ட தனது சத்தியால் பின்னர்க் கூறப்படும் மாயாதத்து வத்தைக்கலக்கஞ் செய்து அசுத்தாத்துவ சிருட்டியால் கலே முதலிய போகசாதனப் பொருட்கூட்டங்களேயடைந்தவர் களான பசுக்கூட்டங்கள் சகலரெனப்படுகின்றனர். எதனு லெனின், அந்தப்பசுக்கள் அப்பொழுது மலம், கன்மம், மாயை என்னும் மூன்றுபாசங்களேயுடையராயிருத்தலா லென்க.

இந்தச் சகலர் விஷயத்தில் சிருட்டியின் ஆரம்பத்தில் மண்டலி முதலியோர்கள் மாயாகருப்பாதிகாரத்தின் பொருட்டு அபரமந்திரேசுவரத் தன்மையில் பரமேசுவரனுல் நேராகவே அனுக்கிரகஞ் செய்யப் பெற்றவர்களாயும், அனந்தேசுவரரால் *ஆதிவாகிக தேகத்தையடைந்தவர்களாயுமிருந்து சகலர்க ளாக அறியப்படுகின்றனர். ஆயினும் இவர்கள் பசுத்தன்மை யுடன் கூடினவர்களாக எண்ணப்படுகிருர்களில்லே; ஆன்ம சிவன்களென்று முன்னரே கூறப்பட்டிருக்கின்றனராதலால்.

அவ்வாருயின், அதிகாரிகளனேவருக்கும் விந்து சம்பந்த மான தேகச் சேர்க்கை முன்னர்க் கூறப்பட்டிருக்கவும் இப் பொழுது மாயாசம்பந்தமான தேகச் சேர்க்கையுங் கூறுதல் எவ்விதங் கூடுமெனில், இந்த மண்டலி முதலியோர்களுக்கு அனுக்கிரக காலத்திலேயே விந்து சம்பந்தமான தேகச் சேர்க்கை உண்டாகின்றதாக நிச்சயிக்கப்படுகிறது. அந்தத் தேகம் மிகவும் சூக்குமமாகையால் அது உள்ளேயிருந்தாலும், சகல பசு வர்க்கங்களுடைய அதிகாரத்திற்கு உரியதான தூல மான மாயா சம்பந்த தேகச்சேர்க்கையையும் பற்றுக்கோடாக விரும்புகின்றது அந்த மாயா சம்பந்தமான தேகமானது மோகத்தையுண்டுபண்ணக் கூடியதாயிருப்பினும் போகத்தை

---

* ஆதிவாகிகதேகம் – போகானுபவத்தால் கன்மங்களே நாசம் செய்யத்தக்க சூக்கும சரீரம்

யுண்டுபண்ணும் விந்து சம்பந்தமான தேகத்தின் சேர்க்கை யிருத்தலால், மோகத்தையுண்டுபண்ணுந் தன்மையைவிட்டுப் போகத்தையேயுண்டுபண்ணுவதாய் போதக தேகத்துடன் ஏக மாகவே விளங்குகின்றது. ஆதலால் மாயாசம்பந்தமான தேக மிருத்தல் பற்றி ஒருவிதமான குற்றமில்லாமை காண்க. இந்த நியாயமானது சகலத்தன்மையுடன் அனுக்கிரகஞ் செய்யப் பட்டவர்களுக்கும் அதிகாரஞ் செய்யும் தகுதி வாய்ந்த மந்திரேசுவரர்களுக்கும் பொதுவாகும்.

இன்னுமிந்தச் சகலர் விஷயத்தில் சிலர் பக்குவமடையாத மலத்தன்மையுடையவர்களாயிருந்த போதிலும், பாவகன்மங் கள் தசித்து மிகப்புண்யகன்மமுடையவர்களாய், அளவில்லாத அறிவின் மேம்பாட்டிற்குக் காரணங்களான சரீர முதலியவற் ேறாடு சேர்க்கப்பட்டவர்களாய் அங்குட்ட மாத்திர முதல் காலாக்கினி முடிவான புவனங்களிலே அதிபதிகளாயிருந்து *பசு சாத்திரங்களைச் செய்பவர்களாக ஸ்தாபனஞ்செய்யப்பட் டிருக்கின்றனர்.

எஞ்சிய ஆன்மவர்க்கங்கள் மூன்றுவிதமான பாசங் களுடன் கூடியிருத்தலால் அவரவர்களுடைய கன்மங்களை அனுசரித்த சரீரங்களின் சேர்க்கையால் சில பொருள்களை அறியும் சிற்றறிவுடன் கூடினவர்களாய் அனேகவிதமான யோனிகளில் பிறந்து சுகதுக்கானுபவரூபமான போகங்களை அனுபவிக்கும்படி ஏவப்படுகின்றனர். இவர்களே சமுசாரி களான சகலர்கள் என்று கூறப்படுகின்றனர்.

நான்காவது பசு பரிச்சேதம் முற்றிற்று

[பதிப்பாசிரியர் குறிப்பு:— ஸ்ரீ சூரிய சிவாசாரியாரால் இயற்றப்பட்ட சைவ சித்தாந்த பரிபாஷை என்னும் இந்த நூலின் முதல் மூன்று பரிச்சேதங்கள் முறையே 1982, 1983-84, 1985 ஆண்டு மலர்களில் பிரசுரிக்கப்பட்டன. நான்காவது பரிச்சேதம் இந்த ஆண்டு மலரில் பிரசுரிக்கப்படு கிறது. எஞ்சிய பகுதிகள் அடுத்து வரும் ஆண்டு மலர்களில் தொடர்ந்து பிரசுரிக்கப்படும்].

---

* பசு சாத்திரம்—தருக்கம் வியாகரணம் முதலியன,

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# கம்பன் காட்டிய கண்ணுதற் கடவுள்—5

பேராசிரியர், Dr. பெ. கு. வரதராசன், M.A., B.O.L., B.T., Ph.D.,
கிருஷ்ணகிரி

சிவபெருமானைச் சிறப்பித்துக் கம்பன் தன் காவியத்துள் இராமகாதையில் கூறும் செய்திகள் பலவற்றை முன்பு வெளி வந்த நான்கு கட்டுரைகள் சிறப்பிக்கின்றன. ஐந்தாவதாக வரும் இக்கட்டுரை மேலும் சில அரிய கருத்துக்களைக் கூற முனைகின்றது.

முதல் நான்கு கட்டுரைகளும் கம்பனது பரந்துபட்ட சைவப்பற்றினை வெளிப்படுத்தும் நிலையில் கவிமொழியாக வந்துள்ள செய்திகளையும், காவியப்பாத்திரங்கள் வழியாக வந்த செய்திகளையும், காண்டம் வழியாக அன்றி வந்த செய்திகளையும் தொகுத்துத் தந்தன. இனி அவ்வாறின்றி ஒவ்வொருவருடைய வாய்மொழியாக வந்த செய்திகளைக் காண்ட முறைப்படித் தொகுத்துக் கூறும் முறையில் வரும் கட்டுரைகள் அமையப்பெறும் என்பதனை இக்கட்டுரையாசிரியராகிய யான் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வமைப்பு முறை தொடர்ந்து சிவஞானபூஜாமலரைப் படித்து வரும் வாசகர்களுக்கு முன்பின் திகைப்பின்றி முறையாகச் செய்திகளை நினைவிற் கொள்ள உதவும். அன்றியும், அடுத்து ஆசிரியர் எழுதப்போகும் கட்டுரை யாதாகவிருக்கும் என்ற வாசகர்களின் குழப்பத்தையும் தவிர்க்கும்.

நான்காவது கட்டுரையின் தொடக்கத்தில் குறிப்பிட்டது போல கம்பர்தம் கவிக்கூற்ருக அமைந்த பாடல்கள் நூற்று அறுபத்தெட்டாகும். அவையாவன:—

| | | |
|---|---|---|
| பால காண்டம் | ... | 20 பாடல்கள் |
| அயோத்தியா காண்டம் | ... | 10 பாடல்கள் |
| ஆரண்ய காண்டம் | ... | 20 பாடல்கள் |
| கிட்கிந்தா காண்டம் | ... | 6 பாடல்கள் |
| சுந்தர காண்டம் | ... | 28 பாடல்கள் |
| யுத்த காண்டம் | ... | 84 பாடல்கள் |

———

ஆக காண்டங்கள் ஆறுக்கும் மொத்தம் - 168 பாடல்கள்.

———

இவற்றில் பால காண்டத்தில் ஆறு பாடல்களும், ஆரண்ய காண்டத்தில் ஒன்றும், சுந்தர காண்டத்தில் நான்கும் முதல் நான்கு கட்டுரைகளில் இடம் பெற்றுள்ளன. மற்றுமுள்ள நூற்று ஐம்பத்தேழு பாடல்களையும் தொடர்ந்து வரும் கட்டுரைகளில் விளக்கக் காணலாம்.

'சிவஞான பூஜா மலர்' வாசகர்களுக்கு மேலுமொரு இன்பச் செய்தியினைக் கூறிக்கொள்ள ஆசைப்படுகின்றேன். கம்பனிடத்தில், அவனோடு ஒன்றுறக் கலந்து நின்ற கண்ணுதற் பெருமானை அடியேன் வெளிப்படுத்த விரும்பியதறிந்து வில்லிபால் மறைந்துள்ள சிவபெருமானும் தன் பெருமைகளை வாசகர்களுக்கு அறிவிக்க ஆங்கீரஸ ஸ்ரீலஸ்ரீ S. வெங்கடேச சர்மா அவர்கள் துணை நின்றுள்ளார்கள். அவர்கள் தம் பணி சிறக்க எந்தை சிவபெருமானை இறைஞ்சுகின்றேன்.

பால காண்டம் திரு அவதாரப் படலத்தில், 'வசிட்டன் தசரதன் புதல்வர்களுக்குச் சவுள உபநயனங்கள் நடந்தபின் பல கலைகளையும் பயிற்றுவிக்கின்ருன்' என்ற செய்தி வருகின்றது. சௌளம் என்பது குடுமி வைக்கும் சடங்கு. முடி என்ற பொருளுள்ள 'சூடா' என்ற வடமொழியின் தத்திதமாகிய

'சௌடம்' என்பது டகர ளகாரங்கட்கு அபேதத்தால் 'சௌளம்' என வழங்கும். அது 'சவுளம்' எனப் போலியா யிற்று என்பர் வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார்.

பயிற்றுவிக்கும் வசிட்டனைக் கம்பன் சிவபெருமானுக்கு உவமையாகக் காட்டுகிறான். கலைகளையும், கலைகளைக் கற் பிக்கும் ஆசிரியனையும் கண்டபோது கம்பனுக்குச் சிவபெரு மானின் நினைவு தோன்றுகின்றது. அந்நினைவிற் முகிழ்த்த பா வருமாறு,

சவுளமொ டுபநயனம் விதிமுறை தருகுற்று
இவளவ தெனவொரு கரைபிறி திலவா
உவள்தரு மறையினொ டொழிவறு கலையும்
தவள்மதி புனையர னிகர்முனி தரவே.

(திரு அவதாரப் படலம் - பாடல் - 126)

ஒப்புமையறிதற்குக் காரணமாய் நிற்கும் பொருள் உவ மானம் எனவும், அதனால் உவமிக்கப்படும் பொருள் உவ மேயம் எனவும் தண்டியாசிரியர் கூறுவர். உவமானம் என் பது உவமேயத்தினும் சிறப்புடையது என்பதனை அறிந்தே கம்பன் சிவபெருமானை வசிட்டனினும் உயர்த்திக் காட்ட ''வெண்ணிறமான சந்திரனைத் தரித்த சிவபெருமானையொத்த வசிட்டமுனிவன்'' எனக்கூறினான்.

கலைகளைக் கற்பிக்கின்ற நல்லாசானாகிய வசிட்டமுனி வனைச் சிவபெருமானுக்கு உவமை கூறிய கம்பன் கலைகளை விரும்பிக் கற்போரைக் கந்தனென உவமை காட்ட மறந்து விடவில்லை என்பதனையும் கீழ்வரும் அடிகள் காட்டுகின்றன.

'பந்தினை யிளையவர் பயிலிட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்'

(நாட்டுப்படலம் - பாடல் 48)

மிதிலை மாநகரின் அரிய காட்சிகளைக் கோசிகமுனிவன் பின் சென்ற இராமபிரானும் இளவல் இலக்குவணனும்

கண்டு மகிழ்கின்றனர். அக்காட்சிகளுள் ஒன்று மிதிலைமாநகரின் இள மைந்தர்கள் சூரியனைப் போன்ற ஒளி பொருந்திய மேனியர்; வேண்டுவார் வேண்டியதை ஈயும் நெஞ்சினர்; ஈசன் கண்ணிலிருந்து வரும் தீக்கு இலக்காகி எரிந்திடாத மன்மதனைப் போன்றவர்கள்; செஞ்சிலைக் கரத்தினர்; மாதர் தம் புலவிகள் திருந்திச் சிவந்த குஞ்சியர் என்றெல்லாம் இளைஞர் கூட்டத்தினைக் கம்பன் வருணித்துக் காட்டுகின்றான். அவ் வருணனை,

> வெஞ்சுட ருருவிற் றன்ன மேனியர் வேண்டிற் றீயும்
> நெஞ்சின ரீசன் கண்ணி னெருப்பரு வனங்க னன்னார்
> செஞ்சிலைக் கரத்தர் மாதர் புலவிகள் திருந்திச் சேந்த
> குஞ்சியர் சூழ நின்ற மைந்தர்தங் குழாங்கள் கண்டார்.
>
> (மிதிலைக்காட்சி - பாடல் 20)

என்பதாம்.

இப்பாடலில் வரும் 'ஈசன்கண்ணின் நெருப்பரு அனங்கன் அன்னார்' என்ற தொடர் சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலிருந்து வரும் தீப்பொறிகளால் அழிந்து போகாத மன்மதனைப் போன்றவர்கள் என்ற கருத்தைத் தருகின்றது.

> 'புண்ணிய னேஎன்று போற்றி
> செயாது புலன் வழியே
> நண்ணிய னேற்கினி யாதுகொ
> லாம்புகல் என்னுள் வந்திட்
> டண்ணிய னேதில்லை அம்பல
> வாஅலர் திங்கள் வைத்த
> கண்ணிய னேசெய்ய காமன்
> வெளுப்பக் கறுத்தவனே.'
>
> (கோயில் திருப்பண்ணியர் விருத்தம் - பாடல் - 38)

என்று நம்பியாண்டார்நம்பி காமதகனத்தை முரண்தொடையில் வைத்துப் போற்றிப் புகழுவதையும்,

வரித்தடம் திண்சிலை மன்மதன்
　　ஆதலும் ஆழிவட்டம்
தரித்தவன் தன்மகன் என்பதோர்
　　பொற்பும் தவநெறிகள்
தெரித்தவன் தில்லையுட் சிற்றம்
　　பலவன் திருப்புருவம்
நெரித்தலும் கண்டது வெண்பொடி
　　யேஅன்றி நின்றிலவே.

(கோயில் திருப்பண்ணியர் விருத்தம்—பாடல் 44)

எனச்சிவபெருமான் காமனைக் கண்டதற்கும் காமன் நீருக மாறியதற்கும் இடைவெளியே காட்டாத சிறப்பினையும் நம்பியாண்டார்நம்பி காட்ட கம்பன் அறிந்த திறத்தினை நாம் காணமுடிகிறது.

''எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்''

(கார்முகப் படலம்-பாடல் 34)

என்ற கம்பனது வாக்கும் நம்பியாண்டார்நம்பி பால் கம்பர் கொண்ட ஈடுபாட்டினைப் புலப்படுத்துவதாகும்.

கம்பனே, தம் பாடலில் சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணுக்கு எரிந்துபோகாத மன்மதனைப் போன்றவர்கள் என மிதிலை இளைஞர் கூட்டத்தினரை இல்பொருளுவமையணி கொண்டு சிறப்பிக்கின்றன். ஈண்டுக்கம்பன் சிவபெருமானுடைய மறக்கருணைத் திறத்தினை மறவாது உளங்கொண்டு இக்கருத்தினை மேற்போந்த பாடலில் அமைத்துள்ளான் எனக் கொள்ளுதல் தகும்.

ஸ்ரீ இராமபிரான் மிதிலைக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தான். கோசிகன் விரும்பியவாறு குறிப்புணர்ந்து சிவ தனுசினை வளைத்தான். சீதாதேவியினைத் திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்பினையும் பெற்றான். அன்றிரவு இராமனது உள்ளத்தில் காமமயக்கம் தோன்றியது. அம்மயக்கம்

இராமனை உறக்கம் கொள்ளச் செய்யாது வருத்தியது. அவ் விரவு ஒழியத்தோன்றும் சூரிய உதயத்தைக் கம்பன் வருணிக் கின்ருன். அப்பாடல்,

> ததையுமலர்த் தாரண்ண லிவ்வண்ண
> மயலுழந்து தளருமேல்வை
> சிதையுமனத் திடருடைய செங்கமல
> முகமலரச் செய்ய வெய்யோன்
> புதையிருளி னெழுகின்ற புகர்முகயா
> ஊயினுரிவைப் போர்வை போர்த்த
> உதையகிரி யெனுங்கடவு ணுதல்கிழித்த
> விழியேபோ லுதயஞ் செய்தான்.
>
> (மிதிலைக் காட்சிப் படலம் - பாடல் 150)

என்பதாம்.

சிவபெருமானை உதயகிரியாகக் கம்பன் முதலில் உருவகப் படுத்துகின்ருன். அப்பெருமானின் நெற்றிக்கண்ணை உவமை கூறுகின்ருன். உருவகமாகக் கூறப்பட்ட சிவபெருமான் யானைத் தோலைப் போர்வையாக அணிந்து கொண்ட அப் பெருமானது வீரச் செயலையும் குறிப்பிடுகின்ருன்.

இராமபிரானது சோகநிலையைமாற்றக் கூறிய சூரிய உதயத்தைச் சிறப்பாக விளக்க வந்த கம்பன் தன்னுள்ளக் கிடக்கையில் ஊறிக் கிடக்கும் சிவபெருமானை மறந்தானில்லை.

கார்முகப் படலத்தில், இராமபிரான் முன்பு வில்லை வைத்து 'இதனை வளைப்பவருக்கே சீதை மணமகளாவாள்' என்ற சனகனது முடிவினைப்பற்றிப் பெண்கள் சிலர் தமக்குள் பேசிக் கொள்ளுகின்றனர். சீதையின் திருமணத்தை முடிக்க வேண்டுமென சனகன் விரும்பியிருப்பானுயின் இராமனைக் கண்டதும் திருமண ஏற்பாடுகளைச் செய்திருக்க வேண்டும். அவ்வாறின்றி இவன் முன்பு வில்லை வைத்து நாணேற்ற வேண்டுமென்று கூறுவது அறியாமையே எனக் கூறுகின்ற னர்.

அவ்வில் சிவபெருமானிடமிருந்து பெறப்பட்டது என்பதை அறிவிப்பது போலக் கம்பன்

'வெள்ள மணிந்தவன் வில்லே'

(கார்முகப் படலம் - பாடல் 30)

என்ற தொடரால் குறிப்பிடுகின்றான்.

இத்தொடர் பகீரனது முயற்சியால் ஆகாய கங்கை இவ் வுலகிற்குக் கொண்டுவரப் பட்டதையும், அக்கங்கைப் பிர வாகத்தைச் சிவபெருமான் தன் சடாமுடியிலேற்றுக் கொண்ட செய்தியையும் குறிப்பிடுகிறது.

தசரதச் சக்கரவர்த்தி தன் சேனைகளுடன் சந்திர சைல மென்னும் மலையைப் பற்றிக் கூறும் பகுதி வரைக்காட்சிப் படலமென்பதாம். (வரை—மலை)

சேனைகள் செல்லும் காட்சிகளைச் சொல்லிச் செல்லும் கம்பன் ஒரு யானையின் வருணனையைக் குறிப்பிடுகின்றான். அவனது வருணனைக்கு இலக்கான யானை உடல் முழுவதும் சேனைகள் செல்லுதலால் எழுந்த புழுதி படிந்து வெண்ணிற மாக விளங்குகிறது. அந்த யானை தனது நீண்ட தும்பிக் கையினால் தனது வலப்பக்கத்தில் படிந்த புழுதியைத் துடைத் துக் கொள்ளுகிறது. புழுதி நீக்கப்பட்ட அப்பகுதி யானையின் இயல்பான கருநிறம் உடையதாக விளங்குகிறது. யானை இருபுறமும் படிந்துள்ள புழுதியினை அகற்றுமல் வலப்பகுதியி லுள்ள புழுதியை மட்டும் அகற்றிக் கொண்டதால் யானையில் வலது பாகம் கருநிறமாகவும் இடது பாகம் வெண்ணிறமாக காட்சியளிக்கின்றது.

இக்காட்சி கம்பனது உள்ளத்தில் சிவபெருமான் நினை வைத் தோற்றுவிக்கின்றது. சிவபெருமான் வலப்பாகத்தே திருமாலைப் பெற்றுத் திகழும் சங்கரநாராயணனைப் போல அந்த யானை தோற்றமளிக்கிறதெனத் தன் குறிப்பினை ஏற்றிப் பாடுகின்றான் கம்பன்.

மண்ணுற விழுந்துநெடு வானுற வெழுந்து
கண்ணுதல் பொருந்தவரு கண்ணனின் வருங்கார்
உண்ணிற நறும்பொடியை வீசியொரு பாகம்
வெண்ணிற நறும்பொடி புனைந்தமத வேழம்.

(வரைக்காட்சிப் படலம் - பாடல் 19)

என்பது.

இதனைப் படித்துச் சுவைக்கும் பல சைவ அன்பர்களுக்கு இதுபோன்ற வேறு ஒரு செய்தியினையும் கூற நான் கடமைப் பட்டவனாவேன். அச்செய்தி,

"சேரமான் பெருமாள் நாயனார் நகர்ப்பெருவீதியில் சென்று கொண்டிருக்கின்றார். எதிரே ஒரு வண்ணான் உவர் மண்ணால் ஊறி உலர்ந்து நீறுபூசியவனைப் போல வருகின்றான். அவனைக் கண்ட சேரர்க்கு அடியார் நினைவு வருகிறது. அவ்வண்ணானைச் சிவனடியார் எனக்கருதி அவனை வணங்கினார் மன்னர். வண்ணான், "அடிவண்ணான்" என, சேரமன்னனும், "அடிச்சேரன்" என்றார். இந்நிகழ்ச்சியினை நாரையூர் நம்பியாண்டார் நம்பி, தம் திருத்தொண்டர் திருவந்தாதியில் நயந்தோன்றப் பாடிக் காட்டுகின்றார்.

அப்பாடல் வருமாறு,

மன்னர் பிரான்எதிர் வண்ணான்
உடல்உவர் ஊறிநீறார்
தன்னர் பிரான்தமர் போல
வருதலும் தான் வணங்க
என்னர் பிரான் "அடிவண்ணான்"
என "அடிச்சேரன்" என்னும்
தென்னர் பிரான் கழறிற்றறி
வான் எனும் சேரலனே.

(திருத்தொண்டர் திருவந்தாதி-பாடல் 44)

வரைக்காட்சிப் படலத்திலேயே, கம்பன் சந்திரசைலம் என்னும் மலையைப் பதினான்கு பாடல்களினால் புகழ்ந்து பாடு

கின்ருன். பலவாருக அம்மலையைச் சிறப்பித்துப் பாடி இறுதியாக ஈசன் நினைவு தோன்றப் பாடிமுடிக்கின்ருன். அப்பாடல்,

நிலமகட் கணிக னென்ன
நிரை கதிர் முத்தஞ் சிந்தி
மலைமகள் கொழுநன் சென்னி
வந்து வீழ் கங்கை மான
அலகில்பொன் னலம்பி யோடி
யாரம்சே ரருவி மாலை
உலகளந் தவன்றன் மார்பி
னுத்தரீ யத்தை யொத்த.

(வரைக்காட்சிப்படலம் - பாடல் 45)

என்பதாம்.

சந்திரசைலமலை உலகளந்த திருமாலைப் போலவும் அம்மலையினின்றும் விழும் அருவி அத்திருமால் மார்பிலணிந்துள்ள உத்தரியம் போன்றும் உள்ளது என்பதே கம்பன் காட்டும் தற்குறிப்பேற்ற உவமையணியாகும். அம்மலையருவி சிவபெருமானது சடாமுடியில் இடங்கொண்ட கங்கையை ஒத்தது என்று கம்பன் சுட்டிக்காட்டும் நுட்பத்தை நாம் சுவைக்காது இருக்க முடியாது.

புனல் விளையாட்டுப் படலத்தில், ஆடவரும், மகளிரும் நீரில் மூழ்கி விளையாடும் காட்சியினைக் கம்பர் காட்டுகின்ருர். அக்காட்சியானது இந்திரனது செல்வமெல்லாம் அரம்பையர் கூட்டத்துடனே திருப்பாற்கடலில் செல்லுவது போலத் தோன்றுகின்றன. அவ்வாறு செல்லக் காரணம் துருவாச முனிவன் கோபத்தால் இந்திரனைச் சபித்ததேயாகும். அம்முனிவனது தோற்றம் சிவபெருமானையொத்தது எனக்கம்பன் கூறுகின்ருன். முனிவனது கோபத்தால் இந்திரனது செல்வம் அழிகின்றது. அழியும் பொழுது அழித்தற் கடவுளாகிய சிவனை மறவாமல் சிறப்பித்துச் சிந்திக்கின்ருன் கம்பன் என்பதனைக் கீழ்வரும் பாடல் அறிவிக்கின்றது,

அங்கவர் பண்ணை நன்னீ ராடுவா னமைந்த தோற்றம்
கங்கைவார் சடையோ னன்ன மாமுனி கனலமேனுள்
மங்கையர் கூட்டத் தோடும் வானவர்க் கிறைவன்
செல்வம்
பொங்குமாகடலிற் செல்லுந் தோற்றமே போன்றதன்றே.
(புனல் விளையாட்டுப் படலம்-2)

அடுத்து உண்டாட்டுப் படலத்தில் சேனைகள் மதுவருந்தி மகிழ்ந்து நிலவொளியில் திளைத்துக் கிடக்கின்றன. அந்நில வொளியில் ஆறுகள், மலைகள், கடல்களனைத்தும் வெண்ணிற மாகக் காட்சியளிக்கின்றன. கம்பரது கற்பனைக்கு ஆறெல் லாம் கங்கை; ஆழியோ திருப்பாற்கடல்; குன்றெலாம் ஈறி லான் கயிலை - ஆகின்றன. இக்கற்பனையை வடித்துக் காட் டும் பாடல்.

ஆறெலாங் கங்கையே யாயவாழிதாம்
கூறுபாற் கடலையே யொத்த குன்றெலாம்
ஈறிலான் கயிலையே யியைந்த வென்னினி
வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே.
(உண்டாட்டுப்படலம் - பாடல் 3)

என்பதாம்.

இப்பாடலில் 'ஆறெலாம் கங்கையே' என்றுற்போல 'குன் றெலாம் கயிலையே' என்று கூருது குன்றெலாம் 'ஈறிலான் கயிலையே' என்று பாடினுனே கம்பன்-அந்த 'ஈறிலான்' என்ற தொடராலன்றே கம்பனது சைவப் பற்று வெளிப்படுகிறது.

தசரதனும், எதிர் கொண்டழைத்த சனகனும் மிதிலையை நோக்கிச் செல்லுகின்றனர். இருவரையும் இராமன் எதிர் சென்று அழைத்து வர நினைக்கின்ருன். அவ்விராமனது தோற்றத்தைக் கூறவந்த கம்பன், 'தனக்கு உவமை கூற வேறுயாருமில்லாமையால் தன்னையே ஒத்திருப்பவனுகிய இராமன் —நெருப்பைப் போன்ற சிவந்த மேனியையுடைய சிவபெருமானது பொன்னிறமான நீண்ட வில்லை ஒடியும்படி வளைத்த உயர்ந்த தோள்களையுடையவன்' எனக்கூறுகின்ருன்,

இராமன் ஒடித்த வில்லின் சிறப்பைக் கூறிப் பின் வில்லை யாரிடமிருந்து பெற்ருர்களோ—(சிவபெருமான்) அவனது சிறப்பினையும் கூறி இவ்விரண்டின் சிறப்பினுல் இராமனது தோள்களுக்குச் சிறப்புக் கூறி அவ்வாருன வலிமையுடைய தோள்களையுடையவன் எதிர் கொண்டு அழைக்கச் செல்லு தலால் தந்தைக்கும், சனகனுக்கும் சிறப்பூட்டுகின்ருன் கம்பன் என்பதைக் கீழ்வரும் பாடல் நயமாகக் காட்டுகிறது.

இன்னவா றிருவரும் மினியவா றேகவத்
துன்னுமா நகரினின் றெதிர்வரத் துன்னினுன்
தன்னையே யனையவன் றழலையே யனையவன்
பொன்னின் வார் சிலையிறப் புயநிமிர்த் தருளினுன்.

(எதிர்கொண்ட படலம் - பாடல் 19)

தந்தையையும் சனகரையும் எதிர் சென்று வணங்கிய இராமபிரான் தனது தாய்மார்களையும் வணங்கச் செல்லுகின் ருன். அவ்வாறு வணங்கச் செல்லும் இராமபிரானை மீண்டும் கம்பன், 'கற்றைவார் சடையினுன் கைக்கொளுந் தனுவிறக் கொற்ற நீள்புய நிமிர்த்தருளுமக்குரிசில்'

(எதிர்கொள் படலம் - பாடல் 25)

எனப் பாராட்டி இராமனைக் காட்டுமுன் சிவனை நினைக்கச் செய்கின்ருன்.

இது போலவே கோலங்காண்படலத்தில் சீதைக்கு அணி கலன்களைத் தோழியர் அணிவிக்கின்றனர். அவ்வணிகலன் களுள் ஒன்ருன காதணி - குழையை அணிவிக்கும் நிலையினைச் சொல்லும் கம்பன், 'சீதாதேவி, தன்னை அன்று கண்டு உளங் கவர்ந்த அவனே அன்றிவேறு யாரோ வில்லை ஒடித்தது என்று எண்ணி மனம் ஊசலாடுதலுற்ருள். அம் மனம் போல ஊசலாடும் குழையினைக் காதிலணிவித்தனர்' எனக் கூறுகின் ருன். இங்கும் சிவனையும்—அவன் வைத்திருந்த வில்லையும் அவ்வில்லை வளைத்த இராமனையும், 'வெள்ளத்தின் சடிலத்தான் தன் வெஞ்சிலையிறுத்த வீரன்' எனக்கம்பன் பாராட்டுகின்ருன்.

(கோலங்காண்படலம் - பாடல் 6)

இராமபிரான் திருமண மண்டபத்திற்குச் செல்லுமுன் பலவித அணிகளினால் அழகுபடுத்தப் படுகின்றான். அவ்வணிகளுள் வீரபட்டமும் திலகமும் அணிந்த பின் இராமபிரான் கொண்ட அழகுக்கோலத்தைக் கம்பன் வருணிக்கின்றான்.

சிவபெருமான் கரிய விடத்தைக் கண்டத்தேயுடையவன்; கணிச்சி என்னும் ஆயுதப் படை கொண்டவன்; நீண்ட சடா முடியை யுடையவன்; ஒரு மதியையும் தலையிற் சூடியவன். மதியைச் சூடிக் கொண்டதால் மற்ற சூரியன், அக்கினி, போன்ற ஒளியினங்களை எல்லாம் இராமன் தரித்துக் கொண்டது போல வீரபட்டமும் திலகமும் அணிந்தான்' இக் கருத்தமைந்த பாடல் வருமாறு,

கார்விடக் கறையுடைக் கணிச்சி வானவன்
வார்சடைப் புடையினோர் மதிமிலைச்சதான்
ஆர் சுடர்க் குலமெலாஞ் சூடி னானென
வீரபட் டத்தொடு திலகமின்னவே.

(கடிமணப்படலம் - பாடல் 54)

இராமபிரானது திருமணக் கோலத்தைக் காணவரும் தம்பதிகளைப் பட்டியல் போட்டுக் காட்டும் கம்பன் சிவபெருமானையும் உமாதேவியையும் மறந்துவிடவில்லை என்பதை,

இந்திரன் சசியொடு மெய்தி னானிளஞ்
சந்திர மௌலியுந் தைய லாளுடன்
வந்தனன் மலரயன் வாக்கி னாளுடன்
சுந்தரம் புகுந்தன னழகு காணவே.

(கடிமணப் படலம் - பாடல் 83)

என்ற பாடலால் விளக்கிக் காட்டுகின்றான்.

இறுதியாகப் பாலகாண்டத்துள் பரசுராமப் படலத்தில் பரசுராமனது சினம் மேலோங்கிய தோற்றத்திற்குச் சிவனை உவமை கூறுகின்றான் கம்பன்.

'வலிய தோள்கள் எட்டுத்திசைகளிலும் பரவ, எல்லாப் பக்கங்களிலும் தன் சடாமுடி விரிய, சந்திரன் தனதருகே யிருக்க, பஞ்சபூதங்களும் அழிகின்ற கற்பத்தின் அந்தக் காலத் திலே நடனமாடுகின்ற உமாதேவியின் கொழுநனை உருத்திர மூர்த்தி' எனச்சிவபெருமானைச் சிறப்புற வருணித்து அச்சிவ னுக்கு ஒப்ப அயோத்தி செல்லும் தயரதன் முன் பரசுராமன் தோன்றினன் எனக்கம்பன் கூறுகின்றான்.

ஒரு பாடலில் ஒன்றிரண்டடிகளால் சிவனைச் சுட்டிக்காட் டும் கம்பன், பாடல் முழுதும் (ஒரு சீர் நீங்க) சிவபெருமானைப் பற்றியே கூறும் நயத்தினை நாம் வியவாதிருக்க முடியுமோ! அப்பாடல் வருமாறு.

பாழிப்புய முயர்த்திக்கிடை யடையப்புடை படரச்
சூழிச்சடை முடிவிண்டொட வயல்வெண்மதி தோற்ற
ஆழிப்புன லெரிகானில மாகாயமு மழியும்
ஊழிக்கடை முடிவிற்றனி யுமைகேள்வனை யொப்பான்.

(பரசுராமப்படலம் - பாடல் 11)

இதுகாறும் கூறியவற்றால் கம்பன் சிவபெருமானை வசிட்டன், கோபங்கொண்ட துருவாச முனிவர், பரசுராமன் ஆகியவர்களுக்கு உவமை கூறுமுகத்தான் சிவனை நினைப்பிக் கின்றான். மிதிலையில் காணும் இளைஞர்கள் எரியாத மன்மதன் களாக விளங்குகின்றனர் எனக்குறிப்பிடும் நிலையில் சிவபெரு மானை நினைவுகூரச் செய்கின்றான். இராமபிரான் ஒடித்த வில்லையும் அவ்வில்லுக்குரிய ஏற்றந்தரும் வகையில் சிவபெரு மானையும் கம்பன் புகழுகின்றான். சந்திரசைல மலையில் தோன் றும் அருவிகள் சிவபெருமான் சடாமுடியில் தோன்றும் கங் கையை ஒத்தன எனக்கூறிச் சிவபெருமானைக் கம்பன் அறி முகம் செய்கின்றான். சந்திரசைலத்தின் வழியாகச் செல்லும் சேனைகளில் யானையொன்று ஒருபுறம் கறுப்பாகவும் மறுபுறம் வெளுப்பாகவும் இருப்பதற்கான காரணத்தைக்கூறி, அவ் யானையின் தோற்றம் சங்கரநாராயணனைக் காட்சியளிக்

கிறது என்று வருணித்துப் பாலகாண்டத்துள் கூறிய செய்திகள் இக்கட்டுரையோடு நிறைவுறுகின்றன. அவன் அடுத்துக் கூறும் அயோத்தியா, காண்டத்துள் வரும் பத்துப் பாடல்களினுல் ஆகிய செய்திகளைத் தொடர்ந்து வரும் ஆருவது கட்டுரை விளக்கிக்காட்டும்.

கண்ணுதலான் பெருமைகாட்டும் கம்பன் வாழ்க!

கன்னித்தமிழ் வாழ்க!!

சிவம்

திருச்சிற்றம்பலம்

# தகராலய ரகசியம் - ஓர் அறிமுகம்.

(சைவசமயக்காவலர், சைவசமய சண்டமாருதம், சைவ சித்தாந்தச் செம்மல், நக்கீரன் வழியடிமை,

பி. மா. சோமசுந்தரனார், இராணிப்பேட்டை)

## 1. முன்னுரை

தமிழில் மரபு என்று ஒன்று உள்ளது. இன்ன சொல்லை இன்ன இடத்தில் பெய்து உரைக்க என்பதுவே அது, பூனைக் கன்று, பசுவின் குட்டி என்னாது பூனைக்குட்டி, பசுவின் கன்று என்று கூறுக என்பது மரபு. உள்ளமும் செவியும் இனிக்கப் பேசுதல் இயம்புதல். ஒன்றையே மீட்டும் மீட்டும் கூறுதல் விளம்புதல். சோறுதின்றாயா என்பது பிழை. சோறு உண்டாயா என்பதுவே மரபு. இம்மரபு புலமைக்குறைவால் மறைந்து வருகின்றது.

கடவுள் (கடவு+உள்) = உயிர்களின் உள்ளக்குகை தோறும் இருந்து இச்சை, ஞானம், கிரியை என்பவற்றை இயக்கிவரும் பெரிய பொருள். இச்சொல்லுக்கு வேறு பொருள் கூறுதல் சிறப்பிற்றன்று. இங்ஙனம் ஆய பெரிய பொருள் ஒன்றே. கடவுளர் பலர் என்றால் உயிர்கள் எத்துணை அல்லல்பட நேரும் என்று எண்ணிப் பார்மின். எனவே கடவுள் ஒன்றே. அக்கடவுள் சிவமே என்று தேர்மின்.

வேதாந்த சித்தாந்த சமரசமெய்ந்நிலை கண்ட தாயுமானவ அடிகளார்

அல்லலாந் தொழிற்ப டைத்தே அடிக்கடி வுருவெ டுத்தே
மல்லல்மா ஞாலம் காக்க வருபவர் கடவுள் என்னின்
தொல்லையாம் பிறவி வேலை தொலைந்திடா திருணீங் காது
நல்லது மாயை தானும் நானென வந்து நிற்கும்.

எனலும் காண்க. தீயவரை ஒழித்து நல்லவரைக் காக்க அவதாரம் செய்வார் கடவுள் என்று சொன்னாலே மும்மலங் களும் சூழும். எனவே கடவுள் ஒருவனே; அவன் சிவனே என்று உணர்க.

இங்ஙனமே பகவான் என்ற வடசொல்லும் சிவபிரா னுக்கே உரியது. ஞானம், ஐசுவரியம், திரு, வீரியம், வைராக் கியம், புகழ் ஆகிய ஆறும் பகம் எனப்படும். இதனையுடை யவன் பகவான். இஃது ஒருவனுக்கேயன்றிப் பலர்க்கு அமை வதன்று. இவ்வுண்மை ஓராது தேவர்க்கும், மக்கட்கும் இப் பெயரைச் சூட்டி மகிழ்தல் பேதைமையாம். இருக்குவேத அட்சமாலிகை உபநிடதம் ''பகவான் குஹ:'' என்று பரசும் இக்குகன் யார் என்பதைச் சுவேதாச்வதர உபநிடதம் கீழ்வரு மாறு கூறித் தெளிவுபடுத்தும்.

ஸர்வாநந சிரோக்ரீவஸ் ஸர்வபூத குஹாசய: I
ஸர்வவ்யாபீ ஸபகவாந் தஸ்மாத் ஸர்வகதச்சிவ: II

பொருள்: - ''எங்கும்முகம் உடையவனும், தலையுடையவனும் கழுத்தையுடையவனும், எல்லா உயிர்களின் உள்ளக்குகை களில் இருக்கின்றவனும், யாண்டும் நிறைந்திருப்பவனுமாய் உள்ளான் அந்தப் பகவான். ஆகலின் சிவபிரானே யாண்டும் நிறைந்திருப்பவன்'' எனவாம். ''அனைத்தையும் அழித்து ஒடுக்குபவன் ஆகலின் அரன் என்றும், யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பவன் ஆகலின் விட்டுணு என்றும், முற்றும் உணர்ந்தவன் ஆகலின் பகவான் என்றும், காப்பவன் ஆதலின் ஓம் என்றும் சிவபெருமானுக்குப் பெயர்கள் விளங்குவ ஆயின'' என்று கூர்மபுராணமும் கூறும். எனவே யாண்டும் நிறைந்

திருப்பவனும் யாவும் அறிந்தவனும் பகவான் என்பது புலனுகும். இவ்விலக்கணம் சிவபிரானுக்கேயல்லாமல் ஏனையருக்குப் பொருந்துமாறின்று. எனவே பகவானும் குகனும் ஆவான் சிவபிரானே என்று அறிக.

சிவபிரானே முருகன் ஆதலின் குகன் என்ற திருப்பெயர் முருகனுக்கு உரியதாயிற்று.

ஆதலின் நமது சத்தி யறுமுகன் அவனும் யாமும்
பேதகம் அன்ருல் நம்போல் பிரிவிலன் யாண்டும் நின்ருன்
ஏதமில் குழவி போல்வான் யாவையும் உணர்ந்தான் சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்

என வருஉம் கந்தபுராணத் திருவிருத்தத்துள் பகவான், குகன் என்பனவற்றின் இலக்கணங்களைச் சிவபிரானே முருகனிடத்து வைத்து ஓதுதல் கண்டு தெளிக.

அற்றேலஃதங்ஙனமாக, பகவான் என்ற பெயர் திருமாலுக்கும் செல்லும். அப்பெயர் திருமாலுக்கே உரித்து என்று விட்டுணு புராணம் விதக்குமாலோவெனின் யாம் காட்டிய வேதமொழிகளை முரணப் புராணவுரைகளைக் கொள்வார் ஆடிக்காற்றை எதிர்க்க இலவம்பஞ்சைத் துணைகொள்வாரை ஒப்பார் என்று விடுக்க. அதனுலன்றே கர்ப்ப உபநிடதம்

யதியோந்யா: ப்ரமுச்யேயம் ப்ரபத்யே பரமேச்வரம் ।
பர்க்கம் பசுபதிம் ருத்ரம் மஹாதேவம் ஜகத்குரும் ॥

என்று சாற்றுவதாயிற்று. தமிழ்:-" கருப்பையை விட்டு வெளி வருவேனுயின் பரமேசுவரனும், பர்க்கனும், பசுபதியும், உருத்திரனும், சகத்குருவும் ஆன மகாதேவனையே சரணமாக அடைவேன்" எனவாம். இங்ஙனம் கருவில் தங்கியுள்ள எல்லாவுயிர்களுமே உணர்ச்சி பெறும். கருவை நீங்கிப் புவியில்

விழுந்த பின்னர் அந்த உணர்ச்சி குலேந்து ''எம் கடவுள். நும் கடவுள்'' என்று கலாமிழைப்பர்.

2. அண்டமும் பிண்டமும்

அண்டம் = உலகம். பிண்டம் = உடம்பு. பிண்டம் உயிருக்கு உடம்பு. அண்டம் இறைவனுக்கு உடம்பு. ஆகலின் அண்டம் போலப் பிண்டமும், பிண்டம் போல அண்டமும் உள. அண்டத்திலே தேவர்கள் சூரபதுமன், சிங்கமுகன், தாருகன் என்னும் அசுரரால் அலக்கண்பட்டனர். பிண்டத்திலே உயிர்கள் ஆணவம், கன்மம் மாயை என்னும் மலங்களால் அலக்கணுறுகின்றன. தேவர்கள் இறைவனே நோக்கித் தவம் செய்தனர். இறைவன் அசுரரை அழித்து அமரரை வாழ்வித்தார். உயிர்கள் இறைவனே நோக்கித்தவம் செய்யின் மும்மலங்கள் அழிவுறும். முத்தியாகிய பெருவாழ்வு கிட்டும். அண்டத்தில் பதினுன்கு உலகங்கள் உள. அவை பிண்டத்திலும் உள. அவ்விவரம் ஆமாறு:- 1) அகப்பாதம்—அதலம் 2) புறப்பாதம்—விதலம் 3) பரடு—நிதலம் 4) கணேக்கால்—சுதலம் 5) முழங்கால்—மகாதலம் 6) தொடை—இரசாதலம் 7) இடை—தலாதலம் 8) கொப்பூழ்—பூலோகம் 9) வயிறு—புவர்லோகம். இதில் பிசாசு, குய்யகர், நவகோள், உடுக்கள், கந்தருவர், விஞ்சையர், தேவதாசியர், ஏழுமுனிவரர், துருவன் முதலியோர் வாழும் பல உலகங்களும் அடங்கியுள்ளன. 10) இருதயம்—சுவர்லோகம் (இஃது இந்திரன் வாழ் உலகு). 11) தோள்—மகர்லோகம் 12) கழுத்து—ஜனேலோகம் 13) புருவநடு—தபோலோகம் 14) தலே—சத்தியலோகம்.

3. உள்ளத் தாமரை

உயிருக்கு உடம்பு பிண்டம். பிண்டத்தின் நாப்பண் இருதயம். இறைவனுக்கு உடம்பு அண்டம். அண்டத்தின் நாப்பண் சிதம்பரம். இடைநாடி இலங்கைக்கு நேரே போகும். பிங்கலே நாடி இமயமலேக்கு நேரேபோம். இவ்விரண்டுக்கும்

நாப்பண் சுழுமுனை நாடிபோம். நடுநாடியான இது சிதம் பரத்துக்கு நேரே போய்க் கூடும். எனவே அண்டத்தின் நடுவில் சிதம்பரம் உளதாதல் பெறப்படும்.

பிண்டத்தின் உள்ள இருதயமே உள்ளத்தாமரை (இருதய புண்டரீகம்) ஆகும். இத்தாமரையின் நடுவில் மிக நுண்ணிதான வெளி நிலவுகிறது. இவ்வெளியிடைச் சித்து எனப்படும் தேவியை நீங்காத இறைவன் எல்லையற்ற பெரு வெளியாக—வெளிக்குள் வெளியாக விளங்குகின்ருன். இந்த எல்லையற்ற பெருவெளியே பிரமம் அல்லது சிவம் எனப்படு கின்றது.. பிரமம் ஆகிய இப்பெருவெளி இருப்பதால் பிண்டம் ஆகிய உடப்பு பிரமபுரம் எனவும், சிவபுரம் எனவும் கூறப்படு கின்றது. இருதய புண்டரீகம் இருப்பதால் புண்டரீகபுரம் என்றும் பிண்டம் கூறப்படும். இங்ஙனமே பிரமப் பெருவெளி இருப்பதால் பிரமபுரம், சிவபுரம் எனவும் இருதய புண்டரீகம் ஆனதால் புண்டரீகபுரம் எனவும் இருதயமும் உரைக்கப்படும் என்று அறிக.

உள்ளத்தாமரையின் நுண்ணிய வெளிக்குள் நுண்ணிய வெளியாக இருப்பதால் சிவபிரானை வியோமவடிவன் என்று வேதம் கூறும். இத்தன்மையை

அணோரணீயாந் மஹதோ மஹீயாநாத்மா
குஹாயாந் நிஹிதோஸ்ய ஜந்தோ: l ''

என்று தைத்திரீயாருணசாகை நாராயணம் விளக்கும். பொருள்:-'' அணுவிலும் அணுவாய்ப் பெரிதிலும் பெரிதா யுள்ள (பரம) ஆன்மா இவ்வுயிரினது இருதய குகையில் உளது'' எனவாம். சிதாகாசம் ஞானவண்ணமாதலின் சிதம் என்றும் ஓங்கார வடிவமாகலின் பரம், பரம்தேசு எனவும் வழங்கப்படும். இஃது இல்லாத இடமேயில்லை. எல்லா அண்டங்களும் இதன் ஆதாரத்தில் நிறுத்தி வைக்கப் பட்டுள்ளன. இது பொன்மயமான ஒளிப்பிழம்பாய்த்

திகழ்வதாகலின் பொன்னம்பலம் எனப்படும். பொன் கொண்டு வேய்ந்ததனல் பொன்னம்பலம் எனப்பெயர் பெற்றது என்னும் வரலாற்றறிஞர் கூற்று ஏற்புடைத்தன்று.

4. திருச்சிற்றம்பலம்

இந்த வெளி பெரிதும் நுண்ணியதாதல் கருதி இதனைத் தகராலயம் என்று வழங்குவர். தகரம்-சிறுமை, ஆலயம்-வீடு. எனவே மிக நுட்பமான வீடு என்க. இதன் கண் குகேசன் ஆகிய சிவபெருமான் திருக்கூத்தாடுகின்ருன். கூத்தாடும் இடம் அரங்கு, அம்பலம் எனப்படும். எனவே தகர அம்பலம். இதைத் தமிழ்ப் படுத்திஞல் சிறுமை அம்பலம் அதாவது சிற்றம்பலம் என ஆகும். இதனேடு மேம்பாடு என்னும் பொருள்தரும் 'திரு' என்ற மொழியைச் சேர்த்தால் திருச் சிற்றம்பலம் எனவாம். பிண்டத்திலே (நம் உடம்பிலே) உள்ள அம்பலம் திருச்சிற்றம்பலம். அண்டத்திலே உள்ள அம்பலம் பேரம்பலம். இவ்வேறுபாடு கருதாது இரண்டையும் திருச்சிற்றம்பலம் என்று வழங்குதலும் உண்டு. வழங்கிடின் மாட்சிமையுடைய நுண்ணியதான அம்பலம் என்று பொருள் கொள்க. இத்திருச்சிற்றம்பலம் இல்லாத இடமே கிடையாது. மேலும் கீழும் யாண்டும் நீக்கமற நிறைந்துள்ளது. இதனை யுணர்த்தவே திருமுறை ஓதுங்காலே முதலிலும் முடிவிலும் திருச்சிற்றம்பலம் ஓதப்படுகின்றது.

திருச்சிற்றம்பலம் அண்டத்தும் பிண்டத்தும் உளது. உள் ளத்தாமரைக்கண் ஞானப்பெருவெளியாய் ஒளிரும் இறைவனை ஞானிகளே வழிபடல் இயலும்.

''ஐயமிலா நின்னுலகு வேண்டி யிங்கே
அருமலர்நீர் கொடுபூசை புரிவார் போலத்
தெய்வமெலாம் ஏத்துகு யானும் யாதோர்
சிற்றுருவில் வழிபடற்குப் பலவி கார

வையமிலா ஞானநவில் நூல்கள் ஓரென்
மனமிசையா தருள்சுரந்து நீமுன் சொன்ன
துய்யவிலா சச்சொலுமே இடம்கொ டாது
துரியநிலை மேல்நின்றே சூழல் சாலும்.

என்று பாம்பன் ஸ்ரீமத் குமரருருதாச அடிகளார் அருளிச் செயலை அறிக. இங்ஙனமே தாயுமானவ அடிகளார்

''பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே
பாவித்திறைஞ்ச வாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமலர் எடுக்கமனமும்
நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்கவெனின்
நாணுமென் உளம்நிற்றிநீ
நான்கும்பி டும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யல்முறையோ
விண்ணேவிண் ஆதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தேஅவ் வித்தின்முளையே
கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே
கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

என்று கூறுதலும் உளத்தில் நன்கு பதிக்கற்பாலது.

இந்நிலை யாவருக்கும் எளிதில் எய்துவதன்று. அங்ஙனம் எய்தாதார் இறைவனை ஓர் வடிவில் வைத்து வழிபாடு உஞற்றுவர். இன்னோர் உய்திகருதியே இறைவன் (அண்டத்திலே) உருவமும் அருவமும் ஆனதிருமேனி கொண்டு சிதம்பரத்திலே திருக்கூத்து இயற்றுகின்றான். இத்திருக் கூத்து ஐந்தொழில் கூத்தாகும். இஃது உயிர்களின் உய்தி பொருட்டு நிகழ்கின்றது. ஐந்தொழிலாவன:- படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருள். இராசதகுணம் உடையவன்

பிரமன். வெளியே சத்துவகுணமும் உள்ளே தாமதகுண மும் உடையவன் திருமால். உலக ஒடுக்கத்தின் பொருட்டு வெளியே தாமதகுணமும் உள்ளே சத்துவகுணமும் பொருந்தி யவன் உருத்திரன். இம்மூவரையும் திருமேனிகளாகக் கொண்டு முத்தொழில் நடாத்தி அவர்கட்கு மேம்பட்ட நான்காவது பொருளாக விளங்குபவனே சிவபிரான். இவன் சிற்றம்பலத்தில் தேவியின் விழியும் உளமும் களிக்க ஆடு கின்றான். கருவுற்றிருக்கும் தாய் உண்ணும் உணவின் காரம் அவள் வயிற்றில் இருக்கும் குழவியைச் சென்றடைவது போல எம்பெருமாட்டிகாணும் திருக்கூத்தின் பயன் அவள் குழந்தை களாகிய எல்லாவுயிர்களையும் சென்றடைகிறது. இந்நடேசனை வணங்காத தலை முதலை; வாழ்த்தாத வாய் கால்வாய்; போற்றாத நூல் புல்நூல்; காணாத கண் புண் என்று அறிக.

திருச்சிற்றம்பலத்தை மண், நீர், தீ, வளி, வெளி, மகத், அகங்காரம் என்னும் ஏழு திரைகள் மறைத்துக் கொண் டுள்ளன. இவற்றினுள்ளே ஒளி வண்ணமாய் நிலவுகிறது திருச்சிற்றம்பலம். இதைக் காண்டற்கு ஏழு திரைகளும் விலகல் வேண்டும். விலகவேண்டுமேல் உயிர்ஞானத்தைக் கூடுதல் வேண்டும். எல்லாவற்றையும் விழிகாணும். ஆனால் தன்னைக்காணாது. காணவேண்டுமேல் விழியின் முன்பு ஒரு கண்ணாடி வேண்டும். அதுபோல ஆன்மா பரமான்மாவுக்கு உடம்பாயிருந்தும் தன்னையும் அறியாது; தன தலைவனையும் அறியாது. அறியவேண்டுமேல் ஞானம் என்னும் கண்ணாடி வேண்டும். இந்த ஞானம் திருவருளால் எய்தப் பெறுவது.

ஞானம் விழைவோர் தீய கனவிலும் கருதலாகாது. ஞானம் குரு வழிபாடு, இலிங்க வழிபாடு, அடியார் வழிபாடு ஆகியவற்றால் கைகூடும். மக்களுக்கு இழைத்த பிழை மன்னனால் தீரும். மன்னவனுக்கு இழைத்த பிழை தேவரால் தீரும். தேவர் பால் செய்த குற்றம் இந்திரனாலும், இந்திரனுக்கு இழைத்த பிழை பிரமனாலும், பிரமனுக்குச் செய்த குற்றம் விட்டுணுவாலும் விலகும். விட்டுணுவின்பால்

செய்த குற்றம் சிவனால் தீரும். சிவன்பால் இழைத்த பிழை குருவால் சிதையும். குருவின் பால் செய்த குற்றம் யாராலும் குன்றாது. குருவே தான் தீர்க்க வேண்டும். இதனால் குருவின் பெருமையை அறிக.

எல்லா வழிபாட்டிலும் மேம்பட்டது இலிங்க வழிபாடு. தகராலயத்தில் இவ்வழிபாடே செய்தற்கு உரியது.

அடியார் வழிபாடு பெரிதும் சிறந்தது. அடியவர் வழிபாட்டால் முத்தியடைந்த சான்றோர் வரலாற்றைப் பெரிய புராணம் கூறுகின்றது. அடியார் வழிபாடு என்றால் அறுபான் மும்மை நாயன்மார் என்று சிலர் கருதுவர். அவர்க்கு வழிபாடாற்றி அறுசுவையுண்டியைக் கேளும் கிளையும் சூழ அமர்ந்துண்பர். இது தவறு. "பதியான ஞான முனிவன்" எனவும் "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட" என்றபடி அவர்கள் சிவமாய் விட்டனர். இவ்வழிபாட்டை ஏற்றுக் கொள்ளார். எனவே இக்காலை உள்ள அடியவரை வழிபட்டு உணவூட்டலே மகேசுர பூசை ஆகும். அடியார் வழிபாட்டின் பெருமையை

படமாடக் கோயிற் பகவற்கொன் றீயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயின்
படமாடக் கோயில் பகவற்க தாமே.

எனவரூஉம் திருமந்திரத் தூக்கானும் தெளிக.

5. மனமே கூட்டுவிக்கும்

தீயவை கடிந்து குரு, இலிங்க, அடியார் வழிபாட்டில் உறைப்பாக நின்று மண், பொன், பெண் ஆகிய மூன்று ஏடணைகளையும் நீங்கி நிற்பது புறத்துறவு ஆகும். "நான்" என்னும் ஆணவமலமும் "எனது" என்னும் மாயாமலமும், 'நான் நல்லன்" என்று பிரிக்கும் அறிவை விளக்கும் கன்ம மலமும் ஒடுங்குமாறு தியானம் ஆகிய அகத்துறவு கைவருமாறு செய்து கொண்டால் திருச்சிற்றம்பலம் ஆகிய அருள் மன்றத்தை அடையலாம்.

அகத் துறவு என்பது கருவிகளைக் கடந்து நின்று தியானித்தல் ஆம். கருவிகளைக் கடந்து நிற்றல் என்பது தத்துவங்கள் கெடுதல் ஆம். தத்துவம் எனில் உண்மை என்று பொருளாகும். எனவே உண்மையாகிய தத்துவம் கேடுறல் யாங்ஙனம் என்று ஓர் ஐயம் நிகழல் கூடும். இறந்து போதற்கு உரிய தேவரை சாவு அற்றவர் என்று பொருள் படும் அமரர் என்கிறோம். அழிவுக்கு உரிய விட்டுணுவை அழியாதவன் என்று பொருள்படும் அச்சுதன் என்கிறோம். இவை ஒப்பக் காரியக் கேடுடைக் கருவிகட்கும் உண்மை எனும் பொருளுடைத் தத்துவம் என்னும் பெயர் ஏற்பட்டது என்று உணர்க.

மனம் காற்று என அலையும் தன்மைத்து. மேற் கூறியவாறு தத்துவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக அடங்கு தலையறிந்த மனமும் ஒடுங்குதல் வேண்டும். நடேசன் திருக கூத்தியற்றும் திருச்சிற்றம்பலத்திலே ஒரே நாட்டமுடன் நின்று தியானம் செய்தல் வேண்டும். செய்யின் மனம் தோன்றும் இடமும் அதே இருதயம் ஆகலின் அங்கிருந்து விரைந்தெழு மனத்தின் தோற்றம் எல்லாம் வெளிவராமல் ஒய்ந்துவிடும். ஒய்ந்துவிடின் அவ்விடத்தில் இருக்கின்ற போதாகாசம் (மனவிண்) காணப்படும். (போதாகாசத்தில் தான் மனம் தோன்றும்)

இந்தப் போதாகாசமும் அடங்குதல் வேண்டும். உயிர் திருவருளில் நன்கு ஒடுங்கி நின்றால் தான் போதாகாசம் ஒடுங்கும். இவ்வாறு போதாகாசம் ஒடுக்கம் எய்தத் திருவரு ளில் ஒடுங்கி நின்ற ஆன்மா தன்னையும் காணும். தன்னைக் காட்டிய அருளையும் காணும். இப்பேறு கிட்டியபின், அதா வது ஆன்மா தன்னையும் அருளையும் கண்ட நிலைக்குமேலே மன அசைவு சிறிதும் இல்லாத பரையோகம் பெருகும். பரை யோகம் என்பது அருளில் உறைந்து நிற்றலும், நீங்கி நிற்ற லும் இல்லா நடுநிலையாகும் இந்தப் பரையோகத்தைக் கடந்து மேலே செல்லுகின்ற நிலையில் அருட்செல்வமான பரை போகம் கூடும். பரைபோகம் என்பது பரையோகத்தின்

பயனாய் விளையும் நாத சுகானுபவம் ஆம். இங்ஙனம் சுகானு பவமாய் உள்ள அருட்பரைபோகம் நீங்கும் நிலைக்கண் விளைவது சிவானந்தமேலீடு என்னும் பரிபூரணம் ஆகும். இஃதே சுகாதீதம் என வழங்கப்படுகின்றது. பட்டினத்தடி களாரும்,

மாயநட் போரையும் மாயா மலமெனும் மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்
தேயும தேநிட்டை யென்றான் எழிற்கச்சி யேகம்பனே.

என்று இச்சுகாதீத நிலையை உணர்த்தியருளினார். இந்நிலையே வீடுபேறு என்று தெளிக.

மூக்கு நுனி, கொப்பூழ், புருவநடு, கண்டம், உச்சி, விழி, மூலாதாரம் என்பவற்றில் ஒவ்வொன்றை ஒவ்வொரு நூல் உயர்த்திக் கூறி அதுவே வழிபாட்டுக்குரியது என உரைத்து நிற்கும். அத்தகு உரைகள் கோடற்பாலவல்ல. மனமடக்கப்பட வேண்டுவது முதன்மைத்தாகும். அந்த மனம் தோன்றுமிடம் இருதயம். எனவே மனம் அடங்கவேண்டும் இடமும் இருத யமே ஆகலானும் குகேசன் நடம்புரி இடமும் இருதயமே ஆக லானும் தகராலய வழிபாடே மேம்பட்டது என்று தெளிக. சில நூல்கள் புருவநடுவைச் சிதம்பரம் என்று சாதிக்கும். நடேசனை அங்குப் பாவிக்கும் பாவனையால் அவ்வாறு சொல்லப்பட்டது எனலாம். வேதம் இருதயபுண்டரீகத்தையே சிதம்பரம் என்று கூறுவது நினைக்க. வேதமொழிக்கு முரண்படுவன ஏதம்படும் என்க.

எல்லா நூல்களிலும் சிறந்தது வேதம். அதனைப்பழித் தல் ஒவ்வாது. மெய்யறிவினராய மெய்கண்ட தேவர் அருளிச் செய்த சிவஞான போதத்தை உயர்த்துவான் விழைந்த ஒரு புலவர்

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வர்
ஓதும் தமிழதனின் உள்ளுறுநெய்—போதமிகு

நெய்யி னுறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

என்று பாடியுள்ளார். இதில் வடமொழி வேதமும் தென் மொழி வேதமும் பழிக்கப்பட்டன. வேதத்தைப் பசுவாகக் கூறியவர் ஆகமத்தைப் பாலாகச் சொன்னமையின் வேத மாகிய பசு இனிக்கறவாது எனல் பெறப்படும். ஆயின் இன்னோர் ஆகமத்தையேயன்றி வெறும் சக்கையாய்ப் போன வேதத்தை நாடுதல் கூடாது. நால்வர் தமிழ், தமிழ் வேத மாக இருப்பவும் ஆகமமாகிய பாலில் இருந்து கடைந்தெடுக் கப்பட்ட வெண்ணெய் எனல் வெள்ளறிவின் விளைவாம். சாத் திரம் எத்துணைச் சிறந்ததே ஆயினும் அது கடவுளைக்காட்டாது. அது கடவுளை நாட்ட வந்ததே ஆகும். தோத்திரமே கடவுளைக் காட்டவும் கூட்டவும் வல்லது. அவ்வாறு காட்டவல்லதான நால்வர் தமிழைத் தாழ்த்திச் சிவஞான போதத்தை உயர்த்தி இப்பெரியார் பெற்ற பயன் யாதோ அறிகிலம். இப்பெரியார்

பஹு¬சாஸ்த்ரகதாகந்தா ரோமந்தேநவ்ருதைவகிம்!
அந்வேஷ்டவ்யம் ப்ரயத்நேந மாருதேஜ்யோதிராந்தரம்॥

என்று முக்திகோபநிடதம் கழறுவதை அறிந்திருப்பரேல் இங்ஙனம் பாடார் எனல் சரதமே. இதன் தமிழ்:— ''மாருதீ! மிக்க சாத்திரக் கதையாகிய கந்தையைப் பெயர்த்தும் பெயர்த் தும் மெல்லுவதனால் (மீட்டும் மீட்டும் படிப்பதனால்) யாது பயன்? உள்ளேயுள்ள சோதியை முயற்சியால் தேடிக்கோடல் வேண்டும்'' எனவாம்.

திருச்சிற்றம்பலத்தை அடைதற்கு நம்பால் உள்ள மனமே சாலும். என்னை? இம்மனம் எல்லாம் செய்யவல்லதாகலின். இந்த மனமே ஆசையுட்பட்டுத் துன்பத்தை விளைக்கும். இந்த மனமே அருள் வழிப்பட்டு இன்பத்தையும் ஈயும். இந்த மனமே பிறப்பிறப்புக்குக் காரணமாய் நிற்கும் உலகாயும் உலகல்லாததாயும் இருப்பதும் இதுவே. பயன் தருவதும் இதுவே. பயனைக்கெடுப்பதும் இதுவே. ''கெடுப்பதூஉம்

கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை'' என்று திருவள்ளுவ நாயனார் வானத்துக்கு வகுத்த இலக்கணம் மனத்துக்கும் இயையும். மதி ஆவதும் மனமே. விதி ஆவதும் மனமே. மலத்தில் உழல்வதும் மனமே. மலத்தை நீங்குவதும் மனமே. சிறுமையைத் தருவதும் பெருமையைத் தருவதும் மனமே. துவிதமாயும் அதற்கு வேறான ஒரு தன்மையாயும் இருப்பது மனமே. ஸ்ரீமத் பாம்பன் அடிகளார்

> மனமே சனனமும் மனமே மரணமும் மனமே உலகுமலதுமாகும்
> மனமே அபலமும் மனமே சபலமும் மனமே மதியொடுவிதியாகும்
> மனமே சமலமும் மனமே நிமலமும் மனமே வளியொடுவெளியாகும்
> மனமே சிறுமையும் மனமே பெருமையும் மனமே இருமையுமொருமையுமே
> —(தகராலய ரகசியம்)

என்று அருளிச் செய்தலைக் கருத்தில் இருத்துக.

மனம் இருவகைத்து. கண்கொண்டு உருவங்களை அறியும் உருவமனம் என்பது ஒன்று. இஃது அருவப்பொருளை அறியாது. அருள் கொண்டு அருவங்களை அறியும் அருவமனம் என்பது மற்றொன்று. இது பரமனம் எனவும் படும். இஃது ஒன்றை வலிந்து பற்றும் இயல்பிற்று அன்று. ஒளி வண்ணமாக 'பெருவெளியின் கண் நிலைத்து நிற்றலே இதன் தன்மை ஆகும். எனவே இஃது உருவங்கருதுவது ஆகாது. இறைவனை ஓர் உருவிலே பாவித்து இடைவிடாது சிந்தித்து வரும் உருவமனமே அச்சிந்திப்பின் பயனாய் அருவ (பர) மனமாகிவிடும்.

இருவினை நேரொப்பு நிகழும் காலை இறைவனே குருவின் திருமேனி கொண்டு எழுந்தருளி உயிர்களை ஆட்கொள்வான். எனவே உயிரின் அறியாமையைக் கெடுக்கும்

மந்திரமூர்த்தியே குரு என்று உணர்க. தகராலயத்தில் எழுந்தருளியுள்ள நடேசனே குரு என்பது தேற்றமாம். எனவே குருவின் திருவடியையே எஞ்ஞான்றும் சிந்திக்கும் தெளிவு பெறுதல் வேண்டும். உண்முகச் சிந்தனேயில் ஆசிரியரது வடிவத்தையே தகராகாசப் பரமாசாரியனது வடிவமாக நன்கு பாவித்துக் குருவினுல் உணர்த்தப்பட்ட குகேசன் ஒருவனுக்கே உரிய மந்திரத்தை உள்ளத்துள் ஓதி மனம் அலேயாவாறு நிலே பெறுத்தல் வேண்டும். உணர்வு புறமுகமான காலே அறியப்படும் பொருள்கள் யாவும் குருவின் திருவுருவமே என்று கருதுதல் வேண்டும். இதனுல் பந்தமஞேலயம் கைகூடும். கூடிய பின்னர் உண்முகச்சிந்தனேயில் தோன்றும் சடரூப ஆகாசத்தைக் குருவின் அருவத்திருமேனி என்று பாவித்து நடேசனின் மந்திரம் ஓதுக. அதற்கு மேல் சிந்தைக்கு எட்டாத சிற்றம்பலப்பெருவெளி இதுவாம் என்று பாவித்து அவ்வெளியின் ஒடுங்கி நிற்க. நிற்பின் உயிர் அருள்வண்ணமாம் என்க.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவை ஞானத்துக்கு வழி காட்டும். என்னே? ஞானமின்றி வீடுபேறு இன்ருகலின். இதனுல் ஞாஞசிரியனேக் கூட்டும். ஆயின் உயிர் இச்சைவயப் படுமேல் ஞாஞசிரியனேக் கூட்டாது தேவருலகம் முதலிய இன்பவுலகங்களில் செலுத்தி மீட்டும் பிறப்பினுட் படுத்தும். எனவே தகராலய வழிபாட்டை விடுத்த வேறு எந்நெறியும் உய்தி பயவாது என்க.

6. முடிப்புரை

தகரவித்தை ஆசிரியன் மூலமாகத் தெளிய வேண்டிய ஒன்ருகும். இக்கட்டுரையில் அறிமுகமே செய்யப்பட்டுள்ளது. இதனே ஐயந்தீர அறிய விழைவோர் ஸ்ரீமத்பாம்பன் சுவாமிகள் அருளியுள்ள பரிபூரணுனந்தபோதம், தகராலய ரகசியம் என்ற நூல்களே முறையாகப் பாடங்கேட்டல் வேண்டும். இக் கட்டுரையைப் படிப்போர் அந்நூல்களேக் கற்க விழைவுறுவராயின் அஃதே யான்பெறும் பயன் ஆகும்.

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருஞானசம்பந்தர்—2

K. ஸரஸ்வதி, M.A., திருநெல்வேலி.

(இக்கட்டுரையின் முதற்பகுதி 1985-வது ஆண்டு சிவஞான பூஜாமலரில் பிரசுரிக்கப்பட்டது).

திருஞானசம்பந்தர் சீகாழியில் தீர்த்தக்கரையில் ஞானப் பாலுண்டு "தோடுடைய செவியன்" எனத்தொடங்கும் திருப் பதிகம் பாடியது மூன்ருவது பிராயத்தில் ஆகும். ஆனுல் சேக்கிழார் பெருமான் அந்த ஞானக்குழந்தையின் வளரும் ஒவ்வொரு பருவத்திலேயும் அவர் பெற்ற அருளின் திறத்தைத் தாதிமார்களின் வாயிலாகக் காட்டுகின்ருர். அவர் கூறுவ தாவது:—

> சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்
> "காழியர்தஞ் சீராட்டே கவுணியர்கற் பகமே" என்(று)
> ஏழிசையும் பலகலையும் எவ்வுலகுந் தனித்தனியே
> வாழவரும் அவர்தம்மை "வருகவரு" கென அழைப்ப.

இது குழந்தையின் பத்து அல்லது பதிஞெரு மாதங்களில் நிகழும் வருகைப்பருவத்தின் நிகழ்ச்சியாகும். தளர்நடை போடும் குழந்தையாம் திருஞானசம்பந்தரை சுற்றத்தாராகிய மறைக்குல மகளிரும், தாதியரும் "கவுணியர் குலத்தவரின் கற்பகமே! ஏழிசையும் வேதமுதலான பலகலைகளும் எல்லா உயிர்களும் தனித்தனியே வாழும்படி வந்தவதரித்த பிள்ளை யாரே! வருக! வருக!" என அழைக்கின்றனராம்.

"ஏழிசையும் வாழ்வது எவ்வாறு? ஏழு இசைகளும் வேறு அழியக்கூடிய பொருள்களிடத்து இசைந்து ஒழியாது பிள்ளை யாரது திருப்பதிகங்கட்கு உட்பட்டுச் சிவன் புகழ்பாடும் தன்மைக்கு மட்டுமே பயன்பட்டது என்று அறிய வேண்டும். ஏக்கலையுமே இறைவனின் புகழையும் பெருமையையும்

விவரிக்கும் தன்மைக்கே பயன்படின், அவனருளாலே அவ்வாறு செயல்படுத்துபவரின் திறமையும் அக்கலையின் திறமையும் பெருமையும் பன்மடங்கு பெருகி இவ்வுலகு உள்ளளவும் நிலைத்து நிற்கும் என்பது உறுதி. தேவார ஆசிரியர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவருமே செந்தமிழைப் படகாகவும். இசைக்கலையினைத் துடுப்பாகவும் கொண்டு பக்திக்கடலில் பயணஞ் செய்தனர். மூவரும் விதைத்த இசைக்கலை என்னும் வித்து முளைத்துச் செடியாகி இன்று பலவாறு விழுதுவிட்டு ஆலமரமாகப் பிற்காலத்தவர் களால் வளர்க்கப்பட்டது. அவர்கள் இசையில் இறைவனைக் கண்டனர். திருஞானசம்பந்தர் ''பண் காட்டும் இசையான்'' எனவும், ''பண்ணில் யாழினர்'' எனவும், ''பரசுபாணியர் பாடல் வீணையர்'' எனவும்; திருநாவுக்கரசர் இறைவனை ''பண்ணார்ந்த வீணைபயின்ற விரலவனே'' எனவும் ''கீதராய் கீதங்கேட்டு'' எனவும், ''பண்ணியன்'' எனவும்; சுந்தரர் ''ஏழிசையாய் இசைப்பயனாய்'' என்றும் பாடியமையால் அவர்கள் இசையினூடே இறைவனைக் கண்டமை தெளி வாகின்றது.

அசுவதரன், கம்பளன், என்னும் இரு கந்தர்வர்களுடைய இசையை விரும்பி அவர்கள் விரும்பியவாறே அவர்களை தோடும் குழையுமாக இறைவன் அணிந்துள்ளான் என்பது வரலாறு. இவ்வாறான இறைவனது பெருமைகளைச் சீகாழியில் பாடத்தொடங்கிய திருஞானசம்பந்தப் பெருமான் மீண்டும் கோயிலினுள் சென்று அம்மையப்பரைப் பணிந்து விருப்ப முடன் ''நறவ நிறை வண்டு'' எனத் தொடங்கும் பதிகத்தைத் தக்கேசிப் பண்ணில் பாடியருளினார். அப்பதிகத்தை உரை யுடன் ஈண்டுத் தருகின்றோம்.

திருச்சிற்றம்பலம்.

1. நறவநிறைவண் டறைதார்க்கொன்றை நயந்து
நயனத்தால்
சுறவஞ்செறிவண் கொடியோன்உடலம் பொடியாவிழி
செய்தான்

புறவம்உறைவண் பதியாமதியார் புரமூன்றெரிசெய்த
இறைவன் அறவன் இமையோரேத்த உமையோடிருந்
தானே.

பதிகப்பொழிப்புரை:— தேன் நிறைந்ததும், வண்டுகள் ஒலிக்கின்றதுமான கொன்றை மாலையை விரும்பி அணிந்து, மீனக்கொடியோனான மன்மதனை அவனது உடல் நீருகும்படி நெற்றிக்கண்ணால் விழித்தலைச் செய்தவனும், பகைவரது மூன்று புரங்களையும் எரிசெய்த இறைவனும், அறமே உருவானவனுமாகிய சிவபெருமான் புறவம் என்னும் பெயருடைய வளமான சீகாழியினைத் தனது உறைவிடமாகக் கொண்டு இமையவர்கள் எல்லாம் துதித்துப் போற்றும்படி உமாதேவியாரோடு எழுந்தருளி இருந்தான்.

2. உரவன்புலியின் உரிதோலாடை உடைமேற்படநாகம்
விரவிவிரிபூங் கச்சரவசைத்த விகிர்தன் னுகிர்தன்னால்
பொருவெங்களிறு பிளிறவுரித்துப் புறவம்பதியாக
இரவும்பகலும் இமையோரேத்த உமையோடிருந்தானே.

வலிமைமிக்க புலியினை உரித்த தோலாடையின் மீது பாம்பினைப் பூங்கச்சு போன்று இடையினில் விரவி உடுத்த விகிர்தனாகிய சிவபெருமான், போரிடவந்த கொடிய யானையினை அலறிப்பிளிறும்படியாகத் தனது நகத்தினால் உரித்துத் தோலினைப் போர்த்திக்கொண்டு, இரவும் பகலும் தேவர்கள் ஏத்தும்படிப் புறவம் என்னும் சீகாழியினைத் தனது பதியாகக்கொண்டு உமையம்மையோடு எழுந்தருளியிருந்தான்.

3. பந்தமுடைய பூதம்பாடப் பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல்கு குழலிகாணக் கரிகாட்டெரியாடி
அந்தண்கடல்சூழ்ந் தழகார்புறவம் பதியாவமர்வெய்தி
எந்தம்பெருமான் இமையோரேத்த உமையோடிருந்
தானே.

இறைவனை என்றும் நீங்காது தொண்டு புரிதலாகிய பந்தத்தினையுடைய பூதங்கள் பாடவும், திருப்பாதங்களில் சிலம்புகள் ஒலிக்கவும், மணம் மிக்க கூந்தலையுடைய உமா தேவியார் காணவும் சுடுகாட்டிலே ஆடுதலைச் செய்த பிரான், அழகிய குளிர்ச்சி மிக்க கடல் சூழ்ந்து அழகுபொருந்திய திருப்புறவமே பதியாக விரும்பியிருந்து, இமையோர்கள் ஏத்தித்துதிக்க உமையம்மையாரோடு எழுந்தருளி இருந்தனன்,

4. நினைவார்நினைய இனியான்பனியார் மலர்தூய்நித்தலும்
கனையார்விடையொன் றுடையான்கங்கை திங்கள்கமழ்
கொன்றை
புனைவார் சடையின் முடியான்கடல்சூழ் புறவம்பதியாக
எனையாளுடையான் இமையோரேத்த உமையோடிருந்
தானே,

தினந்தோறும் குளிர்ச்சி பொருந்திய மலர்களைத் தூவி (அருச்சித்து) தன்னை நினைப்பவர்களது நினைவுக்கு இனிமையைக் கொடுப்பவன். ஒலித்தலைச் செய்கின்ற ஒரு எருதினை வாகனமாக உடையவன். திங்களும், மணம் வீசுகின்ற கொன்றையினையும் அணிந்த சடைமுடியினை உடையவன். என்னை ஆளாக (அடியவனாக) உடைய இந்தப் பெருமான் புறவமே பதியாகக் கொண்டு தேவர்கள் துதித்தலைச் செய்ய உமாதேவியாரோடு எழுந்தருளி இருந்தனன்.

5. செங்கணரவும் நகுவெண்டலையும் முகிழ்வெண்டிங்களும்
தங்குசடையன் விடையனுடையன் சரிகோவணவாடை
பொங்குதிரைவண் கடல்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
எங்கும்பரவி இமையோரேத்த உமையோடிருந்தானே.

சிவந்த கண்ணினையுடைய பாம்பு, நகைத்துவந்த வெண்டலை, இளமையும் வெண்மையுமுடைய சந்திரன் ஆகியவைகள் தங்குகின்ற சடையினையுடையவன். எருதினை ஊர்தியாகவுடையவன். பொங்குகின்ற அலைகளையுடைய கடல்

சூழ்ந்து அழகு பொருந்திய புறவம் என்னும் சீகாழிப்பதியைத் தனது இடமாகக் கொண்டு தேவர்கள் எங்கும் பரவியிருந்து துதித்தலைச்செய்ய உமாதேவியாரோடு எழுந்தருளியிருந் தனன்.

6. பின்னுசடைகள் தாழக்கேழல் எயிறுபிறழப்போய்
அன்னநடையார் மனைகள்தோறும் அழகார்பலிதேர்ந்து
புன்னைமடலின் பொழில்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
என்னையுடையான் இமையோரேத்த உமையோடிருந் தானே.

என்னை ஆளாகவுடைய பெருமான் பின்னிய சடைகள் தாழப் பன்றியின் கொம்பு மார்பில் விளங்க, அன்னம் போன்ற நடையினையுடைய பெண்களின் வீடுகள்தோறும் அழகுடன்சென்று பிச்சையெடுத்துப் புன்னைமரங்கள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த திருப்புறவத்தினைத் தனது பதியாகக் கொண்டு, தேவர்கள் ஏத்தித்துதிக்கும்படியாக உமாதேவி யாரோடு எழுந்தருளியிருந்தனன்.

7. உண்ணற்கரிய நஞ்சையுண்டு ஒருதோழந்தேவர்
விண்ணிற்பொலிய அமுதமளித்த விடைசேர் கொடியண்ணல்
பண்ணிற்சிறைவண்டு அறைபூஞ்சோலைப் புறவம்பதியாக
எண்ணிற்சிறந்த இமையோரேத்த உமையோடிருந் தானே.

எவராலும் உண்ணுதற்கரிய விஷத்தினைத்தான் உண்டு பேரெண்ணுகிய முப்பத்துமுக்கோடி தேவர்கள் விண்ணுலகைத் தமது இடமாகக்கொண்டு போகத்தில் மூழ்கி விளங்கும்படி அவர்கள் அமுதம் உண்ணும்படி அருள்செய்த இடபக்கொடியோனுகிய சிவபெருமான், இறகுகளையுடைய வண்டுகள் பண்ணேடும் ஒலிக்கின்ற பூஞ்சோலைகள் நிறைந்த திருப்புறவத்தினைத் தமது பதியாகக்கொண்டு எண்ணிக்கை யில் மிக்க தேவர்கள் துதிக்கும்படி உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தனன்.

8. விண்தான் அதிர வியனார்கயிலை வேரோடெடுத்தான்தன்
திண்தோளுடலும் முடியுநெரியச் சிறிதேயூன்றிய
புண்தான்ஒழிய அருள்செய்பெருமான் புறவம்பதியாக
எண்தோளுடையான் இமையோரேத்த உமையோடிருந்
தானே.

விண்ணகம் முழுவதும் அதிரும்படி இடமகன்ற திருக்கயிலை மலையினை வேரோடு எடுப்பேன் எனமுயன்ற இராவணனுடைய திண்மையான தோள்களும், உடலும் தலைமுடிகள் பத்தும் நெரியும்படி மிகச்சிறிய அளவிலே விரலை யூன்றி, அதனால் அவனுக்கு ஏற்பட்ட புண்ணும் நீங்கும்படிப் பின்னர் அவனுக்கு அருள்செய்த சிவபெருமான் எட்டுத்தோள் களையுடையானாகிய அவன் திருப்புறவம் பதியாகக்கொண்டு தேவர்கள் எத்தித்துதிக்க உமையம்மையாரோடு எழுந்தருளி இருந்தனன்.

9. நெடியான்நீள்தா மரைமேலயனும் நேடிக்காண்கில்லாப்
படியாமேனி உடையான்பவள வரைபோல் திருமார்பில்
பொடியார்கோலம் உடையான் கடல்சூழ் புறவம்பதியாக
இடியார்முழவார் இமையோரேத்த உமையோடிருந்
தானே.

நெடியானாகிய திருமாலும் மலர்மேல் உள்ளவனாகிய பிரம்மதேவனும் எவ்வளவோ தேடியும், காணமுடியாத அடங்காத அழல் உருவாகிய திருமேனியன், பவளமலை போன்ற மார்பின்மீது திருநீற்றினைத் தரித்த அழகன். கடல் சூழ்ந்த திருப்புறவத்தினைத் தனது பதியாகக் கொண்டு, இடிபோல் ஒலிக்கும் முழவுகளைக் கைகளில் கொண்டவராய்த் தேவர்கள் ஏத்தித்துதிக்க உமாதேவியாரோடு எழுந்தருளி இருந்தனன்.

10. ஆலும்மயிலின் பீலியமணர் அறிவில்சிறுதேரர்
கோலும்மொழிகள் ஒழியக்குழுவும் தழலுமெழில்வானும்
போலும்வடிவும் உடையான்கடல்சூழ் புறவம்பதியாக
ஏலும்வகையால் இமையோரேத்த உமையோடிருந்
தானே.

ஆடுந்தன்மையினையுடைய மயிலின் பீலிகளைக் கையிற் கொண்ட சமணர்களும். சிற்றறிவுடையவர்களான பவுத்தர்களும் புனைந்து இயற்றிய வார்த்தைகள் பிற்பட்டு நிற்க, கூடியாரியும் தழலும் எழில் வானும் ஒத்த வடிவமுடையவனாகிய சிவபெருமான், கடல்சூழ்ந்த திருப்புறவத்தினைத் தனது இருப்பிடமாகக்கொண்டு, இயன்ற வகையால் தேவர்கள் ஏத்தித் துதிக்கும்படியாக உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தனன்.

11. பொன்னார்மாட நீடுஞ்செல்வப் புறவம்பதியாக
மின்னாரிடையாள் உமையாளோடும் இருந்தவிமலனைத்
தன்னார்வஞ்செய் தமிழின்விரகன் உரைத்ததமிழ்மாலை
பன்னாள்பாடி ஆடப்பிரியார் பரலோகந்தானே.

திருச்சிற்றம்பலம்.

அழகு பொருந்திய மாடங்கள் நிறைந்த செல்வங்கள் மிக்க திருப்புறவம் என்னும் சீகாழிப்பதியினைத் தனது பதியாகக் கொண்ட மின்னலையொத்த இடையினையுடைய உமாதேவியாரோடு கோயில் கொண்டிருந்த விமலனாகிய சிவபெருமானை, பொங்கிஎழும் அன்பினை மேலும் விளைவிக்கின்ற, தமிழ்விரகனாகிய திருஞானசம்பந்தனது தமிழ் மாலையினைப் பலநாட்கள் பாடியாடுவார் பரலோகத்தினைப் பிரியாது என்றும் அங்கேயே இருப்பர். அதாவது மீண்டும் பூமியில் வந்து பிறவார் என்றருளிச் செய்தனர் என்க.

இவ்வாறு திருக்கடைக்காப்பு சாத்தியபின் முறையோடு பாடும் அருள்பெற்ற ஞானக்குழந்தை சம்பந்தர் கோயிலினின்றும் புறப்பட்டதைச் சேக்கிழார் பெருமான்,

"இன்னிசை ஏழும் இசைந்த செழுந்தமிழ் ஈசற்கே
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற தொடக்கோடும்
பன்மறை வேதியர்காண விருப்பொடு பால்நாறும்
பொன்மணி வாயினர் கோயிலி னின்று புறப்பட்டார்."

என்று விவரிக்கின்றார்.

இங்கு "இன்னிசையோடு மிசைந்த செழுந்தமிழ்" என்றது இவரது திருப்பாடல்கள் ஈசனைக்குறித்தமையால் ஏழிசையும் முயற்சியின்றி தானாகவே செந்தமிழோடு பொருந்தி இயைந்துவிட்டது என்பதாகும். இவ்வருட்திறத்தினைச் சேக்கிழார் பெருமான்,

"காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்(து)
ஆழிய கடலே அதனிடை அமுதே அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தன்திரு வருள்பெற் றனைஎன்பார்,"

என்றபாடலில் திருஞானசம்பந்தரைக் காழியர்களின் தவப்பயனாகவும் கவுணியர்களின் குலதனமாகவும் கலைஞானப் பெருங்கடலாகவும், அக்கடலின் அமுதமாகவும், முன்அடியார் கள் வாழும்பொருட்டு இப்புவியில் அவதரித்துவந்து தேவர் களின் தனிநாயகனான சிவபெருமான்—இறைவியான எழிசை மொழியாள் என்ற இருவருடைய திருவருளையும் ஒருங்கே பெற்றவராகவும் புகழ்ந்துரைக்கின்றார். கோயிலினுள் பாடிய பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் இறைவனை "உமையோடு இருந்தானே" எனக்கூறுவது தமக்குப் பொற்கிண்ணத்தில் பாலூட்டிய உமையம்மையின் கருணையை நினைவில் கூர்ந்த வாறு சீகாழி ஆலயத்தில் இறைவர்க்கு மூன்று சந்நதிகள் இருந்தும் அவர் தோணியப்பராக பெரியநாயகி ஸமேதராக எழுந்தருளியுள்ள சந்நதியின்முன் பாடிய பதிகமோ எனத் தோன்றுகிறது.

திருக்கோயில் வழிபாட்டின் முக்கியத்துவத்தினை உலகிற்கு உணர்த்தவும் அதை வெளிப்படுத்திக்காட்டவும் வந்த பரமாசாரியர் ஆதலால் அருள்பெற்ற மறுநாள் தமது முதல்யாத்திரையாகச் சோழநாட்டில் காவிரியின் வடகரையி லுள்ள திருக்கோலக்காவுக்கு எழுந்தருளினார். அங்கு "மடையில் வாளைபாய" எனத்தொடங்கும் திருப்பதிகத்தைத் தமது சிறுகைகளால் தாளமிட்டபடி பாடியதைக்கண்டு

இரங்கி இறைவர் திருவைந்தெழுத்து எழுதப்பட்ட செம்பொற் தாளத்தினைச் சம்பந்தர்க்கு அருளி அதற்கு இறைவியாரால் ஓசையும் கொடுத்தருளினர். ஆளுடையநம்பிகளும் இவ்வற்புத நிகழ்ச்சியை "இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந் தர்க்கு உலகவர் முன்தாளம் ஈந்த தன்மையாளன்" எனப் போற்றிப் பரவியுள்ளார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

"கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலுங்
கண்டருளிக் கருணை கூர்ந்த
செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும்
எழுதியசெம் பொற்று ளங்கள்
ஐயரவர் திருவருளால் எடுத்தபா
டலுக் கிசைந்த அளாவல் ஒத்த
வையமெலாம் உய்யவரு மறைச்சிறுவர்
கைத்தலத்து வந்த வன்றே."

என்ற பாடலால் கூறுகின்றார். இனி, தக்கராகப் பண்ணில் அமைந்த அவ்வற்புதப்பதிகத்தையும் பொருளோடு நோக்கு வோம்.

திருச்சிற்றம்பலம்

1. மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ.

(பொருள்) மாதர்கள் நீராடுவதால் வாளைமீன்கள் துள் ளும் பொய்கைக் கரையிலுள்ள திருக்கோலக்காவில் எழுந் தருளிய இறைவன், சடையையும் பிறையையும் தாங்கிச் சாம்பலையும் பூசி கீழுடையுடன் இருக்கின்ற திருக்கோலத்தின் காரணம் யாதோ?

2, பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி
கொண்டான் கோலக் காவு கோயிலாக்

கண்டான் பாதம் கையாற் கூப்பவே
உண்டான் நஞ்சை உலகம் உய்யவே.

உமையொரு பாகனுகப் பிறையைச் சென்னியில் அணிந் தவனுமாக திருக்கோலக்காவில் எருந்தருளியுள்ள இறைவன் எல்லோரும் தொழும்படி உலகம் உய்ய நஞ்சை உண்டனன்.

3. பூணற் பொறிகொள் அரவம் புன்சடை
கோணற் பிறையன் குழகன் கோலக்கா
மாணப் பாடி மறைவல் லானையே
பேணப் பறையும் பிணிக ளானவே.

படமுடைய பாம்பினைப் பூணுகவும் சடையினில் பிறை யினையும் அணிந்தவனும் மறைவல்லானுமான இளமையான கோலக்காவில் வீற்றிருக்கும் இறைவனை இடைவிடாது பணிய பிணிகளெல்லாம் மறையும்.

4. தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்
மழுக்கொள் செல்வன் மறிசே ரங்கையான்
குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா
இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மினே.

நம்மைப் பற்றியிருக்கும் பாவம் தளர மழுப்படை உடைய செல்வனும் மானினைக் கையிலேந்தியவனும் பூதகணங்களை உடையவனுமாகிய கோலக்காவில் எழுந்தருளியுள்ள இறைவனைத் தவருது தொழுது வாழுங்கள்.

5. மயிலார் சாயல் மாதோர் பாகமா
எயிலார் சாய எரித்த எந்தைதன்
குயிலார் சோலைக் கோலக் காவையே
பயிலா நிற்கப் பறையும் பாவமே.

மயிலையொத்த உமாபிராட்டியாரை ஒரு பாகமாகக் கொண்டவனும் திரிபுரமெரித்த எந்தையானவனும் சிவபெரு மான் எழுந்தருளியுள்ள குயில்கள் நிறைந்த சோலையுடைய கோலக்காவினை நினைக்க பாவங்களெல்லாம் பறந்து போகும்.

6. வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்
கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்
கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்
அடிகள் பாதம் அடைந்து வாழ்மினே.

பெருகிவரும் வினைகளை நீக்க விரும்பும் மக்களே! கொன்றை மலரணிந்த சென்னியினையுடையவனும் விழாக்கள் பொருந்திய கோலக்காவினை இடமாகக் கொண்டவனுமான சிவபிரானது திருவடியைச் சரணடையுங்கள்,

7, நிழலார் சோலை நீல வண்டினங்
குழலார் பண்செய் கோலக் காவுளான்
கழலால் மொய்த்த பாதங் கைகளால்
தொழலார் பக்கல் துயர மில்லையே.

நீலநிற வண்டுகள் குழலினையொத்த பண்ணொலிக்கும் கோலக்காவினை இடமாகக்கொண்டுள்ள எம்பெருமானின் கழலணிந்த பாதங்களைக் கைகளால் தொழுபவர்களின் பக்கத்தில் துயரம் நெருங்குவதில்லை.

8. எறியார் கடல்சூழ் இலங்கைக் கோன்றனை
முறியார் தடக்கை அடர்த்த மூர்த்திதன்
குறியார் பண்செய் கோலக் காவையே
நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே.

அலைகள் வீசுகின்ற கடல்சூழ்ந்த இலங்கை மன்னன் இராவணனை அவனது இருபது தோள்களையும் நெரித்த மூர்த்தியும், அவன் பண்ணால் தொழ அவனுக்கு அருள்செய்த வனுமாகிய இறைவனுறைகின்ற கோலக்காவினை முறைப்படி தொழுபவர் வினைகள் யாவும் அகலுமே.

9, நாற்ற மலர்மேல் அயனும் நாகத்தில்
ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்
கூற்ற முதைத்த குழகன் கோலக்கா
ஏற்றன் பாதம் ஏத்தி வாழ்மினே,

நறுமணம் பொருந்திய தாமரையில் தோன்றிய பிரம்மனும் பாம்பணையில் பள்ளிகொண்ட திருமாலும் காணவியலாதவனும், எமனை தண்டித்தவனுமாகிய குழகன் கோலக்காவினை இடமாகக்கொண்ட இறைவன் பாதங்களைத் தொழுது வாழ்வீரே !

10, பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்
உற்ற துவர்தோ யுருவி லாளருங்
குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்
பற்றிப் பரவப் பறையும் பாவமே.

தாங்களாகவே பெற்ற மாசுகளை மறையாது வெளிப்படுத்திக் கொள்ளும் சமணரும், காவியாடையால் தம் உருவம் மறைத்த புத்தசமயத்தினரும் பழுதுபட்ட நெறியினை உடையவர். இவர்கள் நெறியினைக் கொள்ளாது திருக்கோலக்காவைத் தொழ பாவங்கள் தொலையும்.

11. நலங்கொள் காழி ஞானசம் பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங்கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே.

பல நலங்களைக்கொண்ட சீகாழியில் பிறந்த ஞானசம்பந்தன் நற்குலம் நிறைந்த கோலக்காவினுறை இறையைப் பாடிய அருள் மிகக் கொண்ட பாடல்களைப் பாட வல்லார்கள் தமது வல்வினை யாவும் நீங்கப்பெற்று சிறப்புடன் வாழ்வர்.

இப் பதிகத்தைக் கேட்ட அளவில் தும்புரு நாரதர் முதலாகிய சுருதி பயில் இசைத்துறையில் வல்லவர்களாகிய தேவர்கள் யாவரும் போற்றித் துதித்து பூவுலகின் மேல் பூமழை பொழிந்தனர். சைவம் வாழும் பொருட்டு அவதரித்த பிள்ளையாரும் இறையருளை போற்றித் துதித்து அங்கிருந்து மீண்டும் சீகாழிப் பதிக்குத் திரும்பினர். இதனைச் சேக்கிழார்,

உம்பருல கதிசயிப்ப ஓங்கியநா
தத்தளவின் உண்மை நோக்கித்
தும்புருநா ரதர்முதலாஞ் சுருதி இசைத்
துறையுள்ளோர் துதித்து மண்மேல்

வம்பலர்மா மழைபொழிந்தார் மறைவாழ
வந்தருளும் மதலை யாருந்
தம்பெருமான் அருள்போற்றி மீண்டருளிச்
சண்பைநகர் சாரச் செல்வார்.

எனும் பாடலில் விவரிக்கின்றார். இதில் 'உம்பருலகம் அதிசயிப்ப' என்பது இசையில் வல்ல தேவர்கள் பலரும் இருத்தலின் அவர்கள்பால் அறிந்த இசை விளக்கங்களுடன் மிகுந்து பிள்ளையாரது இசைப்பாடல் இருத்தலின் தேவர்கள் அதிசயித்தனர் என்பதனை உணரவேண்டும். ஞானசம்பந்தரும் தமது திருப்பந்தணைநல்லூர் பதிகத்தில் தன்னை, "நல்லிசையாளன்" என்றும் "புல்லிசைகேளா நற்றமிழ் ஞானசம்பந்தன்" என்றும் குறிப்பிட்டிருப்பது அவ்வேழாம் நூற்றாண்டிலும் "புல்லிசை"யும் இருந்தது என்றும் அதனைப் பொருட்டாகக் கொள்ளாது இறைவனைத் துதிக்கவே இசையைப் பயன் படுத்தினார் என்பதும் நோக்கத்தக்கது.

திருக்கோலக்காவில் "மடையில் வாளை" பதிகத்தைப் பாடியருளும்பொழுது பொற்றாளம் தரப் பெற்றவராதலின் அதன்பின் சீகாழிக்குத் திரும்பிப் பாடும் முதல் பதிகத்தில் அதே தக்கராகப் பண்ணில் அதே தாள இசையமைப்பில் பாடுவதற்கு மிக்க விருப்பம் கொண்டவராக "பூவார் கொன்றை புரிபுன் சடையீசா" எனத் தொடங்கும் பதினொரு பாடல்கள் அமைந்த பதிகத்தை பாடியருளினார். இவ்வாறு அருள்பெற்றுப் பாடும் தன்மை பெற்ற தம் நெஞ்சத்தை நோக்கி திருவலஞ்சுழி இறைவனை தரிசிக்கும்போது அவ்விறைவனை ஏத்தியும் பாடியும் வழிபட "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என்று கேட்பதோடல்லாமல் இவ்வுலகத்தவரை தன்வழியே செலுத்த "காழிநாதன் வேதியன் ஞானசம்பந்தன் மாதோர் கூறனை நோக்கி நவிற்றிய தமிழ்மாலைகளை ஆதரித்து இசையைக் கற்றுணர்ந்த வல்லவர்கள் மூலம் சொல்லக் கேட்டு உகப்பவர்களுக்கு" வினைகள் தீண்டா என்று திருக்கடைக்காப்பும் சாத்துகிறார்.

சிவம்

(தொடரும்)

உ

# நாதனுர் செய்யும் நடம்

புலவர் பனசை சுவாமிநாதன்,
எம்.ஏ., பி, எட்., (எம். ஃபில்.)

முன்னுரை :

கேட்டிடில் காதுக் கின்பம்
கிளந்திடில் நாவுக் கின்பம்
ஊட்டிடில் உணர்வுக் கின்பம்
உணர்ந்திடில் உயிருக் கின்பம்
பாட்டுரை நடையில் செல்லும்
பைந்தமிழ்ப் பாவாய்.

என, தமிழ்மொழியாம் உயர்தனிச் செம்மொழியை இன்பம் மிக அளிக்கும் ஏற்றமிகு அமிழ்தமெனப் போற்றிடும் கவி உள்ளங்கள் அளப்பிலவாம். உலகில் பல நூறு மொழிகள் பரந்து கிடக்கவும் இதற்கு மட்டும் ஏன் இந்தத் தனிச்சிறப்பு? அள்ள அள்ளக் குறையாத அரும் பெருங் கவிக்கருவூலங்களைத் தன்னகத்தே கொண்டது இது; அம்மட்டோ! உலகம் முழுமைக்கும், காலங் கடந்தும். நிலையான, மாருத கருத்துக் கோவைகளைப் பளிச்சென ஒளிவிட்டுக் காட்டுகின்ற பாக்கள் இதனகத்தே இயைந்துள்ளன. இம்மொழிக்குத்தான் எத்தனை யெத்தனை இலக்கியக் கூட்டங்கள். ஒரு புறம் 'பாட்டும்' 'தொகையும்' முதலான பனுவல்கள். பிறிதோர் புறம் உலக நீதி சொல்லும் ஒண்தமிழ்ப் பதினெண் நூல்கள்; காப்பியக் கவி மலர்கள் அணிவகுப்பு : சிற்றிலக்கியச் செல்வங்கள்— இவை ஒருங்கியைந்து ஓர்புறம். அப்பப்பா! ''மனித வாழ் நாளோ மிகக் குறைந்த அளவினது. அதற்கிடையில் ஒட்ட மிட்டு வரும் நோய்களோ எண்ண முடியாதன. அதற்குள் கரையிலாக் கடல் போன்ற பெரும்பரப்புக் கொண்ட இலக்

கியக் கடலே எங்ஙனம் நீந்துவது—எனக் கவலாதீர்கள். அன்னம்போல—பாலிலிருந்து நீரைப் பிரித்துப் பாலே மட்டும் அது அருந்துவது போல—சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறி வினராகிய நாம் பயில வேண்டியவற்றை மட்டும் தவருமல் பயிலவேண்டும்: அதுபோதும்' என்கிருர் ஒரு தமிழ்க் கவிஞர். அவர்மொழி:—

கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கின் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகில் தெரிந்து.

இது, வள்ளுவனின் வாய்மொழியில் முன்னமே,

'கற்க கசடறக் கற்பவை

என ஒலித்ததல்லவோ?

எனவே, பொழுது போக்கிப் புறக்கணிக்கும் நூல்களின் கவர்வுகளில் ஆட்படக்கூடாது. இறைவனின் பொருள் சேர் புகழை ஓயாது சாற்றும் ஞானப் பனுவல்களை—பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருளைக் காண உதவுகின்ற அறிவை நல்குவதாய—நூல்களையே பயில வேண்டும். அவற்றையும்,

'காத லாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' ஓத வேண்டும், 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்ல' வேண்டும். இத்தகு நெறியை மேற்கொளின், எல்லையில்லா ஆனந்தம் எய்திடலாம்.

இன்தமிழ்க் கவிச்சோலையில் எழிலார்ந்து, இன்பத்தேன் சொரியும் மலர்கள் தம்முள் பக்திச் சுவையையும், முருகியல் இன்பத்தையும் (Aesthetie feelig) ஒருங்கு குழைத்து ஊட்டு வன தெய்வக் கவிஞர் பெருமகனுராகிய ஸ்ரீகுமரகுருபர சுவாமி கள் அருளிய சிற்றிலக்கியச் செம்பொருள்களாம். பதினுன்கு எனப் பேசப்பொறும் அவர் தம் இலக்கியக் கொடைகளாகிய சிற்றிலக்கியங்களில், சிதம்பர மும்மணிக் கோவையும் சீர்

மிக்கதொரு செம்பொன்மணிக் கோவையாம். நன்னடம் புரியும் ஞானக்கூத்தனார்பால் நண்ணி, ஆனந்த வெள்ளத்தில் திளைத்து மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்து, கவிமலர்களால் கோத்து அவர் தம் 'பாதாளம் ஏழினும் கீழ்ச்சொற்கழிவு பாத மலர்' என அருளாளர்களால் போற்றிப் புகழப்பெற்ற திருவடி மலர்களில்—சூட்டப் பெற்றதே இம்மணியாரத்தின் மகிமை தமிழ்கூறு நல்லுலகெங்கும் பரவக்காரணமாக அமைந்தது. பழகு தமிழ்ச்சொல்லருமை கொண்டு, பக்திச்சுவை பரப்பிட அவர் தந்த 'கோவை'யில் கொண்டெடுத்த சில மணிகளைத் தொகுத்துக் காண்பதே இச்சிந்தனையின் நோக்கமாகும்.

மும்மணிக் கோவை :

ஆசிரியம், வெண்பா, கலித்துறை எனும் மூன்று பாக்களும் விரவிட முப்பது பாடல்களால் இயற்றப்படுவது. இதன் பாடல்கள் ஒன்றேடொன்று 'அந்தாதி'யாக அமையும். 'அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி' எனும் யாப்பருங் கலக்காரிகையின் பொருள் விளக்கத் தொடர் ஈண்டு நினைவு கூர்தற்குரியது.

மும்மணியுள் செம்மணிகள் :

ஐந்தாண்டுகாறும் பேசாநிலையில் இருந்து பின் செந்தி நகர்மேய நம் வள்ளிமணாளன் அருளால் பேசும் திறமையும், பழுத்த தமிழ்ப் புலமையும், கைவரப் பெற்ற கவிவலவர் ஸ்ரீகுமரகுருபரர். எனவே அவர் சிந்தையில் கருக்கொண்டு, சொல் வடிவம் பெற்றுப் பொலியும் அத்தனைப் பாடல்களும் நன்மணிகளே. எனினும் அவற்றினுட் சில செம்மணிகளை செம்பொருளை, செம்மேனி அம்மானும் சிவ பரம்பொருளைப் போற்றிப் பரவும் செம்மை மிக்க சில கவிகளை—ஒருவாற்றன் தொகுத்தளிப்பதே நுதலிய பொருளாகும்.

போற்றியாம் பொன்மணி :

எந்தையார்; ஈசனார் என்றெல்லாம் அருளாளர் இறைவனின் அருளாரமுதப் பெருங்கடலில் திளைத்து மூழ்கையில்

போற்றிப் பரவுவது வழக்கம். பித்தா! எனப் பேசிய நம்பிக்கும் அருள் செய்தவன் அவன்.

தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண்மதிசூடி என்று தொடங்கிப் 'பிள்ளை' பாட,

''பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்''

என்று 'அரசு' பரவ,

'பித்தா பிறைசூடி பெருமானே'

என 'நம்பி' தொழுது போற்ற,

'அம்மையே அப்பா ஒப்பிலா மணியே'

எனும் வகையில் அடிகள் மொழிந்து வணங்கிட அவ்வழிகளில் பிறந்த, சிறந்த தமிழ்மறை மொழிகள் நாம் கண்டு, கேட்டு பயின்றவையே.

அவ்வழியில் ஸ்ரீகுமரகுருபரர், தில்லையம்பலவாணரின் ஆனந்தக் கூத்தினை உள்ளங் குளிர, உரோமம் சிலிர்த்து உரையும் தள்ள, விழிநீர் அரும்பத் தன்னை மறந்து தரிசிக்கிறார். அப்போது அவர் வாய் மலர்ந்த போற்றி மலர்கள் தாம் எவ்வளவு பெருமையுடையன என நோக்குவோம்.

தில்லையாகிய அவன்தன் ராசதானியோடு சார்த்தி அவனைப் போற்றும் துதிமலர்கள் சில :

தில்லைச்சிற் றம்பலவன் (1)
நடராசன், பொற்புண்டரீக புரம் (3)
நக்கனார் தில்லை நடராசர் (12)
வலனுயர் சிறப்பில் புலியூர்க் கிழவ (20) (26)
தில்லைச் சிற்றம் பலத்து, மன்றவர். (21)
திருவநீள் மறுகில் தில்லை வாண. (23)
நகைத் தில்லை யான் (31)

அவன்தன் 'கூத்து' அகிலம் புரக்க அருள் செய்யப் பெற்றது. உலகப் பிரசித்தி பெற்றது. நாதமும் பரதமும் ஆகிய கலைகள் நடராஜப் பெருமானின் நல்லருள் தோற்றத்

தையே அடிப்படையாகக் கொண்டு ஒருங்கியைந்து பொலி வன ஆகும். அருளாரமுதப் பெருங்கடலாம் அவன்தன் ஆடல் மாண்பினைக் கண்ட முனிவர், அதை, நினைக்குந்தோறும் பேசும்தொறும் எப்போதும் அனைத்தெலும்பு உள் நெக ஆனந் தத்தேன் சொரிவதெனப் போற்றி மகிழ்கின்றார்.

'சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
அற்புதக் கூத்த' (2)
தெய்வப் புலியூர் வைதிகக் கூத்த (5)
அருள்முந் துறுத்த ஐந்தொழில் நடிக்கும்
பரமா னந்தக் கூத்த (11)
மன்று ளாடுமா னந்தத் தேன் (14)
நஞ்சங் களத்தும், வாமத் தமுதமும்
வைத்தாடு மானந்த மாக்கடலே (22)
தில்லை மன்றினுள் நின்றாடிய கூத்தன் (25)
நன்னடம் புரியும் ஞானக் கூத்த (29)
'ஓடியகட்-காதனார் காணவொரு கால்காட்டிக் கையமைத்து
நாதனார் செய்யும் நடம்'—(30)

வடிவழகு போற்றும் வான்மணி :

'செம்மேனி அம்மான்' என்றும், 'பவள வெற்பு' என்றும் அப்பெருமானின் திருமேனிப் பொலிவினையும், திருவுருவ வனப்பையும் அழகோடு இசைகூட்டி அருந்தமிழில் தெரிந் துரைத்தனர் அருளாளர். 'தொடுக்கும் கடவுட் பழம்பாடல் துறையின் பயனே!, எனப்பிறிதோரிடத்துச் செப்பிய இச்செம் மலார் செம்பொருளாம் சிவபரம்பொருளின் திருமேனி வடி வழகில் திளைத்து நீந்துகிறார். அதனிடை மூழ்கி முத்துக் குளிக்கிறார். முத்துக்கள் விலை மதிப்பில்லாத தமிழ் முத்துக் கள் நமக்கும் தருகிறார், பெற்றுக்கொள்வோம்.

சிற்றம் பலத்தெம் காருண்ட கண்டனை (7)
செஞ்சடைக் கிடந்த வெண்மதிக் கடவுள் (5)
முக்கட் பரனார் (16)
திங்களங் கண்ணித் தில்லை வாண (17)

அருட்செயல் விளம்பும் அருமணி :

அவர் மன்பதைகள் பொருட்டுச் செய்தருளிய விளையாடல்களை—திருவருட் செயல்களைத் தமக்கேயுரிய செந்தமிழ் நடையில் சொற்சுவையும், பொருட்சுவையும் தோய, பக்திச்சுவை பரவ, வடித்துத் தருகிறார் கவிஞர்.

'தக்கனார் வேள்வி தகர்த்துச் சமர்முடித்த
நக்கனார்' (12)
காற்றேர்க் குடம்பைக் காமப்புட் படுக்கத்
தீப்பொறி வைத்த திருநுதற் கண்ண' (14)
ஆதி நான்மறை வேதியற் பயந்த
தாதை யாகிய மாதவ ரொருவரும்
இருங்கா ளத்தி யிறைவர்முன் னுண்ண
அருஞ்சா பத்தா லமுதமூ னுக்கும்
நற்றவ வேடக் கொற்றவ ரொருவரும்
ஒருபிழை செய்யா தருள்வழி நிற்பவவ்
இருவர்கண் பறித்த தரும மூர்த்தி (14)
கண்ணகன் ஞாலத் தெண்ணில் பல்கோடிப்
பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்திக்கு
நெல்லிரு நாழி நிறையக் கொடுத்தாங்கு
எண்ணான் கறமும் இயற்றுதி நீயென
வள்ளன்மை செலுத்தும் ஒண்ணிதிச் செல்வ (14)
பைந்தமிழ் நவின்ற செந்நாப்புலவன்
ஐந்திணை யுறுப்பி னுற்பொருள் பயக்கும்
காமஞ் சான்ற ஞானப்பனுவற்குப்
பொருளெனச் சுட்டிய ஒரு பெருஞ் செல்வ!
திருத்தொண்டத் தொகைக்கு முதற்பொரு ளாகி
அருமறை கிளந்தநின் திருவாக்கில் பிறந்த
அறுபதிற் ருகிய ஐம்பதிற்று முனிவருள்
ஒருவனென் றிசைத்த இருபிறப் பாள (23)

என்பன அவை.

ஐந்தொழில் மேன்மை சாற்றும் அழகுமணி :

இறைவன் உலக உயிர்களின் நன்மையைக் கருத்தில் கொண்டு படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்தொழில்களையும் செய்தருள்கிறான். இவ்வரிய திருவருட்செயலை எம்பெருமான் இயற்றுகின்ற மேன்மையை,

> காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி'
> ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
> போக்குவாய் என்னை'
> செழும் பொழில்கள் பயந்துகாத் தழிக்கும் மூவர்
> கோனாய் நின்ற முதல்வன்,

என்றெல்லாம் திருமுறைகண்ட பெருமக்கள் பாராட்டி மகிழ்வர். இவ்வழியில் நின்று நம் கவிஞர் திலகமும்,—தேவலோகமும், நானிலப் பரப்பும் ஏனைய உலகமும், உயிர்களும், படைத்துத் தந்தது உடுக்கையை அணிந்த ஒரு கரம்; தனித்தனியே படைத்த எல்லாவற்றையும் காப்பது அபயத் திருக்கரமாகிய ஒரு கரம்; எல்லா உயிர்களையும் சங்காரம் (அழிப்பது) செய்வது அனல் ஏந்திய ஒரு கரம்; இதுவரை ஈட்டிய இருவினைப் பயன்களை நுகரச் செய்து அருள்வது (திரோபவம்) மறைப்பைச் செய்வது—ஊன்றி நின்ற ஒரு திருவடியாகும். தன்னை அண்மி வந்து தொழுத உயிர்கட்கு அளவில்லாத பேரின்பத்தைக் கொடுப்பது குஞ்சித பதமாகிய—வளைந்த திருவடி ஆகும். இவ்வைந்தும் அவனுடைய 'மெய்த்தொழிலாகும்' என விரிவாகச் சொல்கிறார். கரங்கள் மூன்றும், திருவடி இரண்டும் ஐந்தொழிலையும் செய்தருள்வதாகக் கூறுகிறார். இது நடனக் கோலத்தில் கொண்ட குறிப்பாகும்.

இத்தொழிலைந்தும் மெய்த்தொழிலாக,

தாய் மருந்துண்ணும் தகைமைகாட்டும் தனிமணி :

தாய் என்னும் உறவு, மன்பதைகட்கு நலமே எண்ணி, நலமே செய்வது. தான் துன்புற்றாலும் தன் குழவி நலம்பெற

வேண்டும் என எண்ணுவது. குழந்தையின் நலனுக்காக, அதன் உடல் நலத்துக்குத் தீங்கு தரும் பொருட்களை அவை தனக்கு மிகவும் உவப்பளிப்பதாய் இருந்தபோதிலும் அவற்றை வெறுத்தொதுக்குவது. மணமிகு மலர்களை சூடல் மங்கையரின் இயல்பும், இன்றியமையாமையும் ஆகும். மலர் மணம் குழந்தைக்கு ஊறு செய்யுமே எனக் கருதி தாய் அதைக்கூடச் சூடாமல் தவிர்ப்பாள். இத்தகு தியாக சீலங்கள் உடைய அன்னைக்காகக்கூட, தவருன செயல்களைச் செய்து தவருன வழியில் பொருள் ஈட்டக்கூடாது; அதைக்கண்டு சான்ருேர் பழிக்கக்கூடாது—என அங்கும் அன்னைக்கே தனி முதன்மை தந்து போற்றுகிறது 'உலகப் பொது மறையாம்' குறள்.

> 'ஈன்ருள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
> சான்ருேர் பழிக்கும் வினை'

அத்தகு குணநலமிக்க தாய், ஒரு சமயத்தில் கோபம் கொண்டு மகவைத் தண்டித்தாலும், அதுவும், அதன் நன்மையைக் கருதியே அதனிடத்துள்ள தீய பண்புகளை நீக்கவே என ஸ்ரீகுமரகுருபரர் பிறிதோரிடத்துச் சுட்டுவர்.

> அன்னைமுனி வதுந்தனயர்க் கருள்புரிதற்கே யன்ருே?
> (சிதம்பரச் செய்யுட்கோவை—68)

இறைவனைத் தந்தையாகவும், அம்மையைத் தாயாகவும் கொண்டு போற்றியன தொண்டில் கனிந்த தூய அருள் உள்ளங்கள்.

> 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து'
> (திருவாசகம்)
> 'தாயினும் நல்ல தலைவர்' (சம்பந்தர் தேவாரம்)
> 'எந்தை யாய் எம்பிரான்' (திருவாசகம்)

என்பன அவ்வாக்குகள்.

அன்னையானவள், தன் குழவிக்கு உடல்நலம் குன்றும் போது மருந்து கொடுக்க முனைகிருள். அம்மருந்தோ

சக்தியும் வீர்யமும் மிக்கது. அம்மருந்தை உண்ண வேண்டிய குழவியோ சின்னஞ்சிறியது. அதன் குடலோ மிகவும் மென்மையானது. இம்மருந்தைத் தாங்கும் சக்தி அதற்குண்டோ என ஐயமுற்று, அஞ்சிப் பின் அதனைத் தானுண்டாள். அதன் பின் அம்மருந்து சீரணமாகி இரத்தத்தில் கலக்க, அவ்விரத்தத்தையே பாலாக்கி அம்மகவுக்கு அளித்து அதன் நோயைத் தீர்க்கிருள். என்னே தியாக உள்ளம்! அப்படியாயின், எல்லாத் தாய்களுமே, முல்லைக் கொடிக்குத் தேரை மட்டும் ஈந்த பாரி, மயிலுக்குப் போர்வை தந்த பேகன், தமிழ்ப்புலமைக்குத் தலையை அளிக்க வந்த குமணன், புருவுக்குச் சதையீந்த சிபி மன்னன் ஆகியோரைவிட உயர்வாக அல்லவா போற்றப்பெற வேண்டும்? போற்ருவிடினும் அவ்வுள்ளத்தை வருந்தா வண்ணம் வாழ்வது மட்டுமாவது செய்ய வேண்டும். அகிலம் ஈன்ற அன்னையும், அப்பனும் எல்லோருக்கும் அம்மையப்பர் ஆவர். அவர்கள் அம்மையப்பர் போலவே உயிர்களுக்கு அருள்செய்வர்.

> 'அம்மை யப்பரே உலகுக்கு அம்மையப்பர்
> அம்மை யப்பர் அப்பரிசே வந்தளிப்பர்'

எனும் ஞானநூல் வாக்கு ஈண்டு நினைதற்குரியது. உலகம் காக்கும் உயர் பெருமாட்டி, தாயைப்போலப் பரிவுடன் அப்பனின் திருவருட் பொலிவுடன் கூடிய திருக்கூத்தைத் தான் தரிசித்து அதன் பயனை மட்டும் உயிர்களுக்கு ஊட்டுகிருள் எனும் கருத்தமைய கவிஞர்கோ அளிக்கும் கவிதைத் தொடர்கள் இவை;

> ''பாலுண் குழவி பசுங்குடர் பொருதென
> நோயுண் மருந்து தாயுண் டாங்கு
> மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப
> வையமீன் றளித்த தெய்வக் கற்பின்
> அருள்சூல் கொண்ட ஐயரித் தடங்கண்
> திருமாண் சாயல் திருந்திழை காணச்
> சிற்சபை பொலியத் திருநடம் புரியும்
> அற்புதக் கூத்த'' (2)

முடிவுரை : செந்தி நகர்க் கந்தனே, கருணைத் திருவுரு வாய்க் காசினிக்கே தோன்றிப் பழுத்த தமிழ்ப் புலமை பாலிக்க, பண்ணும் பரதமும் கவி சொல்லவல்ல நல்வித்தை யும் பெற்றுக் கவிபாடிய கோமகனின் கொடையாகிய இலக் கியச் சோலையில் மலர்ந்த எண்ணிலா மணமிகு பொன்மலர் களில், பருந்தின் வீழ் அப்பார்வையில் ஒரு சிலவற்றைக் கண்டு காட்ட முயன்றது இச்சிந்தனைத் தொகுப்பு.

கூடும் கதியொருகால் கும்பிட்டால் போதுமென
நாடு மவிநயத்தை நண்ணிற்ருல்—ஓடியகட்
காதஞர் காணவொரு கால்காட்டிக் கையமைத்து
நாதஞர் செய்யும் நடம்.

சிவம்

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# சொன்மலர்க்கொவ்வாது ஒண்மலர்

வித்துவான் : பொன். முருகையன்,
B.Litt., B.Ed., (M.A.,)

கல்தோன்றி மண்தோன்றுக் காலத்தே முன்தோன்றி மூத்தது எனப் போற்றப் பெறுவது தமிழ்க்குடியாகும். அத் தமிழ்க்குடி, தான் புகழொடு தோன்றியது மட்டுமல்லாமல், பின்வரும் சந்ததியினரும் தமிழனென்று சொல்லவும், தலை நிமிர்ந்து நிற்கவும் ஏதுவான பல அரிய இலக்கிய, இலக்கணக் கருவூலங்களை வழங்கிச் சென்றது. 'மன்னு உலகத்து மன்னு தல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந்தனரே' எனும் புறப்பாட்டின் பொருளைத் தமது வாழ்க்கையில் மெய்ப்பித்துக் காட்டினர். அவ்வழியில் நாம் இன்று பெற்றுள்ள—கேடில் விழுச்செல்வம் கல்வியே. மற்றவை மாடல்ல'' என உணர்ந்த முன்னோர் விட்டுச் சென்றுள்ள—தமிழ்ப் படைப்புகளில் தனிச் சிறப்புடையது தொல்காப்பியம். இன்றுள்ள தமிழ் நூல்களில் மிகப் பழமையானதும், இலக்கணம் என்ற துறைக்கே இன்றுள்ள இலக்கண நூல்களில் முதன்மையானதும், ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இயற்றப் பெற்றிருத்தல் வேண்டும் என அறிஞர் உலகத்தார் கருதுவதும் ஆகிய உயர் நலங்களைத் தன்னகத்தே கொண்டது இந்நூலாகும்.

சுவையைத் தருகின்ற பொருளும், அதனை நுகர்கின்ற பொறியும் சேர்ந்துழி உண்டாகின்ற சுவைகளை எட்டு எனப் பட்டியலிட்டுக் காட்டும் தொல்காப்பியம். நகை,

அழுகை, இளிவரல், மருட்கை. அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன அவை.

> நகையே அழுகை இளிவரல் மருட்கை
> அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
> அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப.
> (தொல்காப்பியம்—மெய்ப்பாட்டியல் நூற்பா)

எனும் நூற்பா இதனை விளக்குவதாகும். இவற்றுள் அடங்காததும், இவை எல்லாவற்றையும் விட உயர்ந்ததும், உடலுக்கு இன்ப துன்பம் பயக்கும் இவற்றைவிடச் சிறந்ததாய் உணர்வுக்கே உவப்பூட்டுவதும் ஆகிய ஒரு மெய்ப்பாடுதான்—சுவைதான்—பக்தியென்னும் சுவையாகும். பக்தி என்பது, குரு பக்தி. பதிபக்தி, பெற்றோரிடத்துப் பக்தி எனப் பலவகைப் பட்டதாயினும் 'பக்தி' யென்று சொன்னவுடன் அது சிறப்பாகக் கடவுள் மாட்டுக் கொள்ளப்படும் பக்தியையே குறிப்பதாகும். பக்திப் பரவசம் என்பது உணர்வு பூர்வமான ஓர் அனுபவம். பக்திச்சுவை வயப்பட்டால் இவ்வுலக இன்ப, துன்பங்கள் எதிரே தோன்றமாட்டா. அப்போது இறைமையும், ஆன்மாவும் ஆகிய இரண்டுமட்டுமே எஞ்சிநிற்கும். ஜீவன் எந்தவிதப் பற்றுமின்றிச் சிவத்தில் கலக்கும் நிலையை எய்துவிக்கும் மார்க்கமே பக்திச் செந்நெறியாகும்.

> எல்லாமற என்னை யிழந்த நலம்
> சொல்லாய் முருகா சுரபூ பதியே (கந்தர் அனுபூதி)

> தன்னை மறந்தாள் தன்னுமங் கெட்டாள்
> தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே
> (அப்பர் தேவாரம்)

என அருளாளர்தம் அனுபவ உரைகள் சுட்டிக் காட்டுவன இப் பக்திப் பெருக்கையே. அந்த நிலையை எய்தியவர்கள், கும்பிடலே அன்றி வேறெதுவும் விரும்ப மாட்டார்கள். ஏன், அந்தமில் இன்பத்து அழிவில் முக்தியைக்கூட விரும்பமாட்டார்கள். இன்பமும், துன்பமும் ஒன்றென மதிக்கும் செல்வத்

தைப் பெறுவர் என பக்திக்கும், பக்தி வயப்பட்ட அடியார்க்கும் அடையாளங்களை வகுத்தவர், பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவர் எனச் சான்றோர்களால் போற்றப் பெற்ற சேக்கிழார் பெருமான் ஆவார்.

"பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னார்கள் தலையினால் வணங்குமாபோல்"
(பெரிய புராணம்)

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.
(பெரிய புராணம்)

என்பன அவர்தம் அருள்மொழிகள்,

மேலும் பக்திவயப்பட்ட பரமன் அடியார்கள், 'எந்நிலையில் நின்றாலும் எக்கோலங் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன்தான் மறவாமை பொருள்' எனக் கொண்டவர்கள் எனச் சேக்கிழார் குறிப்பிடுவார்,

இத்தகைத்தான பக்திப் பெருநெறியில் ஈடுற்றுப் பரமன் திருவடியே பற்றுக்கோடு என உணர்ந்து பாகாய்க் குழைந்து உருகிப் பரவசமுற்றுப் பாடல்நூறு படைத்துச் சுவையூட்டிய கவிஞர் பெருமக்களுள் ஸ்ரீ குமரகுருபர முனிவர் எனப் பெறும் கவிஞர் கோமகனும் ஒருவர். ஏறத்தாழ 14 சிற்றிலக்கியங்களைப் படைத்துத் தந்து 'சிற்றிலக்கியச் சக்கரவர்த்தி' எனப் போற்றத்தகும் பெருமை மிக்கவரும், திருச்செந்தூர் ஸ்ரீசெந்திலாண்டவன் திருவருளைப் பெற்றவரும், 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்' பாடி அம்மையால் முத்தாரம் அணிவிக்கப் பெற்றவரும், சைவமும் தமிழும் இருகண் எனக்கொண்டு அவற்றைச் சந்ததமும் வளர்த்த பெருமை மிக்கவரும் சாத்திரம், தோத்திரம் என்னும் இரண்டு வகைக்கும் தனித்தனியே நூல்கள் செய்ததோடு இருபொருளையும் ஏற்புற, இடமறிந்து குழைத்துத் தந்தவரும் ஆகிய கவிஞர் கோமகனார் பக்திச் சுவை

சொட்டும் பாமலர்களைத் தமிழ் உள்ளங்கட்குத் தனிப்பெரும் கொடைகளாகக் கொடுத்துள்ளார். பக்திச் சுவையே சுவைகளுள் உயர்ந்தது. பக்திப் பாடல்களே சிறந்தவை. இப் பாடல்களை வழங்கும் கவிஞரே உயர்ந்தவர். இவர்களைவிட, பிரம்மனும் சிறிது தரம் குறைந்தவனே; அவன் படைப்புகள் (உடல்கள்) விரைவில் அழிந்துவிடும்; ஆயின் கவிஞர் தம் படைப்புகளோ காலத்தால், இடத்தால் அழியாது என்றும் வாழும் (Classic) இயல்புடையன" என்கிருர் பிறிதோரிடத்தில்.

கலைமகள் வாழ்க்கை முகத்தது எனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயாப் புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு.

(நீதிநெறி விளக்கம்)

என்பது அப்பாடல்.

"பொன் அணிகலன்களைச் சூடும் அரசரினும், அவற்றை அணியாது, கல்வியாகிய அணியை மட்டும் கொண்ட அரசரே உயர்ந்தவர். பிற உறுப்புகள் பொன்னுல் ஆகிய ஆபரணங்கள் பலவற்றைத் தரித்துக்கொண்டு அழகுடன் திகழ்கின்றன. இருப்பினும் அணிகலனே தரிக்காத காணும் கண்ணைப்போல அவை உயர்ந்ததல்ல" என உவமை முகத்தான் கவிஞரின் உயர்வை அழகுற விளக்குவர் சிவப்பிரகாச சுவாமிகள்.

"பொன் அணியும் வேந்தர் அதுபுனையாப் பெருங்கல்வி
மன்னும் அறிஞரைத் தாம் மற்ருெவ்வார்".

என்பது அவர் வாக்காகும். இப்படிப்பட்ட செம்மை நலங்கள் மிக்க கவிஞர் கூட்டத்தில் நமது சுவாமிகள் தன்னிகர் இல்லாத் தனிப்பெருங் கவிஞர் ஆவார். இவர் தம் கைவண்ணத்தில் மிளிர்ந்து இறைமையின் மேன்மை, அருட்செயல்கள், அடியவர்க்கு எளிவரும் சௌலப்யத் தன்மை ஆகியவை கலந்த வண்ணத்தில் மின்னிடும் கவி முத்துக்கள் கணக்கில. அவற்

றுள் திருவாரூர் நான்மணிமாலை எனும் அற்புதப் பிரபந்தத்தில் அமைந்திட்ட அரிய கருத்துக் கோவைகளைச் சொல்ல முயலும் முயற்சியில் கனிந்ததே இக்கட்டுரைக் கனியாகும்.

நூல் பெயர் :

இந்நூல் ஆரூர் மேவும் தியாகேசப் பெருமானின் சீர் பரவும் செந்தமிழ் மாலையாகும். நான்கு விதமான மணிகளைத் தொடுத்து மாலை செய்வதுபோல, நான்கு விதமான பாக்களால் தொடுக்கப் பெறுவது நான்மணிமாலையாகும். கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம். வெண்பா, ஆசிரியப்பா ஆகிய பாக்களை முறையே அந்தாதியாக அமையப் பாடப் பெறுவது. நாற்பது செய்யுட்கள் அமையும். இதன் கண் பல அகத்துறைச் செய்திகள் விரவி வருகின்றன.

உள்ளுறை உயர் நயம் :

இந்நூலின் உள்ளே காணப் பெறும் உயர்ந்த நயமிகு பாடல்கள் பல. அவற்றுள் குறிப்பிட்ட சிலவற்றை மட்டும் இங்கு தொகுப்பாகத் தருகிறேன்.

தோற்றப் பொலிவு :

தியாகப் பெருமானும், தேவியும் சிங்கஞ்சுமக்கின்ற மணி பதித்த அரியாசனத்தில் அழகொழுக வீற்றிருக்கின்ற காட்சியைக் கண்ட கவிஞர்க்கு, இரவும் பகலும் மாறிமாறி வருவதல்லாமல் இரண்டும் கலந்து ஒரே நேரத்தில் அருகருகே இருந்தாற்போல அது தோன்றுகிறது. இவ்வாறு இல்லாத பொருட்டன்மை ஒன்றை உவமையாக்கிக் கூறினமையின் இது இல்பொருளுவமை என அணியிலக்கணம் கூறும் சிறந்த அணிநலம் அமையச் சிறந்து காணப்பெறுகிறது.

கங்குலும் பகலும் கலந்தினி திருந்தாங்கு (5)

அப்பெருமானுக்கு ஆடைகள் வேண்டுமே; நமக்காயின் ஆடைகள் வாங்குவதும் அணிவதும் எளிது. ஆயின் இறைவனோ அண்டத்துக்கெல்லாம் தலைவன், திசைகளைக் கடந்தும்

அவன் தன் திருக்கரங்களும், திருவடிகளும் விளங்குவதாகப் புராணங்கள் கூறும். அப்பேர்ப்பட்ட பேருரு உடைய பெம் மானுக்கு ஒளி பொருந்திய பகல் பொழுது வெள்ளையாடை யாகும்; இரவுப்பொழுது கரிய ஆடையாகும். மாலைப் பொழுதோ சிவந்த ஆடையாகும். இவற்றையன்றி அவனுக் குச் சிறந்த ஆடைகள் என எவற்றைச் சொல்வது எனும் கருத்தமைய, ஒரு பாடலில்,

வீங்கு பகற்போது வெண்படமாம்—தூங்கிருள் சூழ்
கங்குற் பொழுது கரும்படமாம் செம்படமாம்
பொங்குற்ற புன்மாலைப் போது. (6)

என உரைக்கிருர்.

மாநிலத்தில் இல்லாத மகிமை :

'உடையார் முன் இல்லார்' என வள்ளுவன் கூறியதற் கொப்ப இவ்வுலகில் பொருள் உடையார் ஒரு புறமும், அது இல்லாது வருந்தும் ஏழையர் ஒரு புறமும் இருக்கக் காண் கிறோம். கம்பன் கண்ட இலட்சிய இராஜ்ஜியத்தில் மட்டுமே, 'கொள்வார் இலாமையால் கொடுப்பார்களும் இல்லை மாதோ' எனும் அதிசயத்தைக் காணமுடியும். மற்றிடங்களில் எல்லாம் மேற்கூறிய இரண்டு இயற்கையே—களிறு, பொன் மணி ஆகியவற்றை அன்புடன் அளிப்பவரும், சிறிதும் நாண மின்றி வறுமை துரத்த அதை ஆவலுடன் ஏற்பவரும் ஆகிய இரு இயல்பே—உள்ளது. ஆனால் இயற்கையின் இறந்த ஒரு அற்புதத் தன்மை ஓரிடத்தில் அமைந்துள்ளது. அது எவ்வாறு நிகழ்கின்றது? எங்கு எந்த நாட்டில், நிகழ்கின்றது? ஆம், உலகம் முழுவதும் உவப்புடன் வாழ முப்பத்திரண்டு அறங்களை ஒரு பெருமாட்டி செய்கிருள். ஆயின் அவ் அறச் செல்வியின் துணைவரோ, பிரமகபாலம் கையிலேந்தி, ஊர் ஊராகப் பிச்சையேந்துகிருர். ஒரே உடம்பாகிய அப்பனின் திருமேனி யில், இடப்புறமாகிய அம்மையின் பாகம் அறம் வளர்க்கிறது. ஆயின் அப்பனின் அருட் கூறே காபாலியாய்ப் பிச்சையேந்து

கிறது. இது இறைவரிடத்தன்றி வேறு உலகில் எங்கும் கிடையாது என்று அற்புதச் சுவை தோன்றப் பாடுகிருர்.

ஒருகா லத்தி லுருவமற் றென்றே
இடப்பால் முப்பத் திரண்டறம் வளர்ப்ப
வலப்பால் இரத்தல் மாநிலத் தின்றே... (9)

தியாகர் என்பது தகுமோ ?

உலகில் மக்கட்குப் பெயர் சூட்டுகையில் யாதோ ஒன்றன் அடிப்படையில் சூட்டுவர். அவர் வளர்ந்து பெரியவர் ஆகை யில் அது பொருந்துவதும் உண்டு. முரண்பட்டு அமைவதும் உண்டு. இளவழகன் என்ற பெயருடையான் அருபியாகவும் தாமரைக்கண்ணன் எனும் பெயருடையான் ஒன்றரைக் கண்ணனுகவும், தேன்மொழி எனும் பெயருடையாள் கரகரத்த குரலுடையாளாகவும், அறிவுச் செல்வி என்பவள் முட்டாளாக கவும், வறுமை மிக்கவள் ஆகவும் அமைவதும் உண்டு.

ஆரூரில் மேவி அன்பர்தம் அரந்தை தீர்க்கும் பெரு மானுக்குத் தியாகேசர் எனும் அழகுத் திருநாமம் உண்டு; அது முற்றிலும் பொருந்துமா என அணுகி ஆராய்கிருர் கவிஞர்.

இவர், உலகம் முழுவதையும் படைத்தார். ஆனல் தனக் கென அதை வைத்துக் கொள்ளவில்லே. திருமாலாகிய கடவுளுக்கு அவ்வுலகை (மண்மகளே) உவப்புடன் தந்து விட்டார். பின், எண்ணில் பல்கோடி நவநிதிகளேப் படைத் தார். அவற்றையும் விருப்பத்துடன் மறைத்து வைத்துக் கொள்ளாது, குபேரனுகிய ஒருவனுக்கு நல்கினர். எனக்குப் பெறுதற்குரிய நற்பேருகிய மோட்சத்தை (வீடுபேற்றை) வழங்கினர். ஏன், தன்னுடைய உடலேயாவது தனக்கென வைத்துக் கொண்டாரா எனில் அதுவும் இல்லே. அதிலும் ஒரு பாதியை உமையம்மைக்குத் தந்து உமையொரு பாக ஞய்க் காட்சியளிக்கிருர். எனவே இவர் எதையுமே தனக்கென வைத்துக் கொள்ளாது எல்லாவற்றையும் பிறர்க்கே ஈந்து விட்டார். எனவே இவர் பெரும் தியாகசீலர், கொடையில்

சிறந்தவர் என உலகமும், இலக்கியங்களும் ஒருங்கு போற்றிடும் உயர் அறச்செம்மல்களான பாரி, பேகன், சிபிமன்னன் ஆகியோரைப் பாராட்டிப் புகழும் நம்மனோரால் இறைவனின் இத்தகு சிறப்பு நலத்தை எவ்வாறு போற்றிப் புகழ்வது. அது இயலாதன்றே? உள்ளதை உள்ளபடியே கூறுவது முகஸ்துதி ஆகாது. அது, அவர்கள், சிறப்புநலம் கருதிய—தியாகர் என்ற பொருள்நலம் மிக்க பெயரேயன்றிப் பொய்ம்மை உரையன்று, புகழுமன்று என வித்தகம்படப் பேசுகிறார்.

'தியாகரென்பது, ஐயரிவர்க்கே தகுமுகமன்
அன்று புகழு மன்றுமே' (24)

இருந்தாடல் ஏன்?

தியாகேசப் பெருமான் திருஆரூர்ப் பதியில் இருந்தாடழகர் என்னும் திருநாமத்தால் போற்றப் பெறுவர். அவ்வாறு, அவர் திருவடிமலர்களைத் தூக்கி ஆடாமல். இருந்தாடுகின்ற இயல்பைக் கண்ட இக்கவிஞர் இரண்டு காரணங்களை அதற்குரியனவாகக் குறிப்பிட்டுப் பாடுகிறார். அவ்வாறு இருந்தாடாமல், திருவடி தெரியும்படி நின்றாடுவர் ஆயின், முன்னர்த் திருவடி காணாது அலமந்த திருமால் இப்போது நான் திருவடியைக் கண்டு விட்டேன் என உறுதி கூறுவார்; மேலும், முன்னொரு முறை மார்க்கண்டேயற்காக பாசக் கயிற்றுடன் வந்த கூற்றுவனை ஆற்றல்பட உதைத்துத் தள்ளியது சிவபரம்பொருள். மீண்டும் திருவடியைத் தூக்கினால் கூற்றுவன் அதைக் கண்டு அஞ்சுவான். ஆகவே இவ்விரண்டு காரணங்களையும் திருவுளங்கொண்டே அவர் இருந்தாடுகின்றார் எனச் சமற்காரமாக மொழிகின்றார்.

கண்ணனார் பொய்ச்சூள் கடைப்பிடித்தோ தென்புலத்தார்
அண்ணலா ரஞ்சுவரென் றஞ்சியோ (18)
இருந்தாடு கின்றவா !

கவிஞர் இயல்பாக நிகழ்கின்ற ஒன்றைக்கண்டு, அதற்கு பிறிதோர் காரணம் கற்பித்து, அதில் தன் கருத்தை ஏற்றிக் கூறுவதால் இது தற்குறிப்பேற்றம் எனும் பொருளணி ஆகும்

பெயர்பொருள் அல்பொருள் எனஇரு பொருளினும்
இயல்பின் விளைதிறன் அன்றிப் பிறிதொன்று
தான்குறித்து ஏற்றுதல் தற்குறிப் பேற்றம்.
(தண்டி அலங்காரம்)

என்பது அவ்வணியின் இலக்கணம் ஆகும்.

ஒண்மலர் சொல்மலர்க்கு ஒவ்வாது:

இறைவழிபாட்டில் மலர்கொண்டு அர்ச்சித்தல் மிகவும் இன்றியமையாததும், சிறந்ததும் ஆகும்.

'அரும்பிட்டுப் பச்சிலையிட்டு ஆட்செய்யும் அன்னை' என இவரே வேறோரிடத்துக் கூறுவர்.

'இருந்துநல மலர் புனையேன்'—என்பர் மணிவாசகர்.

'யாவற்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை' இது திருமந்திர மொழி.

'போதும் பெருவிடில் பச்சிலையுண்டு' பட்டினத்துப் பிள்ளையின் வாக்கு இது.

இத்தகு பெருமைமிகு மலரை விடச்சிறந்த மலர் உண்டா? உண்டு;

திருமாலாகிய கடவுள், சிவபரம்பொருளை நியமமாக வழிபட்டு வருகிறான். அப்போது ஆயிரம் மலரில் ஒருமலர் குறைந்திட, உடனே சிறிதும் தயங்காது தன் கண்மலரையே சாத்தி வழிபடுகிறான். அவ்வாறு கண்மலர் சூட்டியும் இறைவனின் திருவடியை அவனால் காணமுடியவில்லை.

ஆயின், சுந்தரரோ இறைவனைப் பரவையார் பால் தூது செல ஏவி அவர்தம் திருவடிகளை எளிதில் கண்டுவிட்டார். அவர் என்ன மலர் சூட்டினார். அது பண்ணியைந்த பாமலர்.

எனவே, ஒண்மலரைவிட, மணமிகு மலரைவிட, கண்ணாகிய மலரைவிட, பண்ணியைந்த பாமலரே இறைவற்கு உகந்தது என்பது முடிவாகிறது. ஒண்மலர் சொல்மலரை ஒவ்வாது. இதனை அப்பெருமானே சொல்லியருளினானே!

'அர்ச்சனை பாட்டே யாகும் ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்'
(பெரிய புராணம்)

இதனைக் கருத்தில் கொண்ட கவிஞர் கூறுவது இது:
ஒண்மலர் சொல்மலர்க் கொவ்வாது போலும் மற்றோர் புலவன்
பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால்சிவந்த
கண்மலர் சாத்தியும் காண்பரி தானகழல்மலரே. (31)

தோகையின் உடனுறை துணிவு:

அச்சந்தரக்கூடிய பொருளைக் கண்டாலே அச்சவுணர்வு பெருகும். அதுவும், 'பாம்பென்றால் படையும் நடுங்கும்' பாம்பென்று சொல்லக்கேட்டாலே அச்சம் தரும் என்பது வெளிப்படை. ஆயின், அச்சந்தரக்கூடிய பலபொருள்கள் உடனிருந்தும் அஞ்சாமல் ஒருவர் இருந்தால் அது ஆச்சரிய மன்றோ? அதற்கும் ஒரு காரணம் இருக்குமன்றோ?

சிவபெருமான், கண்டார்க்கு அச்சம் மிகுவிக்கக் கூடிய பாம்புப் புற்றினில் குடியிருக்கிறார். (புற்றிடங் கொண்ட ஈசர் என்பது ஆரூர்ப்பெருமானின் நாமம்) பாம்பாகிய அணி கலனையும் அணிந்துள்ளார். மிகவும் வெம்மையுடையதாகிய ஆலகால விடத்தையும் உண்டார். இவ்வளவுக்குப் பின்னும் அச்சமேயில்லாமல் இருக்கிறார். என்ன காரணம்? அருகே தோகை (மயில் ஆகிய பறவை, தோகை போன்ற உமை யம்மை) இருப்பதால் துணிவு அவருக்கு உண்டாயிற்று எனச் சிலேடை நயம்படப் பாடுகிறார்.

சுரும்புற்ற கார்வரைத் தோகைபங்கான துணிவு
கொண்டே (35)

மேற்கண்ட நெறியில் நூலுட் புகுந்து நோக்கினால் பக்திச்சுவையே ஊடுபொருளாக எங்கும் பரவியுள்ளது. அது தான் எத்தனை வகைகளில் பரிமளிக்கிறது. இங்கு எடுத்துச் சொல்லப்பட்டன ஒரு சிறிதே. முழுதும் துய்க்க எண்ணில் மூலநூல் உதவிடும். செஞ்சொற் கவியின்பம் சேர உண்மை யில் பக்திப்பரவசமும் கிட்டும். பகர்தற்கரிய முருகியல் இன் பமும் முன்னே வந்துறும்.

சிவம்.

சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# கருணை பொழியும் கடம்பந்துறையார்

(ஸ்ரீ யாக்ஞவல்க்யதாசன்)

சுவாமிமலையில் சுவாமிநாதன் பிரணவப் பொருளை விளக்க, பரமேச்வரன் சிஷ்யபாவத்தில் பவ்யமாய்க்கேட்கிறார். பிரணவஸ்வரூபியான பரமேச்வரன் இவ்வாறு செய்தது குழந்தையைத் திருப்திப்படுத்துவதற்காக என்று வெளித் தோற்றம் விளக்கினாலும், அதன் உள்ளே ஒரு தத்துவம் உள்ளது. வேதத்தின் மூலம் பிரணவம். வேதத்தைப் பாரா யணம் செய்பவரும், விளக்குபவரும் வயது, இனம், மொழிக்கு அப்பாற்பட்டு வேத புருஷராக அத்தருணத்தில் மாறுகின் றனர். வேதபுருஷருக்கு அளிக்க வேண்டிய மரியாதையின் நிமித்தம் சிவன் இக்காட்சி தருகிறார். இந்த நிகழ்ச்சிக்குப் பின் ஒரு நாள் சிவன் முருகனை அழைத்து, "குழந்தாய், அன்று பிரணவத்தின் பொருள் உரைத்தாயே. அதை யாரிடம் நீ கற்றாய்?" என்று கேட்கிறார். முருகன் பூர்வத்திலே சிவன் உமைக்கு பிரணவப் பொருள் உரைக்கும் பொழுது மறைந்து கேட்ட குற்றத்தை உணர்கிறார். உடனே மோனியாகி விடு கிறார். இம்மோனம் நீங்கி ஞானம் பெற்று, அம்மை அப்ப னின் பிரியத்தைப் பெற்று அவர்கள் இடையே சோமாஸ்கந்த ராக அமைதியுடன் அமருகிறார் இத்தலத்தில். இதன் காரணமாக இத்தலம் கந்தபுரி என்றும், ஞானோதயபுரி என்றும் பெயர் பெறுகிறது.

சோமகன் என்ற அரக்கன் நான்கு மறைகளையும் களவாடி புதாளம் சென்று மறைகிறான். உலகோர் பிரார்த்தனைக்

கிணங்கி நாராயணன் இத்தலத்தை அடைந்து இறைவனைப் பூசித்து அவனருளால் மச்சாவதாரம் எடுத்து, அரக்கனை வதைத்து, நான்மறைகளை மீட்டு, இத்தலத்து இறைவனடியில் சமர்ப்பித்து, மீண்டும் உலகோர்க்கு அளிக்கிறார். இது காரணமாக இத்தலம் சப்தபுரி என்றும் சதுர்வேதபுரி என்றும் பெயர் பெறுகிறது.

தேவசர்மா என்ற பாபி, தன் துன்பம் தாங்கமுடியாமல், இன்பம் பெறும்பொருட்டு, பல தலங்களைத் தரிசித்து இத்தலத்தை அடைந்து, இங்கு இறைவன் இறைவியைப் பூசித்து வந்த அகத்திய முனிவருக்கு பசுவைத் தானம் செய்கிறான். அப்பசுவின் பஞ்சகவ்யத்தால் இருவரும் இறைவனையும், இறைவியையும் அபிஷேகித்து, ஆராதனை செய்து இறைவனை நேரில் காண்கின்றனர். தேவசர்மா வேதசர்மாவாகிறான். அவன் பிரார்த்தனைக்கிணங்க இறைவனும், இறைவியும் மீனாக்ஷி சுந்தரேச்வரர் திருக்கல்யாணக் காட்சியை அளிக்கின்றனர். இத்தலம் வடமதுரை என்ற பெயரைப் பெறுகிறது.

சப்தமாதர்களால் துரத்தப்பட்ட தூம்ரலோசனன் என்ற அரக்கன் காத்யாயன மகரிஷி ஆச்ரமமடைந்து மறைந்து கொள்கிறான். அங்கு தவம் செய்து கொண்டிருக்கும் காத்யாயன ரிஷியை அரக்கன் என்று நினைத்து, அவரை சப்தமாதர்கள் அழித்து விடுகின்றனர், இத்தவறினால் அவர்களை பிரும்மஹத்தி தோஷம் பீடிக்கிறது. இத்தோஷம் நீங்க, இத்தலத்தை அடைந்து, தினமும் காவிரியில் நீராடி, இறைவன், இறைவி பரிவார தேவதைகளை வணங்கி வழிபட்டு, பலன் பெறுகின்றனர். அன்று முதல் இன்றும் இறைவன் சன்னதியில் அவருக்குப்பின் நின்றுகொண்டு சதாகாலமும் அவரை வழிபடுவதைக் காணலாம் இது காரணமாக இத்தலம் சத்தியபுரியாகிறது.

பிரமன் தன் படைப்புத் தொழிலில் அலுப்புக்கொள்கிறான். அரனிடம் தனக்கு இனிப் பிறவா வரம் வேண்டு

கிருன். அரனே தான் பூவுலகில் அகண்ட காவிரிக் கரையில் ஒரு புறம் சத்துவடிவமான மலையாகவும், ஒரு புறம் சித்துவடிவான மலையாகவும், இடையில் காவிரியின் தென்கரையில் ஆனந்த வடிவமாக அருளாட்சி செய்யும் இடத்தில் தன்னை அடைந்து, காவிரி நீர்கொண்டு அபிஷேக ஆராதனை செய்ய ஆக்ஞாபிக்க, பிரமனும் இத்தலத்தை அடைந்து பூசனை புரிந்து, அரனுக்கும், அம்மைக்கும், பரிவார தெய்வங்களுக்கும் ஆலயம் எழுப்பி, அக்னி மூலையில் அக்னி தீர்த்தம் உண்டாக்கி, நித்திய பூசனைகளைச் செய்து இறைவனுடன் இரண்டறக் கலக்கிருன். அதனுல் இத்தலம் பிரமபுரி என்ற பெயர் பெறுகிறது,

சுக்ல யஜுர்வேத காண்வ சாகையை உலகுக்களித்த காண்வமகரிஷிக்கு கடம்பமரத்தடியில் ஈசன் காட்சி தந்த தலம்.

கற்றைச் செஞ்சடையான், கனகப் புன்சடையான், ஆரியந்தமிழோடிசையானவன், கூரிய குணத்தார் குறிநின்றவன், காரிகையுடையான், பண்ணின் மொழி கேட்கும் பரமன், மறை கொண்ட மனத்தான், கறை கொண்டான், நங்கை பாகம் வைத்த நறுஞ்சோதி, கரிய கண்டத்தான், உமையொரு பாகன், காமற் காய்ந்த பிரான், நாரணன் பிரமன் அறியாததோர் காரணன், காலாலூன்றுகந்தான் என்றெல்லாம் தேன் மதுரத் தேவாரத்திலே திருநாவுக்கரசர் அர்ச்சித்த தலம்.

பட்டியல் நீளுகிறதே. எங்கள் பொறுமையைச் சோதிக்காதீர்கள் என்று நீங்கள் ஆதங்கப் படுவது தெரிகிறது. இவைமட்டுமல்ல, இன்ன பல புராண வரலாறுகளை உடைத்த க்ஷேத்திரம் தான் திருக்கடம்பந்துறை. சுந்தரர், பட்டினத்தார், ஐயடிகள் காடவர் கோனயனர், அருணகிரிநாதர் முதலானோர் பாடல்களால் பரமனைப் பாடிய தலம். வாருங்கள் அங்குச்செல்லலாம்.

கங்கையினிற் சிறந்த காவிரி தமிழ்நாட்டில் இங்கு அகண்ட காவிரியாக பரிணமிக்கிருள். தண்ணீர் கரை

புரண்டு ஓடுகிறது. பொன்னி நிறை சூலியாய் பூரணப் பொலி வுடன் பூரித்து விளங்குகிருள். பொன்னியின் குளிர்ந்த அலைகள் கரையை மோதி நீர்த்திவிலைகளை காற்றில் மிதக்க விட்டு மேலும் குளிர்ச்சியை உண்டாக்குகின்றன. அதனுல் இந்த இடத்திற்கு குளிர்தண்அலை என்றும், குழித்த சோலை களை உடையதால் குழித்தண்டலை என்றும், கடம்ப மரங்கள் நிறைந்த இடமாக இருந்ததால் கடம்பந்துறை, கடம்பை, கடம்பவனம், கடம்பர்கோயில் என்றும், தமிழ்நாட்டில் காவிரிக் கரையில் வடக்கு பார்த்த சன்னதி கொண்ட ஒரே தலமான படியால் தக்ஷிணகாசி என்றும் இத்தலம் அழைக்கப்படுகிறது. திருச்சி—ஈரோடு ரயில் மார்க்கத்தில் குளித்தலை ரயில் நிலைத் திலிருந்து சுமார் ஒரு மைல் வடக்கேயும், திருச்சி - கரூர் நெடுஞ்சாலையில் திருச்சியிலிருந்து மேற்கே இருபத்தி இரண்டு மைல் தொலைவிலும், வசிக்கச் சிறந்த வைகநல்லூர் கிராமத் தின் வடஎல்லையாகவும் அமைந்துள்ளது திருக்கடம்பந்துறை என்ற இந்த திவ்ய க்ஷேத்திரம். கடலனைய கருணையைப் பொழிந்து கொண்டு அருளாட்சி செய்கிருர் கடம்பந் துறையார். தேவாரப் பாடல்கள் பெற்ற தலங்களில் காவிரி யின் தென்கரைத் தலங்களில் இது இரண்டாவது தலம்.

காவிரிக் கரையினிலே கோயில் கொண்டுள்ளதால் கடம் பந்துறை என்றழைக்கப்படும் இக்கோயில் மிகப் புராதன மானது. பிரமன் நிர்மாணித்தது என்பது புராணவரலாறு. கோயிலின் ஆயுளை நிர்ணயிக்க ஆதாரம் இல்லை. பொலி விழந்திருந்த இக்கோவிலுக்கு 1921ம் ஆண்டு நகரத்தார் வகுப்பைச் சேர்ந்த தேவகோட்டை வெங்கடாசலம் செட்டியார் சில திருப்பணிகளைச் செய்து, 1944ம் ஆண்டு காஞ்சி மாமுனி வரின் அருளாசியால் குடமுழுக்கு விழா நடந்துள்ளது. இவ் வாலயம் 1950ல் அறநிலைய பாதுகாப்புத் துறையின் நேரடி நிர்வாகத்துக்கு வந்துள்ளது. ராஜகோபுரம் இல்லாத இவ் வாலயத்திற்கு, அறநிலைய ஆட்சித் துறையினரின் ஆதர வாலும், பொதுமக்கள் ஆதரவாலும், ஐந்துவாயில் கொண்ட அழகிய ராஜகோபுரம் அமைக்கப்பட்டு, எல்லா விமானங்

களும் பழுது பார்க்கப்பட்டு, பல புதிய திருப்பணிகளைச் செய்து 21-8-1966ல் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் முன்னிலையில் அஷ்ட பந்தன மகாகும்பாபிஷேகம் நிறைவேறி இன்று பூரணப் பொலிவுடன் ஆலயம் விளங்குகிறது.

ஆலயத்தின் முன் ஓடும் பெருவள வாய்க்காலில் கைகால் கழுவி ஆலயத்துள் நுழைகிறோம். சாதாரணமாக இக் கோயிலில் இறைவனைத் தரிசித்தபின் இறைவியைத் தரிசிக்க வேண்டும் என்பது விதி. ஆனால் நம்மை முதலில் வரவேற் பவர் காவல் தெய்வமாகிய பரமநாதர். எங்குமே காணாத அதிசயக் கோலத்தில் நம்மை வரவேற்கிறார். தன்னுடைய வலது கையால் ஒரு ராணுவ சல்யூட் (சலாம்) செய்தவண்ணம் உள்ளார். அவரை அடுத்து அன்னை முற்றிலா முலையம்மை வடமொழியில் பாலகுசாம்பாள் என்றும் திருவேணி என்ற திரு நாமத்துடன் கிழக்கு நோக்கி தனிச் சன்னதி கொண்டுள் ளாள். அன்னையை வணங்காமல் தாண்டிச் செல்வது முறை யல்ல என்று கருதி நாம் முதலில் அன்னையை வணங்குவோம். நான்கு கரங்களுடன், நின்ற திருக்கோலத்தில், பற்றிடுவார் வினையொழிக்கும் பரங்கருணை திருநோக்குடன் கருணையே உருவாக உள்ள சுந்தரத் திருமுகத்துடன் அருள் பாலிக்கிறாள். அன்னையைப் பார்த்தாலே போதும். பல்வினை நீங்கி, சீரும் சிறப்பும் கிட்டும். அன்னையின் சன்னதியைக் கடந்து தெற்கே சென்றால் அய்யனின் சன்னதியை அடையலாம்.

கடம்பவனநாதர், சுந்தரேசர், சௌந்தரேசர், பிரமேசர் என்ற திருநாமங்களுடன் சுயம்புத் திருமேனியாக விளங்கு கிறார். ஆவுடையார் சதுர அமைப்பாக உள்ளது. எப்பொழு தும் கருணையைப் பொழிந்த வண்ணம் காட்சி தருகிறார். தேவர்களுக்கு மட்டுமல்ல, மாந்தர்க்கும் கருணையை கணக்கில் லாமல் வழங்குகிறார். கடம்பமரம் தல விருக்ஷம். ஈசனருகி லேயே இருந்தது என்று கூறப்படுகிறது. தற்சமயம் அங்கு இல்லை. எல்லோரும் இன்புற்றிருக்க அருள் புரியப் பிரார்த் தித்துக் கொண்டு, இறைவனின் உட்பிராகாரத்தை வலம்

வருவோம். முதலில் நடராஜர் சன்னதி, இரண்டு மூர்த்தங்கள்-ஒன்று முயலகனுடனும், சிவகாமி, மாணிக்கவாசகருடன் கூடியது, மற்றொன்று முயலகன் இல்லாமல் சிவகாமியுடன் கூடியது. ஆனி உத்தரத்தில் முயலகன் இல்லா மூர்த்தம் உலாவரும், மார்கழித் திருவாதிரையில் முயலகனுடன் கூடிய மூர்த்தம் உலாவரும். சுற்றுப் பிராகாரத்தில் தனி சனீச்வரர், நவக்கிரகங்கள், சூரியன், சண்டீசர், பிரமன், கொற்றவை, அறுபத்திமூவர், தக்ஷிணாமூர்த்தி, வள்ளி தேவசேனா உடனுறை ஆறுமுகர் இரண்டு சன்னதிகள், லிங்கோத்பவர் கோயில் கொண்டுள்ளனர். பல வருடங்களுக்கு முன் ஒரு ஆறுமுகர் பின்னம் அடைந்ததாகவும், அதற்காக புதிய சிலையை உருவாக்கி அதைப் பிரதிஷ்டை செய்யும் முன் தர்மகர்த்தர் கனவில் முருகன் தோன்றி "உன் குழந்தைக்கு அங்க ஊனம் நேர்ந்தால் என் செய்வாய்?" என்று கேட்டதாகவும் அதனால் பின்னமுற்ற ஆறுமுகத்துக்கே அர்ச்சனை, அபிஷேக ஆராதனைகள் நடப்பதாகவும், புதிய சிலையை பக்கத்திலேயே பிரதிஷ்டை செய்ததாகவும் அர்ச்சகர் கூறுகிறார். ஆறுமுகர் சன்னதிக்கு எதிரே அருணகிரிநாதர் கைகூப்பித் தொழுத வண்ணம் காட்சி தருகிறார். அண்மையில் (1960) பிரதிஷ்டை செய்யப்பெற்றது.

தெற்குப் பிராகாரத்தில் கொற்றவை என்ற திருநாமத்துடன் விளங்கும் ஜுரேச்வரரை வெளிப் பிராகாரத்தில் உள்ள அக்னி தீர்த்தத்தில் 48 நாள் நீராடி பூசித்தால், சித்தப்பிரமை நீங்குகிறது என்றும், மூன்றே நாளில் பூச்சிக் கடிகள் நிவர்த்தியாகிறது என்றும் அனுபவஸ்தர்கள் கூறுகிறார்கள். மேற்குப் பிராகாரத்தில் உற்சவ மூர்த்தங்களை மிகவும் பாதுகாப்பாகப் பாதுகாத்து வருகிறார்கள். காரணம் ஒரு சமயம் அம்மன் மூர்த்தம் கள்வரால் களவாடப்பட்டு, மீட்கப்பட்டது. பிடாரி அம்மன், மாரி அம்மன், பிக்ஷாடனர், சண்டிகேச்வரர், பிரதோஷமூர்த்தி, ஷஷ்டி சுப்பிரமணியர், அருணகிரிநாதர், விநாயகர், வள்ளி தேவசேனா உடனுறை சுப்பிரமணியர், சோமாஸ்கந்த மூர்த்தி இரண்டு, சந்திரசேகரர், அம்பாள்,

சுக்ரவார அம்மன் முதலிய உற்சவ மூர்த்தங்கள் ஒய்யாரமாகக் காட்சி அளிக்கின்றன. இவைகளில் பிக்ஷாடனரும், பெரிய சோமாஸ்கந்த மூர்த்தமும் நாள் முழுவதும் பார்த்துக்கொண்டிருக்கலாம். அவ்வளவு அழகு. இவர்களை தரிசனம் செய்துகொண்டு வெளிப்பிராகாரத்துக்கு வருகிறோம்.

பைரவர் சன்னதி, நந்தவனம், அக்னி தீர்த்தம் என்கிற பிரம்மதீர்த்தம் முதலானவற்றை தரிசித்துக்கொண்டு இறைவனின் வெளிச் சன்னதிக்கு வருகிறோம். கடம்பவனம் என்ற பெயருக்கேற்ப வெளிப் பிராகாரத்தில் மீண்டும் ஒரு கடம்பவனத்தை உருவாக்கிவரும் ஆலய நிர்வாகிகளுக்கு ஒரு பாராட்டையும் கூறலாமே.

ஆலயத்தில் அன்றுடம் ஐந்து கால பூஜைகள். இறைவன் இறைவி, பரிவார தேவதைகளுக்கு அபிஷேக, அலங்கார, ஆராதனைகளுக்கும், திருவிழாக்களுக்கும் குறைவில்லை. தைப் பூசத்திருவிழாவும், மாசி பிரம்மோற்சவப்பெருவிழாவும் முக்கியமானவை. தைப்பூசத்தன்று கடம்பந்துறை முற்றிலா முலையம்மை உடனுறை கடம்பவனேச்வரர், ரத்னகிரி கரும்பார் குழலி உடனுறை ரத்னகிரீச்வரர், ராஜேந்திரம் தேவநாயகி உடனுறை மத்தியார்ச்சுனேச்வரர், பேட்டைவாய்த்தலை தேவநாயகி உடனுறை மத்தியார்ச்சுனேச்வரர், கருப்பத்தூர் சுகந்தகுந்தளாம்பாள் உடனுறை சிம்மபுரீச்வரர், திருஈங்கோய் மலை மரகதாம்பாள் உடனுறை மரகதாலேசுவரர், முசிறி கற்பூரவல்லி உடனுறை சந்திரமௌலீச்வரர், வெள்ளூர் சிவகாமியம்மை உடனுறை திருக்காமீச்வரர் ஆகிய எட்டு ஊர் இறைவன் இறைவிகள் காவிரிக்கரையில் முகாமிட்டு, தீர்த்தவாரி கொடுத்து, அன்று இரவு அவரவர்களுக்கு ஏற்பாடு செய்துள்ள அலங்காரப் பந்தலில் கொலுவீற்று ஆயிரக்கணக்கானவர்களுக்கு காட்சி கொடுத்து அடுத்த நாள் அவரவர்கள் ஆலயம் செல்லும் காட்சியை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை. இந்த இரு நாட்களிலும் காவிரிக்கரையில் ஒரு புதிய நகரம் உருவானது போன்று விளங்கும்.

சிவ : 1987-88 : 17

பூம்புகாரில் நடைபெற்ற இந்திரவிழா இப்படித்தான் இருந் திருக்கும் என்று ஊகிக்கலாம். அவ்வளவு காட்சிகள், ஆடல் பாடல் நிகழ்ச்சிகள் அனைவரையும் மகிழ்விக்க நடைபெறு கின்றன. மாசியில் இறைவனும், இறைவியும் தனித்தனி தேரில் ஆரோகணித்து ஆலயத்தின் தேரோடும் வீதியில் உலா வருவதைக் காணக் கண் கோடி வேண்டும்.

இவ்வாலயத்தில் கோயில் கொண்டுள்ள சோமஸ்கந்தரை தரிசித்தால் ஞானமும் முக்தியும் எளிதிற் பெறலாம்; கார்த் திகை மார்கழியில் இவர் சன்னதியில் தீபமேற்றி வைத்தால் கயிலையை அடைந்த பலனைப் பெறலாம்; சித்திரை திருவோ ணம், ஆனி உத்திரம், மார்கழி திருவாதிரை, ஆவணி, புரட் டாசி, மாசி சதுர்த்தசியில் இத்தலத்து நடராஜ மூர்த்திக்கு ஆவின்பால் அபிஷேகம் செய்து, பால் அன்னம் நிவேதனம் செய்தால் குபேர சம்பத்தும் பெறலாம்; சித்திரை வைகாசி பூரணையிலும், விஷுபுண்ய காலங்களிலும், சூரிய சந்திர கிரகண காலங்களிலும், பருவகால ஆரம்பங்களிலும் அகண்ட காவிரியிலும் அக்னி தீர்த்தத்திலும் நீராடி அம்மையையும் அப்பனையும் வணங்கினல் அளவிட முடியாத பலனைப்பெற லாம்; இத்தல அம்மை அப்பனை நினைத்தாலே போதும் என்று தலபுராணம் கூறுகிறது.

காலையில் கடம்பரையும், உச்சியில் சொக்கனையும் (ரத்ன கிரீச்வரர்), மாலையில் திருஈங்கோய் மரகதாசலேச்வரரையும் ஒரே நாளில் தரிசனம் செய்தால் சிறந்த பலன் கிட்டும் என்று தலபுராணமும்; இவர்களுடன் அர்த்த சாமத்தில் கருப்பத்தூர் சிம்மபுரீச்வரரையும் தரிசனம் செய்தால் அளவற்ற பலன் கிட்டும் என்று காவேரி ரஹஸ்ய புராணமும் கூறுகின்றன. இத்தனை தலங்களையும் ஒரே நாளில் அக்காலத்தில் தரிசிப்பது சற்று சிரமம். ஆகவே அதற்கு ஒரு மாற்றையும் புராணம் கூறுகிறது. திருச்சிக்கு அருகே உள்ள முத்தரசநல்லூரில் ஒரு காலத்தில் முத்தரசனுக்கு இம்மூவரும் சேர்ந்து தரிசனம் கொடுத்தனர் என்றும், ஆகையால் முத்தரசநல்லூரில் உள்ள

ரத்னகிரீச்வரர், விசுவேசுவரர், சுந்தரேச்வரர் மூவரையும் தரிசித்தாலே போதும் என்று கூறுகிறது. தற்சமயம் போக்குவரத்து வசதி மிகச்சிறந்த முறையில் இருப்பதால் இந்நான்கு தலங்களையும் தரிசிப்பது மிகவும் எளிதாக உள்ளது.

கடம்பந்துறைக்கு வடக்கே மணப்பாறை செல்லும் பஸ் மார்க்கத்தில் ஐந்து மைல் தொலைவில் உள்ளது ரத்னகிரி. ரத்னகிரி, சிவாயமலை, அய்யர்மலை, வாட்போக்கி மாணிக்க நாதர்மலை என்ற பெயர்களுடன் கூடிய சுமார் 952 படிகளுடன் கூடிய மலையில் கோயில் கொண்டுள்ள கரும்பார் குழலி உடனுறை சொக்கரை மதியம் தரிசிப்பது விசேஷம். மலை ஏறுவது சற்று சிரமம்.

காவிரிக்கு அக்கரையில் உள்ள மரகதமலை என்கிற திரு ஈங்கோய் மலையில் மரகதாம்பாள் உடனுறை மரகதாசலேச்வரரை அகத்தியமுனி ஈயின் வடிவம் கொண்டு பூசித்த இடம் என்றும், பஞ்சப்பிரம்மாசனத்தில் ஸ்ரீலலிதாம்பாள் ஸ்ரீசக்ர ராஜ பரிபூரண மகாமேரு பீடமாக மூலஸ்தானத்தில் வீற்றிருக்கிருள் என்றும், 51 அக்ஷர சக்தி பீடங்களுள் ஸ்ரீலலிதாம்பிகையின் அக்ஷரம் தோன்றிய சாயபுர சக்திபீடம் என்றும் புராணம் கூறுகிறது. காவிரியைக் கடக்க நல்ல பாலமும் உண்டு, பஸ் வசதியும் உண்டு. மாலை தரிசனம் விசேஷம்.

கடம்பந்துறைக்கு மேற்கே பஸ்மார்க்கத்தில் இரண்டு மைல் தொலைவில் கருப்பத்தூர் உள்ளது. மகாவிஷ்ணு இரண்யகசிபுவை வதம் செய்த தோஷம் நீங்கப்பெற்ற தலம் என்றும், அவர் பாலயோக வடிவில் நரசிம்ம உருவமாகத் திகழும் தலம் என்றும், நரசிம்மமூர்த்தியை விக்னேச்வரர் வரவேற்று சிவதத்துவத்தை வலஞ்சுழியனுக இருந்து உபதேசித்த இடம் என்றும், சுகந்த குந்தளாம்பாள் உடனுறை பச்சாதாபேசுரர் என்ற சிம்மபுரீச்வரரை இந்திராணி அர்ச்சித்ததாகவும், இந்திராணி அர்ச்சித்த புஷ்பங்கள் மஞ்சள் குவியலாக மாறுதல் அடைந்ததாகவும் தலபுராணம் கூறுகிறது. யாத்ரீகர்கள் இங்கு மஞ்சள் பிரசாதம் பெறுவதை முக்கியமாகக் கருதுகின்றனர். அர்த்தசாம தரிசனம் விசேஷம்.

மீண்டும் கடம்பனை வணங்குகிறோம். பரமனின் சன்னதியில் பக்தை ஒருவள் இத்தலத்து இறைவன் இறைவியைத் துதித்து சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துஸ்வாமி தீட்சிதர் கேதாரகௌளையில் பாடிய ''நீலகண்டம்'' என்று தொடங்கும் பாடலின் பாலகுசாம்பா சஹிதம் பாலசந்திர சேவிதம், சீலகுருகுஹ பூஜிதம் ஸ்ரீ கதம்பவந நாதம்'' என்ற அனுபல்லவியை நிரவல் செய்து பாடிமுடிக்கிருள். பஞ்சமும், பசியும் நாட்டில் விலகி, அன்பும் அறமும் தழைத்து அனைவருக்கும் ஆனந்தம் அளிக்க இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டு விடைபெறுவோமாக.

செங்கல்பட்டு ஜில்லா காஞ்சி தாலுகாவில் கடம்பர் கோயில் என்று ஒரு தலம் உள்ளது என்றும் அங்குறையும் இறைவனின் திருநாமம் கடம்பநாத சுவாமி என்றும் தெரிய வருகிறது.

கடம்பந்துறைக்கு வந்த தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டு, ஆலயத்திற்கு எதிரே ஆற்றங்கரையோரத்தில் அழகும், அமைதியும் நிறைந்த அரவக்குறிச்சி ஸ்ரீலஸ்ரீ திருப்பதி சுவாமிகள் துயில் கொள்ளும் சமாதிக் கோயிலையும் தரிசித்து மேலும் புண்ணியத்தைக் கூட்டிக்கொள்வோமே. ஓம் நம: சிவாய நம:

சிவம்

---

வினை தீரத் தொழுமினே!

திருச்சிற்றம்பலம்

மறைகொண் டம்மனத் தானைம னத்துளே
நிறைகொண் டந்நெஞ்சி னுள்ளுற வைம்மினே
கறைகண் டன்னுறை யுங்கடம் பந்துறை
சிறைகொண் டவ்வினை தீரத் தொழுமினே.

அப்பர் தேவாரம் (5-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

உ

சிவாப்யாம் நம:



# சிவமஹிமை — 9 சாக்ஷிகள்



தர்மக்ஞ, வித்யாவாசஸ்பதி,
மாயூரம் ராமநாத தீக்ஷிதர் எழுதியது

ஒரு சமயம் நைமிசாரண்யவாசிகளான மஹரிஷிகளுக்கு மிகச்சிறந்தவரும் விரும்பிய பலனை அளிக்கத் திறமையுள்ளவருமான கடவுள் யார் என்ற விஷயத்தில் சர்ச்சை ஏற்பட்டது. ஒருசில ரிஷிகள் திருமாலே சிறந்தவர் என்று கூறி அதற்கு சாக்ஷிகளாக அறுவரைக் குறிப்பிட்டனர்.

1. மஹாவிஷ்ணுவானவர் தன் பக்தர்களிடத்தில் வாத்ஸல்யம் உடையவர். அவர்கள் மனதில் உள்ள எண்ணங்களை நிறைவேற்றுபவர். இதற்குப் பிரஹலாதன் சாக்ஷி.

2. தன்னை அண்டினவனின் பயத்தைப் போக்கி என்றும் சிறந்தவனாகவே இருக்கச் செய்பவர் திருமால். இதற்கு விபீஷணன் சாக்ஷி.

3. பயங்கர ஆபத்து வந்தால் உடனே போக்கடித்துக் காப்பாற்றுபவர் என்பதற்கு கஜேந்திரன் சாக்ஷி.

4. கொடையில் அளவற்றதைக் கொடுப்பவர். வஸ்திரத்தை முடிவில்லாது கொடுத்தார் என்பதற்கு திரௌபதி சாக்ஷி.

5. எந்த பாபத்தைச் செய்தாலும் போக்கடிக்கும் திறமை உள்ளவர். இதற்கு அஹல்யை சாக்ஷி.

6. பக்தனுக்குப் பதவியைக் கொடுத்தால் அதற்கு மேலே பதவி இராது. அத்தகைய பதவிக்கு துருவன் சாக்ஷி.

இந்த ஆறு சாக்ஷிகளைக் கொண்டு நாராயணனே சிறந்த தெய்வம். அவரையே தியானம் செய்ய வேண்டும் என்று

அந்த ரிஷிகள் கூறினர். இதைக்குறிப்பிடும் ச்லோகம் கீழே காண்க.

वात्सल्यादभयप्रदानकरणात् आर्तार्तिसंरक्षणात्
औदार्यादघशोषणादगणितश्रेयः पदप्रापजात् ।
ध्येयः श्रीपतिरेकएव जगतां एते च षट्साक्षिणः
प्रह्लादश्च विभीषणश्च करिराट् पाञ्चाल्यहल्या ध्रुवः ॥

வாத்ஸல்யாதபயப்ரதாநகரணாத்
ஆர்தார்த்தி ஸம்ரக்ஷணாத்
ஔதார்யாதகசோஷணாதகணித
ச்ரேய: பதப்ராபஜாத் ।
த்யேய: ஸ்ரீபதிரேகஏவ ஜகதாம்
ஏதே ச ஷட்ஸாக்ஷிண:
ப்ரஹ்லாதச்ச விபீஷணச்ச
கிரிராட் பாஞ்சால்யஹல்யாத்ருவ: ॥

இதனைக்கேட்ட சிவபக்தர்களான சில மஹரிஷிகள் பரம சிவனின் ப்ரபாவத்தை 9 சாக்ஷிகளைக் கொண்டு மகிழ்ச்சியுடன் நிலைநாட்டினர்.

1. ஒரு தெய்வத்தினிடம் விரும்பிய வரத்தை அடைந்தால் அது அழிவற்றதாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறோம். அந்த வரத்தை அளிக்கும் தெய்வமே அழிவுள்ள-தானால் அதனால் நமக்குப் பிரயோசனம் இல்லை. ஆதலால் அழிவற்ற தெய்வம் யார் என்றால் பரமசிவன் ஒருவரேயாம் இதற்கு யார் சாக்ஷி? ஒரு சமயம் ஜோதிர்மயமாய்த் தோன்றிய சிவபிரானின் மேல்பாகத்தை அறிய பிரமதேவனும், அடிபாகத்தை அறியத் திருமாலும் சென்றனர். ஆதி வராஹ உருவத்துடன் திருமால் கீழ் ஏழுலோகமும் சென்றும் திரு-வடியைக் காண முடியவில்லை என்று திரும்பி வந்துவிட்டார்,

அதனால் அந்தம் (முடிவு) இல்லாதவர் சிவபிரான் என்பதற்கு மஹாவிஷ்ணுவே சாக்ஷியாவர்.

2. கொடையில் சிவபிரானே சிறந்தவர் என்பதற்கு உபமன்யு மஹரிஷியே சாக்ஷியாவார். பால் வேண்டுமென்று யாசித்தபொழுது பாற்கடலையே அவரது வீட்டின் முன்பு அலை மோதச் செய்தார் சிவபெருமான்.

3. ஒரு நாயகனிடம் வேலை செய்தால் நல்லமுறையில் ஸத்தியம் தவருது எஜமானன் என்ன செய்வானோ என்ற பயம் வேண்டும். முன் சொல்லியபடி ஜோதியாய்த் தோன்றிய சிவபிரானின் முடியைக்காண பிரமதேவன் மேலே அன்னப் பக்ஷி வடிவமெடுத்து பறந்து சென்ருர். காண இயலாது திரும்பி வந்தார். தலையைப் பார்த்ததாகப் பொய்கூறினர். சிவபிரான் உடனே பொய்சொன்ன தலையைக் கிள்ளி எறிந்தார். நமது ராஜ்யத்தில் யாருமே பொய் சொல்லக் கூடாது என்பது போல இந்த செயல் அமைந்தது. அதனால் ஸத்தியத்தை ஆதரித்த சிவனே சிறந்தவர் என்பது தெளிவாகிறது. இதற்குப் பிரம தேவன் சாக்ஷி.

4. உலகில் பிறந்த அனைவரையும் ஒரு வியாதி பிடிக் கிறது. அந்த வியாதி தான் மரணம் என்பது. இதற்கு மருந்து யாரிடமும் இல்லை. அதற்கு மருந்து கொடுத்து மரணத்தைப் போக்க வல்லவர் பரமேச்வரன் ஒருவரேயாவர். இதனால் வேதம் அவரை "ப்ரதமோ தைவ்யோ பிஷக்" என்று போற்று கிறது. இதற்கு சாக்ஷி மார்க்கண்டேயர்.

5. சிறிதளவு ஸேவை செய்தாலே மிக்க சந்தோஷம் அடைந்து அளவு கடந்த ஐச்வர்யத்தை வாரிவழங்குபவர் சிவபிரான். அதனாலேயே அவர் ஆசுதோஷி என்று போற்றப் படுகிருர். ஒரு தளம் பில்வத்தைப் பக்தியுடன் அர்ப்பணம் செய்து உலகிலேயே பெரும் பணக்காரன் ஆனன் குபேரன். வடதிசைக்கு அதிபதியும் ஆனன். எனவே சிவபிரான் ஆசு தோஷி என்பதற்கு குபேரன் சாக்ஷி.

6. அமுதம் பெறவேண்டி பாற்கடலைக் கடையும் பொழுது காளகூட விஷம் உண்டாயிற்று. தேவர்கள் அனை வரும் மூர்ச்சையாய் விழுந்தனர். பிறகு சிவபிரானிடம் சென்று அடிபணிந்து வேண்டினர். அந்த பயங்கரமான விஷத்தை உண்டு அனைத்து உலகங்களையும் சிவபிரான் காப்பாற்றினர். விஷம் கழுத்தில் நின்று அதனல் நீலகண்டன் என்ற பெயருடன் விளங்குகிரார். இவ்விதம் யாராலும் செய்ய முடியாத கார்யத்தைச் செய்து துன்பத்தைப் போக்கினர். இதற்கு தேவர்கள் சாக்ஷி.

7. உலக நாயகனை சிவபெருமானை அலக்ஷ்யம் செய்த தக்ஷன் (பிரமாவின் புத்திரன், சிருஷ்டிகர்த்தாக்களில் இவனும் ஒருவன்) தலையை இழந்தான். எனவே அலக்ஷ்யம் செய்பவன் யாராக இருந்தாலும் தண்டனை கொடுப்பவர் சிவன் என்பதற்கு தக்ஷன் சாக்ஷியானன்.

8. இராவண ஜயத்திற்கு உபாயத்தை உபதேசித்து ஸ்ரீராமனை வெற்றியடையச் செய்தவர் சிவபெருமான் என் பதை "அத்ரபூர்வம் மஹாதேவ: ப்ரஸாதம் அகரோத் ப்ரபு:" என்று ஸ்ரீராமனே கூறுகிருர். எனவே நண்பனைத் தானக நினைத்து ஆபத்தில் உதவி செய்பவர் சிவபிரான் என்பதற்கு ஸ்ரீராமனே சாக்ஷியாகிருர்.

9. "ஏக ஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே" என்பது முதலிய வேத வாக்கியங்கள் சிவபெருமானே சிறந்தவர். அவருக்குச் சமமாக யாருமில்லை என்று கூறுகின்றன. ஆதலால் உத்தமன் சிவபெருமான் என்பதற்கு வேதங்களே சாக்ஷி.

இவ்விதம் ஒன்பது சாக்ஷிகளைக்காட்டி சிவமஹிமையை நிரூபணம் செய்து சிவபெருமானே ஸேவிக்கத் தகுந்த தெய்வம் என்பதை சிவபக்தர்களான மஹரிஷிகள் நிலை நாட்டினர்கள்.

முன்பு நாராயணனின் பெருமையைக் கூறியவர்களும் சாக்ஷிகளுடன் தான் சொன்னார்கள். ஆனால் அவர்கள் காட்டியது ஆறு சாக்ஷிகள். சிவமஹிமையை நாட்டியவர்கள் கூறியது ஒன்பது சாக்ஷிகள். சந்தேகம் உள்ள இடத்தில் அதிக ஸங்க்யையைக் கொண்டே தீர்மானிக்க வேண்டும் என்பது மீமாம்ஸா சாஸ்த்ரத்தின் அபிப்பிராயம். தற்காலம் ராஜ்ய பரிபாலனமும் "மெஜாரிட்டி"யால் தான் நடக்கிறது. அதனால் சாஸ்திரங்களிலும் உலக வியவஹாரங்களிலும் "மெஜாரிடி" தான் வெற்றிக்குக் காரணம் என்பது விளங்குகிறது. ஆதலால் ஒன்பது சாக்ஷிகளால் தீர்மானிக்கப்பட்ட பரமசிவனே ஸர்வோத்க்ருஷ்டர். அவரே உபாசிக்கத் தகுந்தவர் என்பது நிலைத்தது.

மேலும் விஷ்ணு பக்தர்கள் கூறிய ஆறு சாக்ஷிகளும் சாக்ஷிக்குரிய தகுதி இல்லாதவர்கள். சாக்ஷிகளின் தகுதியைக் கொண்டுதான் அவர்கள் கூறும் வார்த்தைகளுக்கு மதிப்பு கொடுக்கப்படுகிறது என்பதை இக்கால நடவடிக்கைகளாலும் அறியலாம். சிசு, பசு, அரக்கன், அசுரன், பெண் ஆகியவர்கள் சாக்ஷி கூறத் தகுதியற்றவர்கள் என்பது நீதி சாஸ்திரத்தின் அபிப்ராயம். பிரஹலாதன் அசுரவம்சம், விபீஷணன் ராக்ஷஸன் (அரக்கன்), கஜேந்திரன் யானை (பசு—மிருகம்), துருவன் சிசு, திரௌபதியும் அகல்யையும் பெண்கள். எனவே இவர்கள் சாக்ஷிக்குத் தகுதியற்றவர்கள் என்பது விளங்குகிறது. சிவமஹிமைக்கு எடுத்துக் காட்டிய சாக்ஷிகளில் யாரும் சிசு, பசு, பெண், அரக்கர், அசுரர் இல்லையென்பதும் கவனத்திற்குரியது.

உத்தமமான சாக்ஷியங்களைக் கொண்டு சிவபெருமானே சிறந்தவர் என நிரூபித்த சுலோகம் பின்வருமாறு.

आनन्त्यौदार्यसत्यादृतिमृतिहृतिभिः स्वल्पसेवातितोषात्
संकष्टोच्छित्युपेक्षाभयहितवचनैः उत्तमत्वाच्च शम्भुः।
ध्येयो विष्णूपमन्यु द्रुहिणमुनिसुत श्रीदमन्थेच्छु देवैः
दक्ष श्रीरामवेदैः अशिशुपशुवधू राक्षसैस्साक्षिभिर्नः॥

ஆனந்த்யௌதார்ய ஸத்யாத்ருதி
ம்ருதிஹ்ருதிபி: ஸ்வல்பஸேவாதிதோஷாத்
ஸங்கஷ்டோச்சித்யுபேக்ஷா பயஹித
வசனைருத்தமாத்வாச்ச சம்பு: ।
த்யேயோ விஷ்ணூபமன்யு த்ருஹிண
முனிஸுத ஸ்ரீதமங்தேச்சு தேவை:
தக்ஷஸ்ரீராம வேதை: அசிசுபசு
வதூர ராக்ஷஸைஸ் ஸாக்ஷிபிர் ந: ॥

ஆகவே ஸர்வோத்க்ருஷ்ட தெய்வமான சிவபெருமானையே உபாசித்து அனைவரும் உய்தி பெறுவார்களாக.

(பதிப்பாசிரியர் குறிப்பு:—ஆறுசாக்ஷிகளைக் கொண்டு எடுத்துக் காட்டப்பட்ட மஹாவிஷ்ணுவும், அவரது அவதாரங்களில் ஒன்றான ஸ்ரீராமரும் சிவோத்கர்ஷத்துக்குச் சாக்ஷிகளாக அமைந்தது குறிப்பிடத் தக்கது மட்டும் அல்லாது சிவபக்தர்கள் அறிந்து மகிழ்ச்சியடையத் தக்கதுமாகும்). சிவம்.

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# சிவமஹிமை

சிவபாத ஸேவா துரந்தரர், குஞ்சிதபாத தியான சீலர்,

சைவ சித்தாந்த பூஜகர்,

T.K. நடராஜ சர்மா, பாட்டைபுலியூர்,

கிருஷ்ணகிரி மாவட்டம்.

சிவம் என்ற சொல்லுக்கு ஸர்வமங்களரூபியாய் இருக்கும் பரம்பொருள் என்பது பொருள். ''சிவஸ்தாணு: மஹேச்வர:'' என்பது உபநிஷத்வாக்கியம். ''சிவம் மங்களம் பரம்'' என்பதும் எப்போதும் ஸர்வமங்களரூபியாய் ஸர்வஜகத்திலும் வியாபித்து அருள்பாலிக்கும் பரம்பொருள் என்பது ஆன்ரோர் வாக்கு. ''சிவ ஏகோத்யேய: சிவம் கர: ஸர்வமன்யத் பரித்யஜ'' என்பது அதர்வசிரோபநிஷத்வாக்கு. அதாவது மற்ற தேவதைகளை வழிபடுவதைவிட்டு பரமேச்வரன் ஒருவரே எல்லோராலும் பூஜிக்கத் தக்கவர் என்று வேதம் முடிவு செய்கிறது. இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்க்கும் போது அத்வைத ஸித்தாந்தமும் ஏகநாயகன் ஒருவனே என்றும், ''ஒன்றுகண்டீர் உலகுக்கொரு தெய்வம்'' என்று திருமூலரும், ''ஏக ஏவ ருத்ரோ நத்விதீயாய தஸ்தே'' ''ஈசான: ஸர்வவித்யானும் ஈச்வர:ஸர்வ பூதானும்'' என்ற வேதவாக்கியங்களும் சிவ மஹிமையைக் கூறுகின்றன. சகல உலகங்களுக்கும், ஸர்வோத்க்ருஷ்டமானவரும், எல்லோராலும் பூஜிக்கத்தக்கவருமான ஈச்வரன் ஒருவனே என்றும், அவருக்குச் சமமாவோ அவரைத்தவிர இரண்டாவதான தெய்வசக்தியோ கிடையாது என்றும் ஸகல வேத இதிஹாஸ புராணங்களும் கூறுகின்றன.

அத்வைத சித்தாந்த ரீதியாக ஆராய்ந்து பார்ப்போமானுலும் இதே பொருளைத்தான் கூறுகிறது. எங்கும் வ்யாபித்துக் கொண்டு நிற்கும் உருவம், அருவம், அருவுருவம் என்ற மூன்று சக்திக்கும் அப்பாற்பட்ட துரீய நிலையாய் நிற்கும் பரப்ரம்மம் ஒன்று தான் வேதங்களாலும், உபநிஷத்துகளாலும், மற்ற இதிஹாஸங்களாலும் அறியப்பட்டு பல பெரியோர்களாலும் கூறப்படும் மஹாவாக்கியங்கள் பின்வருமாறு: ''தமீச்வராணும் பரமம் மஹேச்வரம்'' என்றும், ''அசிந்த்யமவ்யக்தமனந்த ரூபம், சிவம் ப்ரசாந்தம் அம்ருதம் ப்ரம்ம யோனிம் I தமாதிமத்யாந்த விஹீனமேகம் விபும் சிதானந்தமரூபம் அத்புதம் II என்று கைவல்யோபநிஷத்தும், ''சேர்ந்தறியாக் கையானை'' என்று ஸ்ரீமணிவாசகரின் திருவாசகமும் கூறுகிறது. பரமேச்வரன் யாரையும் கை கூப்பி வணங்கவில்லை என்றும், ஆனல் பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலான மற்ற எல்லாத் தேவர்களும் சிவலிங்க வடிவில் ஸாக்ஷத் பரமேச்வரனை அவரவருக்கு ஏற்ற பதவிகளையடைய ஸதாஸர்வ காலமும் பூஜித்துக் கொண்டிருப்பதாக வேதம் இதிஹாஸ புராணங்களும் கூறுவதைப் பார்க்கலாம்.

ருக்வேதம்:— தவச்ரியே மருதோ மர்ஜயத்த ருத்ரயத்தே ஜனிமசாரு சித்ரம் II என்றும்,

ப்ரும்மண: ஸ்ருஷ்டி கர்த்ருத்வம் விஷ்ணோர்தானவ மர்த்தனம், ஸ்வர்க்காதிபத்யம் இந்த்ரஸ்ய சிவபூஜாவிதே: பலம் என்று மஹாபாரதமும் கூறுகிறது. இதிலிருந்து சிவபெருமானுடைய மஹிமையை நாம் நன்ருகத் தெரிந்து கொள்ளலாம்.

தவிர, சிவபிரானுடைய மங்களமூர்த்தியின் மஹிமையையும், அவனுடைய திவ்ய நாமாவையும் புகழாதவர்கள் இந்த உலகத்தில் கிடையாது எல்லா மஹாமந்திரங்களைக் காட்டிலும் அதிக உத்க்ருஷ்டமாயும், ஸகல உலகங்களிலும் மஹாராஜ மந்த்ரமாயும் பாஸித்து வருகிற 'சிவ' என்ற இரண்டு எழுத்துக்களும், அதே போல் சிவபெருமான் அணியும் விபூதி, ருத்ராக்ஷம் என்ற இரண்டு சிவசின்னங்களும்,

அந்த பரமேச்வரனைப் போலவே எல்லாத் தேவர்களாலும் போற்றப்பட்டும், அவரவர்கள் தாம் சிவபூஜை செய்யும்போது விபூதி, ருத்ராக்ஷத்தைப் பரம பக்தியோடு அணிந்து கொண்டு ஸதா ஈசனைப் பூஜிக்கிருர்கள் என்ற ரகஸியத்தை பிரம்மா வானவர் நாரதருக்கு கோடிருத்ர ஸம்ஹிதையில் உபதேசிக்கின்ருர்.

தவிர, ஸ்ரீ உமாபதிசிவாசாரியார் இயற்றிய ஸ்ரீகுஞ்சிதாங்க்ரிஸ்தவம் 91-வது ச்லோகத்தில் இந்த தத்துவத்தை நன்கு விளக்கியுள்ளார்கள். (ச்லோகம்):-''யல்லிங்கே பிரம்ம விஷ்ணுப்ரமுக ஸுரவரா பஸ்மருத்ராக்ஷபாஜ: ஸஸ்த்ரீகாஸ் ஸாம்பமூர்த்திம் ஸகலதநுப்ருதாம் ஸர்வதம் ஸர்வரூபம் | ............குஞ்சிதாங்க்ரிம் பஜே (அ) ஹம் ||'' அதாவது எந்த சிவலிங்கரூபத்தில் பிரம்ம விஷ்ணு முதலிய தேவர்கள் பஸ்ம ருத்ராக்ஷதாரிகளாகவும், தங்கள் தேவிமார்களுடன் கூடிபூஜை செய்கிருர்களோ, அந்த ஸகல பிராணிகளுக்கு ஸர்வத்தையும் அளிப்பவரும், எல்லா உருவமும் உள்ளவருமான பரமேசுவரனுடைய குஞ்சிதபாதத்தை நமஸ்கரிக்கிறேன் என்று ஸ்தோத்ரம் செய்கிருர்.

''வித்யாஸு ச்ருதிருத்க்ருஷ்டா ருத்ரைகாதசினி ச்ருதௌ | தத்ர பஞ்சாக்ஷரி தஸ்யாம் சிவ இத்யக்ஷரத்வயம் ||'' என்று கூறப்படுகிறது. ஸகல வித்யைகளுக்குள் வேதம் சிறந்தது. அதற்குள் ஸ்ரீருத்ரம் சிறந்தது. அதற்குள் நம: சிவாய என்ற பஞ்சாக்ஷர மஹா மந்த்ரம் சிறந்தது. அந்த பஞ்சாக்ஷரத்திற்குள் 'சிவ' என்ற இரு அக்ஷரங்கள் மிகச் சிறந்தவை என்பது பெரியோர்களின் வாக்கு. ''சிவநாம விநாச்யாநாம் பாதகாநாமபாவத'' என்று சிவநாமாவை ஜபித்தால் அதனல் போக்கக் கூடிய பாபங்களை உலகில் யாராலும் செய்ய முடியாது என்பதாகும். தவிர, ''சிவ'' என்று வரும் மஹாபஞ்சாக்ஷர ஜபத்தை எவன் நியமத்தோடு நித்தம் தவருமல் ஜபித்துக் கொண்டு வருகிருனே அவன் நோயாளியையோ அல்லது தரித்ர தசையிலுள்ளவனையோ கண்ணுல் பார்த்தாலே அந்த குறை அவர்களுக்கு உடனே நீங்கி சகல

சௌகர்யங்களேயும் அடைகிருன் என்று மந்த்ரோபநிஷத் கூறு கிறது. ''பஞ்சாக்ஷர மஹாமந்த்ரம் மஹாபாதக நாசநம்...... நதஸ்ய பாபகந்தோபி தர்சனுத்பாப ஹாரிண:'' என்பது மந்த்ரம்.

அந்த சிவநாமாவுக்கே இப்படிப்பட்ட அபரிமிதமான சக்தியும் மஹிமையும் இருக்கும் போது இதற்கு மூலமாயுள்ள சிவபிரானுக்கு உள்ள மஹிமையை யார் தான் அறியமுடியும். தேவர்களாலும் அறிய முடியாது என்பது திண்ணம். இதைச் சேந்தனுர் 9ம் திருமுறையில் திருப்பல்லாண்டு கூறும்போது ''ஒப்பமரார் பாவிக்கும் பாவகத்திற்கு அப்புறத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே'' என்று போற்றியிருக்கிருர். இப்படிப் பட்ட மஹாமஹிமை தங்கிய பரமேசுவரனுக்கு எந்தத் தெய் வத்துக்கும் இல்லாத சிறப்பு என்னவென்ருல் இவருக்கு ''ஆசு தோஷி'' என்ற பெயர் உண்மையாம். யார் யார் எந்தெந்த முறையில் தம்தம் சக்திக்கேற்றவாறு உபாசிக்கின்றனரோ அவர்களுக்கு யாரும் பெறமுடியாத அபரிமிதமான அனுக் கிரஹத்தைச் செய்வதால் இப்பெயர் பெற்ருர் என்பது மஹான் களின் வாக்கு. இதற்கு நம் சிவனடியார்களின் வாக்கே தக்க சான்ருகும்.

ரிக், யஜுஸ், ஸாமம் என்னும் மூன்று வேதங்களிலும் பரமேசுவரன் ஸர்வோத்க்ருஷ்டமாகப் போற்றப்படுகிருர். எனினும் மூன்று வேதங்களிலும் நடுவிலுள்ள யஜுர்வேதத்தில் வரும் ''சதருத்ரீயம்'' அல்லது ''ஸ்ரீருத்ரம்'' என்று எந்த மந்திரத்தால் சிவபிரானை எல்லாத் தேவர்களும் ஸ்தோத்ரம் செய்கிருர்களோ அந்த ஸ்ரீருத்ரத்தின் அர்த்தத்தை கொஞ்சம் நாம் ஆராய்ந்து பார்க்கும் போது சிவபெருமானைத் தவிர வேறு எந்த தெய்வத்துக்கும் இவ்வளவு சிறப்பும் அபரிமிதமான மஹிமையும் இல்லையென்றும், சிவபெருமானே எல்லாத் தெய்வத்துக்கும் மேம்பட்ட தெய்வம் என்றும், அவரே பரம் பொருள் என்றும் அறியலாம்.

ஸகலலோகங்களிலும் உள்ள ஈ எறும்பு முதல் ஹரிப்ரம் மேந்த்ராதி தேவர்கள் உள்பட ஸகல ஆன்மகோடிகளிடத்து உள்ள அபரிமிதமான கருணையால் சிவபெருமான் 'க்ருபா சமுத்திரன்' என்று வடமொழியிலும், 'கரையில் கருணைக்கடல்' என்று தமிழிலும், பல அடியார்களாலும் ஸ்தோத்ரம் செய்யப் பட்டுள்ளார். உதாரணமாக சிவபிரானது உடை, ஆபரணம், இருப்பிடம், வாஹனம், ஆஹாரம், பக்தர்களுக்குச் செய்த அனுக்ரஹம் இவைகளையெல்லாம் நோக்கும் பொழுது, இப் பெருமானது அபரிமிதமான கருணையையும், எல்லையற்ற மஹிமையையும் உணர முடிகிறது.

சுருக்கமாகச் சொன்னால் பிரம்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள் தத்தம் பதவியைப் பெறுவதற்காகச் சிவ பிரானைப் பூஜித்தலும், பூலோகத்தில் ஒரு நரன் தேவலோகத் திலிருந்து கங்கையை பூவுலகிற்குக் கொண்டு வந்ததும், அருச் சுனனுக்காக வேடனாக வந்து பாசுபதாஸ்த்ரம் கொடுத்ததும் குருதல்பகமனம் செய்த மஹா பாபியாகிய சந்திரனை தலையில் தூக்கிவைத்துக் கொண்டதும், திருவிளையாடற்புராணத்தில் வரும் கேவலம் ஒரு பக்ஷியாகிய நாரைக்கு முக்தி கொடுத்து அதற்கு அடையாளமாக அதன் சிறகைத் தன் தலையிலே தாங்கிக் கொண்டதும், மார்க்கண்டேயர்க்காக இயமனையே காலால் உதைத்துக் கொன்று மறுபடியும் பூமிதேவிக்காகவும், மற்ற தேவர்களுக்காகவும், அவனைப் பிழைக்க வைத்ததையும், மஹாவிஷ்ணுவின் அவதாரமாகிய மத்ஸ்யம், கூர்மம், வரா ஹம், நரசிம்மம், வாமநம் இத்யாதி ரூபங்களினால் அந்தந்த அசுரர்களை ஸம்ஹரித்துவிட்டு விஷ்ணு தன் அஹங்காரத்தி னால் மற்ற தேவர்களுக்கும் ஸகல உலகங்களுக்கும் செய்த துஷ்க்ருத்தியத்தை அடக்கும் பொருட்டு, மத்ஸ்யாவதாரத்தி லிருந்து கண்களையும், கூர்மாவதாரத்திலிருந்து ஆமை ஒட்டை யும், வராஹ அவதாரத்திலிருந்து தத்திப் பல்லையும், நரஸிம் மாவதாரத்திலிருந்து இரத்தம் தோய்ந்த தோலையும், வாமந ராக வந்த திருவிக்கிரமாவதாரத்திலிருந்து முதுகெலும்பை யும் அபகரித்துத் தன் திருமேனியில் ஆபரணமாக அணிந்து

கொண்டு சகல உலகங்களையும் ரக்ஷித்து அருள்பாலித்த அபரிமிதமான அவரது (சிவபெருமானது) கருணையை நோக்கும் பொழுது ஆதியந்தம் இல்லாத மஹாகைலாஸத்திற்கு அதிபதியான ஸாக்ஷாத் பரமேச்வரனுடைய முப்பத்து முக்கோடி தேவர்களாலும் அறியமுடியாத சிவபரத்துவமும், அளவு கடந்த மஹிமையும் நன்கு தெரியவருகிறது.

மஹாமஹிமை தங்கிய சிவபரம் பொருள் எல்லா ஜீவ கோடிகளும் உய்யும் பொருட்டு, தான் சிவலிங்கவடிவில் பாஸித்து வருகிருர் என்பது சிவபுராணத்தில் உள்ள கோடி ருத்ர ஸம்ஹிதையில் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது: —

''ஸர்வ லிங்கமயீம் பூமிம், ஸர்வம் லிங்கமயம் ஜகத், லிங்கமயான் தீர்த்தானி ஸர்வம் லிங்கே ப்ரதிஷ்டிதம், பாதாளேசாபி வர்த்தந்தே ஸ்வர்கேசாபி ததா புவி ஸர்வத்ர பூஜ்யதே சம்பு: ஸந்தேவாசுரமானுஷை: அனுக்ரஹாய லோகானும் லிங்கா நிச மஹேச்வர:''

ஸகல பூமி, ஸகலதீர்த்தம், ஸர்வமும் லிங்கஸ்வரூமாகவே பாஸித்து வருகின்றன. காணப்படும் எல்லா வஸ்துக்களும் லிங்கஸ்வரூபமாகவே காணப்படுகின்றன. ஆதலால் பரமேச்வரன் ஸகல உலகங்களிலும் ஸகல ஆன்மாக்களுக்கும் அனுக்ரஹம் செய்வதற்காகவே எல்லா மூர்த்தங்கட்கும் அப்பாற்பட்ட சிவலிங்கரூபமாகப் பிரகாசித்து வருகிருர் என்று பொருள்படுகின்றது. தவிர ஸகல உலகங்களுக்கு மஹாமஹிமையுள்ள ஈச்வரன் தான் முழு முதற்கடவுள் என்பதும் தெளிவாக விளங்குகிறது.

தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து அம்ருதம் அடைய வேண்டிப் பாற்கடலைக் கடையும்போது வாசுகி என்ற பாம்பிஞல் உமிழப்பட்ட விஷமும் கடலினின்றும் தோன்றிய விஷமும் கலந்து ஆலாலவிஷம் என்ற கொடிய விஷமாகி எல்லா உலகங்களிலும் பரவி அழித்துக் கொண்டு வரும்போது,

"நாலம் வா பரமோபகாரகமிதம் த்வேகம் பசூனும் பதே
பச்யன் குக்ஷிகதாம்ஸ்சராசர கணன் டாஹ்யஸ்திதான்
ரக்ஷிதும் ।

ஸர்வாமர்த்ய பலாயநௌஷதமதி ஜ்வாலாகரம் பீகரம்
நிக்ஷிப்தம் கரலம் கலே ந கலிதம் நோத்கீர்ணமேவ
த்வயா ॥"

என்பது அந்த சுலோகம்.

ஸகல உலகங்களையும் ரக்ஷிக்கும் பொருட்டு அந்த கொடிய விஷத்தை ஒரு நாவற்பழம் போல் தன்வாயில் போட்டு தன் கழுத்தில் நீலமணி போல் காட்சியளிக்குமாறு நிறுத்திவைத்து கொண்ட மஹாதேவனுடைய அபரிமிதமான மஹிமையை யாரால் தான் முழுமையாக வருணிக்க இயலும்? இதிலிருந்து பரமேச்வரனுடைய மேலான கருணையையும் அன்பையும் தெளிவாக அறிந்து கொள்ளலாம். ஆதலால் பரமசிவனுடைய அளவுகடந்த மஹிமையையும் அவருக்கு ஜீவகோடிகளிட மிருக்கும் அபாரமான கருணையையும் அறிவதற்கு இந்த விஷ முண்டு ரக்ஷித்த அனுக்கிரஹம் ஒன்றே போதாதா என்று ஆதிசங்கர பகவத்பாதர்கள் தாம் அருளிய சிவானந்தலஹரீ 31-வது சுலோகத்தில் குறிப்பிடுகிறார்கள்.

இன்னும் விரிவாக எழுதாமல் இத்துடன் நிறுத்திக் கொண்டு நம்மவர்களாகிய சைவ குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பரமேச்வரனைப் பக்தி சிரத்தையுடன் பூஜித்து ஸர்வேச்வரனது அனுக்கிரஹத்துக்குப் பாத்திரர்களாக விளங்கி பல்லாண்டு பல்லாண்டு வாழ எல்லாம் வல்ல ஈச்வரனைப் பிரார்த்தித்துக் கொண்டு இச்சிறு கட்டுரையை முடித்துக் கொள்கிறேன்.

॥ ஸ்ரீ சித்ஸபேசாய மங்களம் ॥

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ஸ்ரீதத்தகிரி தத்தாத்ரேயர்

(ஸ்ரீ யாக்ஞவல்க்யதாசன்)

சேந்தமங்கலம் ஸ்ரீ அவதூத சுயம்பிரகாச பிரம்மேந்திர சுவாமிகள் தன் திக்விஜயத்தின் பொழுது ஹிமோத்கிரியில் உள்ள ஸ்ரீதத்தர் ஆலயம் வந்து வணங்கிய பொழுது, அவருக்கு பகவான் ஸ்ரீதத்தாத்ரேயர் பிரத்யக்ஷமாகி, அருளாசி வழங்கி, தனக்குத் தமிழ் நாட்டில் ஓர் ஆலயத்தை ஏற்படுத்த ஆக்ஞாபிக்க, அந்த ஆக்ஞையின்படி ஆலயம் உருவாகியது. சந்யாசிக்கரடு என்று அன்றுவரை அழைக்கப் பட்ட குன்று, ஆலயம் எழுந்த பிறகு, தத்தகிரி என்ற திரு நாமத்தை அடைகிறது. சேலம் ஜில்லா நாமக்கல்லிலிருந்து சேந்தமங்கலம் செல்லும் பேருந்தில் செல்கிறோம். சேந்த மங்கலம் ஊரை அடையும் முன்னர் பேருந்து "தத்தகிரி முருகன் ஆலயம்" என்ற அலங்கார வரவேற்பு நுழைவாயில் அருகே நிற்கிறது. அங்கு இறங்கி ஆலயம் செல்ல நடையைக் கட்டுகிறோம். தத்தகிரியை அடைய சுமார் இரண்டு பர்லாங் தூரம் செல்ல வேண்டும். அடிவாரத்தை அடையும் வரை ஆலயத்தின் பின்னணியைச் சற்று நினைவு கொள்வோமாக.

ஸந்யாஸ மார்க்கங்களிலேயே மிகவும் சிரேஷ்டமானதும் நடைமுறையில் கடினமானதுமான அவதூத மார்க்கத்தின் ஆதிகுரு தத்தாத்ரேயர், அத்திரி முனிவருக்கும் அனஸூயா தேவிக்கும் மும்மூர்த்திகளின் அருளால் புத்திரராகத் தோன்றி யவர். சதுஸ்ஸனன் என்ற ஒரு பெயரும் உண்டு. நான்கு புருஷார்த்தங்களையும் அளிப்பவர் என்பது பொருள்.

தத்தாத்ரேயர் சிறுவயது முதல் அவதூதராக சஞ்சரிக் கிறர். பகவான் அம்சமான தத்தாத்ரேயர் யதுவுக்கும்

கார்த்தவீரியார்ஜுனனுக்கும் அருளி அவர்களுக்கு பல சித்தி களைக் கொடுக்கிறார். தத்தாத்ரேயர் பெரிய ஞானியாகி, சகல தேவரிஷி கணங்களால் வணங்கப்பட்டு, ஹிமோத்கிரியில் தத்தாத்ரேய குகையில் இன்றும் இருந்து கொண்டு அருள் பாலிக்கிறார். பகவான் தத்தாத்ரேயரை ஸ்ரீசிருங்கேரி சந்திர சேகர சுவாமிகள் 'ஸ்ரீ தத்த நவரத்ன மாலிகா''வில் பின் வருமாறு வர்ணிக்கிறார். ''ஸ்ரீ பகவான் உலகில் அவதூத தர்மத்தைப் பரப்புவதற்காக அத்ரி அநசூயையிடம் அவ தரித்து, யதுவுக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசித்துப் பொன், பொருள், பெண் முதலிய வஸ்துக்களிடம் ஆசை அற்றவர் களான மனிதர்களுள் சிறந்த மகான்களால் எப்பொழுதும் சேவிக்கத் தக்க பாதகமலங்களை உடையவர்; பக்தர்களின் சிரசில் தன் கையினால் சக்தியை அளிக்கின்றவர்; அஷ்டதிக் பாலர்களால் ஆராதிக்கப்படுபவர்; பரமசிவன் அவதாரம், சூரியன் பொருமை கொள்ளும் தேஜஸை உடையவர்; தன் கருணைக் கடாக்ஷத்தால் கூன், குருடு, செவிடு, ஊமையானவர் களை அக்குறை நீங்கச் செய்பவர்; தன்னை வணங்கும் பக்தர் களுக்கு யோகசித்தியை அளிப்பவர்; பரமாத்மாவை உணர்ந் தவர்; சம்சார சாகரத்தினின்று கரை ஏற்றுபவர்; தன்னைச் சரணடைந்தவர்களுக்கு வேண்டியதை வேண்டியவாறு அளிப் பவர்; கலியின் பாதிப்பைப் போக்குகிறவர்; சாதுக்களை ரக்ஷித்து துஷ்டர்களை சிக்ஷிப்பவர்''.

ஹைஹய தேச அதிபதி கிருதவீரியன் புதல்வன் கார்த்த வீரியார்ஜுனன் தத்தாத்ரேயருக்கு சிச்ருஷை செய்து அவருடைய அனுக்ரஹத்தால் ஆயிரம் கைகளைப் பெறுகிறான். யோகம், அணிமா முதலிய சித்திகளை அடைகிறான். மிகுந்த பலசாலிகளாலும், சத்துருக்களாலும் ஜயிக்க முடியாதவனா கிறான். வாயுபோல், தடையின்றி எங்கும் சஞ்சரிக்கும் வாய்ப் பினைப் பெறுகிறான். அவன் ஒரு சமயம் ரேவாநதியில் ஸ்திரீ களுடன் ஜலக்ரீடை செய்யும் பொழுது, நதி நீரால் கரையில் இருந்த ராவணனின் கூடாரம் பாதிக்கப்படுகிறது. கோபம்

கொண்ட ராவணன் கார்த்தவீரியனை போருக்கழைக்க, அவன் ராவணனை அநாயாசமாக ஒரு குரங்குக் குட்டியைத் தூக்கு வது போல் தூக்கி மாகிஷ்மதி என்ற தன் பட்டினத்திற்கு எடுத்துச் சென்று, பிறகு விடுவிக்கிறான். தத்தாத்ரேயரின் அருளால் இவ்வளவு சிறப்பையும் அடைந்து 'கார்த்தவீரியனை நினைத்தால் காணமற்போன பொருள் கிட்டும்' என்ற விசேஷ சிறப்பினையும் பெறுகிறான்.

இனி பகவான் தத்தாத்ரேயருக்கு தமிழ்நாட்டில் ஒரு தனி ஆலயத்தை நிறுவிய ஸ்ரீ அவதூத சுயம்பிரகாச பிரம்மேந்திர சரஸ்வதி சுவாமிகளின் வரலாற்றுச் சுருக்கத்தைப் பார்ப் போம்.

திருக்கோவலூர் அருகில் உள்ள கல்பட்டு என்ற கிராமத் தில் அந்தணவகுப்பைச் சார்ந்த ராமஸ்வாமி சாஸ்திரிகள் ஜானகி அம்மாள் தம்பதியினருக்கு 28-11-1871 அன்று நான்காவது புத்திரராகப் பிறந்து கிருஷ்ணமூர்த்தி என்ற திருநாமம் சூட்டப்படுகிறார். சிறுபிராயத்திலேயே கல்வி யிலும், சீலத்திலும் சிறந்து விளங்கி, தான் பிற்காலத்தில் ஓர் அவதார புருஷராக விளங்கப்போவதை உணர்த்துகிறார். அவர்களுடைய சகோதரர்கள் வேதங்களைப்படித்து வேதபாட சாலைகளிலும், மற்றைய பள்ளிகளிலும் ஆசிரியர்களாகப் பணி புரிகிறார்கள். தாதுவருஷ பஞ்சம் கல்பட்டை பாதிக்கிறது. சாஸ்திரியார் குடும்பம் ஆடுதுறையை அடைகிறது. குடும் பத்தினர் கிருஷ்ணமூர்த்தியை ஆங்கிலப் பள்ளியில் சேர்க் கின்றனர். உபநயனம் முடிந்து, மேற்படிப்புக்கு கும்பகோணம் செல்கிறார். 19வது வயதில் மெட்ரிகுலேஷன் தேறுகிறார். வட மொழியில் பாண்டித்யம் பெறுகிறார். ஆசார்யன் ஸ்ரீநாராயண ஸ்வாமி சாஸ்திரிகளிடம் தர்க்கம், மீமாம்ஸை, வியாகரணம் படித்து மேதையாகிறார். தமிழிலும் பாண்டித்யம் பெறுகிறார். கிருஷ்ணமூர்த்திக்கு சேலத்தில் மாதம் ரூ 50ல் சர்க்கார் உத் யோகம் கிட்டுகிறது. என்னதான் உத்யோகம் பார்த்தாலும் அவர் மனம் வேறு ஒன்றை நாடுகிறது, ஓய்வு நேரத்தில்

தியானம், பஞ்சாட்சர ஜபம் முதலியவைகளில் ஈடுபட்டார். வேலையிலும் திறமையாக செயலாற்றி ஊதிய உயர்வும் பெறுகிறார். விவாக ப்ரச்னை எழுகிறது. வித்தகர் விவாகத்தை விரும்பவில்லை. குடும்பத்தில் சலசலப்பு. ஒரு பணக்கார வரனைப் புறக்கணிக்க, அதனைக்கண்ட மூத்த சகோதரர், "உன் படிப்புக்கு ரூ 3000 செலவழித்திருக்கிறோம், அதனைத் திரும்பக் கொடுத்துவிட்டு உன் இஷ்டம் போல் போ" என்று கூறுகிறார். கிருஷ்ணமூர்த்தி சாந்தமாக "அவ்விதமே செய்கிறேன், ஆனால் விவாகத்துக்கு என்னைக் கட்டாயப் படுத்தாதீர்கள்" என்கிறார்.

சென்னைக்கு மாற்றலாகி, அங்கு வந்த வருமானத்தில் சிறிது சிறிதாக சேமிக்கிறார். அது சமயம் பிரபலமாக இருந்த முத்துஸ்வாமி சாஸ்திரிகள் என்பவர் தன் பெண்ணை அவருக்கு மணமுடிக்க விரும்பி, அவரின் பெற்றோரை அணுகுகிறார். தகப்பனாரும் தமையன் குருஸ்வாமி கனபாடிகளும் சென்னை வந்து கிருஷ்ணமூர்த்தியிடம் தோல்வி கண்டு, கோபம் கொண்டு குருஸ்வாமி அவர் தலையில் ஒரு சொம்பு ஜலத்தைக் கொட்ட முயற்சிக்க, கிருஷ்ணமூர்த்தி சிரித்துக் கொண்டே "கனபாடிகளே, புருஷசூக்தம் சொல்லி ஜலம் கொட்டுங்கள்; நீங்கள் நிபந்தனையை மீறினீர்கள்; பாங்கில் ரூ 600 உள்ளது, பாஸ் புத்தகம் இதோ உள்ளது, அதனையும் எடுத்துக்கொள்ளுங்கள், இன்றுடன் என் தொடர்பு அறுந்தது" என்று கூறுகிறார். பிறகு உத்தியோகத்தை ராஜினமா செய்து விட்டு காசிக்குக் கால் நடையாகச் சென்று, கங்கைக் கரையை அடைந்து, மன்னார்குடி ராஜு சாஸ்திரிகளிடம் மேல்கொண்டு ஆத்மவித்யையைப் பயில்கிறார். அவர் ஆசியுடன் அங்கிருந்த மௌன சுவாமிகள் ஒருவரிடம் ஆறுமாதம் சீடராக இருக்கிறார். துறவறத்தில் ஊக்கம் ஏற்படுகிறது. அது சமயம் காசியில் இருந்த திருவண்ணமலை தக்ஷிணாமூர்த்தி சுவாமிகளை அடைந்து, பிரம்மசாரியாக சந்யாசம் மேற்கொள்ள விரும்புகிறார். தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் அதற்கு பெற்றோர் அனுமதி தேவை என்பதனை உணர்த்த, அவர் தந்தைக்கு கடிதம் எழுதுகிறார்.

தந்தையோ கிருஷ்ணமூர்த்திக்கும், தக்ஷிணமூர்த்தி சுவாமி களுக்கும் கடிதம் எழுதி அவரை ஊருக்குத் தருவிக்கிறார். கிருஷ்ணமூர்த்தி ஊரை அடைந்த தினம் தன் தகப்பனார் இறந்துவிட்டதை அறிந்து, மயானத்தில் மறைந்திருந்து அந்திமக்கிரியைகளைப் பார்க்கிறார். அடையாளம் கண்ட சிலர் இவரை கிரியைகளில் கலந்து கொள்ள அழைக்க, இவர் மறுக் கிறார். கிரியைகளை நடத்தி வைத்தவர்களில் ஒருவரான ராம சுப்ப சாஸ்திரிகள் "இப்புத்திரனால் இவன் தந்தை பிரம்ம லோகம் சென்றார், இவனை வற்புறுத்தாதீர்கள்" என்று கூறு கிறார். பிறகு 13ம் நாள் தாயையும், தமையனையும் வணங்கி, துறவு மேற்கொள்ள அனுமதி கேட்டு, மறுக்கப்படுகிறார். பிறகு புதுக்கோட்டையை அடைந்து கரதல பிக்ஷை வாங்க முற்பட்டார். இதனைக்கண்ட தமையன் "உனக்கு சந்யாசம் கொடுக்கக் கூடிய குருவைக் கொண்டு வா, கவனிப்போம்" என்று கூற, புளகாங்கிதம் அடைந்த கிருஷ்ணமூர்த்தி ஒரு ஞான ஆசிரியனை நாடிச்செல்கிறார். அது சமயம் மதுரையில் ஜட்ஜ் சுவாமிகள் என்றும் சதாசிவ பிரம்மேந்திரர் என்றும் அழைக்கப்படுபவர் பற்றி கேள்வியுற்று, மதுரையை அடைந்து, அவரை வணங்கி நமஸ்கரித்துத் தன் விருப்பத் தைக் கூறுகிறார். தவச்ரேஷ்டர் அவருக்கு தாய் தந்தையர் அனுமதி இல்லாது சந்யாசம் கொடுக்க இயலாது எனக்கூறு கிறார். தன் விருத்தாந்தத்தைக் கூறி, தனக்கு அவதூதத்தை யும் சந்யாசத்தையும் அருளப் பிரார்த்திக்க, இவரின் நிலை உணர்ந்த சுவாமிகள் அவரை சிஷ்யனாக ஏற்க முடிவு செய்து, "நீ இடையில் ஏக வஸ்திரத்துடன் உன் தாயாரை அணுகி, அவளை மும்முறை வலம் வந்து, நமஸ்கரித்து அந்த இடத்தி லேயே ஒரு முகூர்த்த காலம் அவளுடைய சந்நிதானத்திலே இருந்துவிட்டு வா. அப்புறம் நீ கோரியபடி அவதூதமும், மௌனமும் அடையலாம், இறை அருள் உனக்கு பூரணமாக உண்டு" என்று அருளுகிறார்.

உடனே ஊரை அடைந்து, தாயை மும்முறை வலம் வந்து நமஸ்கரித்து, தாய் தமையனாருடன் ஒரு முகூர்த்த காலம் பேசி

விட்டு எழுந்தார். வஸ்திரம் நழுவுகிறது. அவர்களை வணங்கி அவதூதராகச் செல்கிறார். 23-6-1899 பௌர்ணமி தினம், வயது 28, அவதூதாச்ரமம் ஏற்று ஸ்ரீ அவதூத சுயம்பிரகாச பிரம்மேந்திர சரஸ்வதி என்ற தீக்ஷா நாமம் ஏற்று தன் நெடு நாள் கனவு நனவாவதைக் காண்கிறார். எத்தனை இன்னல்கள் இடைஞ்சல்கள். ஒரு சமயம் சிறைப்படுத்தவும்படுகிறார். சிவ பாக்கியம் என்ற ருத்ர கணிகையும், இன்னும் சிலரும் இவரது மகிமையை உணர்ந்து இவருக்கு வேண்டியவைகளை அவ்வப் போது கவனித்து வருகின்றனர். சுவாமிகள் வெகு விரைவில் பிரபலமாகி, பல சித்துக்களைப் புரிந்து, பல பக்தர்களை சிஷ்யர் களாக அடைகிறார். ஒரு சமயம் லாலாப்பேட்டையில் காவிரி யைக் கடக்க பரிசிலை அடைய, ஓடக்காரன் இவரது திகம்பரத் தோற்றத்தைக் கண்டு, மற்றவருடன் இவரைப் பரிசிலில் ஏற்ற மறுக்க, இவர் தன் கையில் இருந்த விசிறியை தோணி யாக்கி அக்கரையை அடைகிறார். இப்படி ஏராளமான சித்துக் கள். வீபூதிப் பிரசாதம் அளித்து பலருக்கு பலபலன்களை அளிக்கிறார். ஒரு சமயம் இவரது வைராக்கியத்தைச் சோதிக்க ஜமீந்தார் ஒருவர் விலைமாதர்களைக் கொண்டு இவருக்கு பல சிசுருஷைகளைச் செய்வித்தார். ஜிதேந்திரியரான சுயம் ப்ரகாசர் பாதிப்பு ஏதும் இல்லாமல் இருக்க, ஜமீந்தார் பணிந்து மன்னிப்புக் கேட்கிறார். நெரூர் சதாசிவ பிரம்மேந்திராள் அதிஷ்டானம் சென்று வணங்கி, அருகில் உள்ள இடங்களுக்கு விஜயம் செய்கிறார், கூட்டம் கூடுகிறது. ஏகாந்தத்தை விரும்பி மலைக் குகைகளில் தியானத்தில் ஈடுபடுகிறார். எங்கும் தொந் தரவு. பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி, கடைசியில் சேந்தமங்கலம் சந்யாசிக் கரடு குகையில் தங்க சம்மதிக்கிறார் குகைக்கு முன் சிஷ்யர்கள் ஒரு கட்டடத்தை எழுப்பினர். சிஷ்யர்களை குகைக் கதவுகளைத் தாளிடச் சொல்லி, அடிக்கடி நிர்விகல்ப சமாதியில் ஆழ்ந்து விடுவார். அது சமயம் அவர் உருவம் அருகில் உள்ள காடுகளில் நடமாடுவதைப் பலர் பார்த்துள்ளனர். அவர் உத்தரவு கொடுத்தால் தான் குகைக் கதவு திறக்கப்பட வேண்டும். அவர் நிர்விகல்ப சமாதியில்

இருக்கும் சமயம் ஒரு நாள் சர்க்கார் அதிகாரி ஒருவர் வந்து வலுக்கட்டாயமாகப் பூட்டை உடைத்து, கதவைத் திறந்து, குகையில் எலும்பும் தோலுமாக இருந்த ஒரு உடலை வெளியே இழுத்துப்போட, தூங்கி எழுந்தவர் போல் சுவாமிகள் எழ, அதிகாரி பிரமிப்பும் பீதியும் மேலிட்டு அவர் அடிபணிந்து மன்னிப்புக் கேட்கிறார். சுவாமிகள் ஆத்மசாக்ஷாத்காரம் அடைந்து திகம்பரராய் பதினெட்டு ஆண்டுகள் தேச சஞ்சாரத்தில் ஈடுபடுகிறார். கன்னியாகுமரி முதல் ஹிமோத்கிரி வரை க்ஷேத்ராடனம் செய்து பல அற்புதங்களைச் செய்கிறார். கடைசியில் ஹிமோத்கிரியில் தத்தாத்ரேயர் குகையை அடைந்து, தியானத்தில் ஈடுபட்டு, அங்கேயே தங்க நினைக்கிறார். ஒரு நாள் பகவான் தத்தாத்ரேயர் அவருக்கு பிரத்யக்ஷமாகி தென்னாட்டில் தனக்கு ஒரு ஆலயம் ஏற்படுத்தி அங்கு தன்னைப் பிரதிஷ்டை செய்ய ஆக்ஞாபிக்கிறார். மீண்டும் சேந்தமங்கலம் அடைந்து சந்யாசிக்கரடில் குகையில் தங்குகிறார். பல சிஷ்யர்கள் தோன்றினர். சந்யாச ஆச்ரமும் அவதூத ஆச்ரமும் பலர் மேற் கொள்கின்றனர்.

ஆலயப்பிரதிஷ்டை வேலை துவங்குகிறது. சீடர்கள் நிஜானந்தர், சிவானந்தர், அபயானந்தர் மற்றும் பக்தர்கள் பொருள் கொண்டு வந்து குவிக்கின்றனர்.

தத்தாத்ரேயர் உருவச்சிலை உருவாகிறது. இப்படி பல சிஷ்யர்கள் பல கைங்கர்யங்களில் ஈடுபட்டு, ஸ்ரீதத்தாத்ரேயருக்கு தமிழ் நாட்டில் ஓர் அற்புத ஆலயம் சேந்தமங்கலத்தில் சந்யாசிக் கரடில் எழுகிறது. சந்யாசிக்கரடு தத்தகிரியாகிறது. 29-5-1931 அன்று ஸ்ரீதத்தாத்ரேயர் ஆலயம் பூர்த்தியாகி குடமுழுக்கு விழாக் கொள்கிறது. சுவாமிகளுக்கு வயது 60. தினசரி பூஜை, பிரதிபௌர்ணமி விசேஷ அலங்காரம் அபிஷேகம் நடந்து வர ஏற்பாடாகிறது. வருடாவருடம் மார்கழி மாதம் ஸ்ரீ தத்தஜெயந்தி விசேஷமாகக் கொண்டாடப் பட்டு வருகிறது. பல சீடர்கள் ஆலயத்திருப்பணியை விஸ்தரிக்கின்றனர். சுவாமிகளின் சிஷ்யர் ஸ்ரீ ஸத்குரு

சாந்தானந்த ஸ்வாமிகள் ஆலயத்தை அற்புதமாக விஸ்தரித்து, முருகனைப் பிரதிஷ்டை செய்து, ஒரு சபாமண்டபத்தையும் கட்டி அதில் அதி அற்புதமாக தெய்வத் திருவுருவங்களைப் பிரதிஷ்டை செய்து வைதிக முறையில் பூஜைகள் நடைபெற ஏற்பாடு செய்கிறார்.

கிருஷ்ணாநந்தர், சங்கரானந்தர், துரியானந்தர், துரிய சிவம், தத்தானந்தர், விமலானந்தர், நிரஞ்சனானந்தர், சுகானந்தர், ஹம்ஸானந்தர் இப்படி எண்ணற்ற சிஷ்ய பரம்பரையினரை உடையவர் ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள். ஸ்ரீ சுவாமிகள் தத்தகிரி குகையில் 29-12-1948ல் தன்னுள் ஐக்கியமாகிவிட்டார்.



தத்தகிரி அடிவாரத்தை அடைகிறோம். அடிவாரத்திலிருந்து கிரியை நோக்குகிறோம். சிறிய குன்றுதான். என்ன அற்புதமான காட்சி. எழில் கொண்ட சூழ் நிலையில் அமைந்த ஆலயம். பகவான் தத்தாத்ரேயருக்கு பல்வேறு இடங்களில் சிலைகள் இருந்தாலும், இவ்வளவு நேர்த்தியாகவும் சிறப்பாகவும் அமைந்த ஆலயம் இது ஒன்று தான். அடிவாரத்தில் ஆலயத்தை நோக்கிய வண்ணம் அமைந்துள்ள துரியானந்தர், சங்கரானந்தர் சமாதிகளை வணங்கி, கிரியின் தென் பக்கம் அமைந்துள்ள தத்தகங்கையை அடைகிறோம். இக்கிணற்றுக்கு அருகே கலிதோஷம் நிவர்த்தி செய்யும் கங்காதேவியின் கலைக்கோயிலைப் பார்க்கலாம். கங்காதேவி பத்மாசனத்தில் கிழக்கு நோக்கி நான்கு திருக்கரங்களுடன் தத்தகங்கையைப் பார்த்த வண்ணம் கொலு வீற்றிருக்கிறாள். கங்காதேவியைத் தரிசித்துவிட்டு மேலே ஏறுகிறோம். முதலில் நாம் சந்திப்பது இடும்பன். தோற்றமோ ஆஜானுபாகுவானது. வடக்கு நோக்கி நின்ற திருக்கோலம். அவரைப் பிரார்த்தித்துக் கொண்டு அவருக்கு நேர் எதிரே உள்ள முருகன் சபாமண்டபத்திற்குச் செல்கிறோம். மண்டபத்திற்குக் கீழ் ஒரு பக்கம் மகாகாளன் ஸ்ரீகருப்பர் சுவாமி என்ற நாமத்துடன் மண்டபத்

திற்குச்செல்லும் பதினெண்படிக் காவலராக, அஜாமுகி என்ற அரக்கியின் கையைச் சேதித்து இந்திராணியைக் காத்த கர்வத்துடன் கூடிய எழில் கோலத்தில் காட்சி அளிக்கிறார். 7அடி உயரம், கிழக்கு நோக்கி சந்நதி கொண்டுள்ளார். மற்றொரு பக்கம் மண்டபத்துக்குக் கன்னி மூலையில் பஞ்சமுக ஹேரம்ப மகா கணபதி கம்பீரமாகக் காட்சி அளிக்கிறார். ஐந்து கஜமுகங்கள், பத்துக் கரங்களில் அபயம், வரதம், பாசம் தந்தம், ருத்ராக்ஷமாலை, மாவட்டி, பரசு, உலக்கை, மோதகம், பழம் கொண்டு; சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்கிரஹம் செய்பவராக விளங்குகிறார். பிரணவ ஸ்வரூபியான பரப்ரம்மமாக உள்ளார். பக்தனின் ஆசையைப் பூர்த்தி செய்யும் ஆசா பூரக கணபதி என்ற திருநாமம். எவர்க்கும் அருள் புரியத் தயாராக உள்ள நிலை, நின்ற திருக்கோலம், 9 அடி உயரம், சிம்ம வாகனம். நாள் பூராவும் கணபதியைத் தரிசனம் செய்து கொண்டிருந்தாலும் திருப்தி ஏற்படாது. அவரை வணங்கிவிட்டு, பதினெண்படியைக் கடந்து மேலே சென்று சபா மண்டபத்தை அடைகிறோம்.

முதலில் நம்மை எதிர்கொண்டு அழைப்பவர் பாரததேசத்திலேயே மிகப் பெரிய சிலா விக்ரஹமாக அமைந்துள்ள ஸ்ரீ ஐயப்ப ஸ்வாமி, அவரின் சரணாரவிந்தங்களைத் தரிசித்து மண்டபத்தை வலம் வருகிறோம். தெற்குப் பக்கம் தென்புறம் நோக்கிய வண்ணம் ஆலமரக்கடவுளான தக்ஷிணாமூர்த்தி 7½ அடி உயரத்துடன் கூடியவராய் எங்குமே காணமுடியாத தோற்றத்துடன் மூன்று கண்கள், நான்கு கரங்களுடன் காட்சி அளிக்கிறார். அவர் அருகில் சனக, சனந்தன, சனத்குமார, சனாதரர் எழுந்தருளியுள்ளனர். அவரிடம் அருளாசி பெற்று மேல்புறம் வருகிறோம். இந்தியாவில் எங்குமே காணக்கிடைக்காத சிறப்புடன் பிரதிஷ்டை செய்யப்பட்ட சனீச்வரரையும் அவரின் உக்ரத்தை சமனம் செய்யும் வகையில் எதிரே பஞ்சமுக ஆஞ்சநேயரையும் காண்கிறோம். சனிபகவான் 8 அடி உயரம். எனக்குத் தெரிந்தவரையில் சனிபகவானின் மிகப்பெரிய சிலை இதுதான், இங்கு சனிபகவானுக்கு சனிக்கிழமை அன்று

வன்னி பத்திரத்தால் சஹஸ்ரநாம அர்ச்சனை செய்து, எள் கலந்த உளுந்து அன்னம் நிவேதனம் செய்து, கருப்பு வஸ்திரம், போர்வை தானமளித்து, ஸ்தோத்திரம் செய்தால் சனி பகவான் பிரீதி அடைந்து பாதிப்பை உண்டாக்க மாட்டார் என்று கூறப்படுகிறது. சனிபகவான் காக்கைவாகனத்துடன் நின்ற திருக்கோலம்.

எதிரே அமைந்துள்ள பஞ்சமுக ஆஞ்சநேயர் 7 அடி உயரம் ஆஞ்சநேயர், நரசிம்மம், கருடன், வராகம், ஹயக்ரீவர் முகங்கள். பத்து திருக்கரங்கள், அவைகளில் சக்தி, சூலம், விருக்ஷம், மலை, பாசம், அங்குசம், முத்திரை, பிண்டிபாலம், கட்வாங்கம், குண்டிகை முதலியவைகளைத்தாங்கி, நின்ற திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். சனீச்வரனின் பாதிப்பைத் தடுக்க வேண்டுமேயானால் ஆஞ்சநேயரை வழிபட வேண்டும் என்பது மரபு. இங்கு இரு சன்னதிக்கும் ஒரே சமயம் அர்ச்சனை செய்து தீபாரதனை காட்டி வழிபட்டால், வழிபடுவோரை ஏழரை நாட்டுச் சனி மட்டும் அல்ல, எந்த சனியின் தோஷமும் விலகிவிடும்.

அடுத்து வடபுறம் வருகிறோம். அங்கு 7 அடி உயரம் கொண்டு எழில் தோற்றத்தோடு தன்னைச் சரணமடைபவர்களைக் காப்பவனாகவும், நாடிய பொருள் கைகூட அருள்பவளாகவும், விருப்பங்களை நிறைவேற்றுபவளாகவும், சகல சௌபாக்கியங்களை அருளுபவளாகவும் காட்சி அளிக்கிறாள் அன்னை துர்க்கை. அகஸ்திய மாமுனிவருக்கு விந்திய பர்வதத்தின் கர்வத்தை அடக்க வல்லமையைக் கொடுத்தவளாக, மகிஷாசுரனை சம்ஹாரம் செய்தவளாக, நான்கு திருக்கரங்களில் சங்கம், சக்கரம், வீரம், அபயம் கொண்டவளாக, கருணை நிரம்பிய பார்வையுடன் விஷ்ணு துர்க்கை உருவில் வன துர்க்கை என்ற நாமத்துடன் வடக்கு நோக்கி எழுந்தருளி உள்ளாள்.

இந்த சிலா உருவங்கள் அனைத்தும் சிற்பிகளின் உன்னதக் கலைத்திறனை வெளிப்படுத்துகின்றன. பாரதத்தில் வேறு

எங்குமே காணமுடியாத எழிலுருவங்கள். அத்தகைய அற்புதச் சிலைகளைப் பிரதிஷ்டை செய்த ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த சுவாமிகளை எவராலும் என்றும் மறக்க முடியாது. இந்த சபா மண்டபத்தை விட்டுச் செல்ல மனம் வெகு எளிதில் இடம் கொடுக்காது. பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும். வனதுர்க்கையை வணங்கி நம் வாழ்விலும் இடர்களை நீக்கி இன்பம் அருளப் பிரார்த்தித்துக் கொண்டு இன்னொரு வலம் வந்து ஆஞ்சநேயருக்கு அருகாமையில் உள்ள படிக்கட்டுகள் வழியாகக் கீழிறங்கி, சபாமண்டபத்தின் வடபுறம் உள்ள சுயம் பிரகாச சுவாமிகள் தவம் செய்த குகையைக் காண்கிறோம். ஸ்ரீசுவாமிகளின் ஜீவியகாலத்தில் சேந்தமங்கலம் சிவபாக்கி யத்தம்மாள் அவருக்கு அளித்த நாற்காலியையும் இங்கு காணலாம்.

குன்றின் ஆலயத்தை அடைய மீண்டும் படிக்கட்டுகளைக் கடக்கிறோம். ஆலயத்தின் ராஜகோபுரம் நம்மை வரவேற் கிறது. திருக்கைலாயம் அடைந்துவிட்ட மகிழ்ச்சி. கோபுரத் துள் நுழைகிறோம். நம்மை எதிர்கொண்டு அழைக்கும் விநாயகரை வணங்கி தலை நிமிர்கிறோம். எதிரே குகைக் கோயில் சந்நதியைக் காண்கிறோம். உள்ளே ஓர் அற்புதத் திருஉரு புன்முறுவலுடன் நம்மை அழைக்கிறது. ஸ்ரீ சுயம் பிரகாச சுவாமிகள் நிஜமாகவே உட்கார்ந்திருப்பது போன்ற தோற்றம். வலக்கை சின்முத்திரையுடனும், இடக்கை கீழ் நோக்கியும் அமைந்து அருள்புரியும் அதி ஆனந்தக் காட்சி. அருகே லிங்கம். ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் ஜீவ சமாதி அடைந்த இடம். சுவாமிகளின் சிஷ்யகோடிகள் அவர் திரு உருவச் சிலையைப் பிரதிஷ்டை செய்துள்ளனர். குகையில் உள்ள தியான மண்டபத்தில் சற்று உட்கார்ந்து சுவாமிகளை தியானிக்கிறோம். சுவாமிகள் நேரிலேயே நமக்கெதிரில் ஜீவி யாக அமர்ந்து கொண்டு நமக்கு அருள் பாலிப்பதைக் கண்ணால் காண்கிறோம். சுவாமிகளின் சிலையின் திருஉருவம் வெண்மையாக உள்ளது. பௌர்ணமிதோறும் விபூதி அபி ஷேகம் நடைபெறுகிறது. அந்த விபூதியைப் பிரசாதமாகப்

பெற்றுக்கொண்டவர்கள் பெற்ற பலனைக் கூறப் பக்கங்கள் போதா.

சுவாமிகளின் சந்நதியைவிட்டு, மீண்டும் முன் மண்டபம் வருகிறோம். மண்டபத்தில் மேல் புறம் யதுமகாராஜா, கார்த்த வீரியார்ஜுனன், மகாலக்ஷ்மி, விக்னேச்வரர் திருவுருவங்கள் சுதை வடிவில் காட்சி அளிக்கின்றன. குகைக்கோயிலை ஒட்டி இரு பக்கமும் மேலே போகப் படிக்கட்டுகள் உள்ளன. ஒரு பக்கமாக ஏறி மேல் தளத்தை அடைகிறோம். அங்கு ஸ்ரீ சுயம் பிரகாசர் பிரதிஷ்டை செய்த பகவான் தத்தாத்ரேயர் நான்கு வேதங்களும் நான்கு தூண்களாக அமைந்துள்ள வேத மண்ட பத்தில் நின்ற திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். அரு கிலேயே சென்று தரிசிக்கலாம். பக்திமணம் கமழும் பவித்ர மான சூழ்நிலை. நம்மையும் நமது சூழ்நிலையையும் மறக் கிறோம். நாமும் தத்தருடன் ஐக்கியமாகிவிட்ட உணர்ச்சியைப் பெறுகிறோம். தெய்வத் திருவுருவத்தை வர்ணிக்க வார்த்தை கள் இல்லை. அழகுப் பெட்டகம் ஒப்புவமை இல்லா உருவப் பொலிவு, பார்ப்பவர் பரவச நிலை அடையும் கருணை பொழியும் முகம். தரிசித்தாலே நம் துன்பமும் துயரும் விலகி, இன்பம் நம்மை அடையும். வேதத் தூண்களிலே ஸ்ரீ சுயம்பிரகாசரின் தோற்றங்கள் இடம் பெற்றுள்ளன. ஒரு தூணில் ஸ்ரீதுர்க்கை சிலை உள்ளது. மகா சக்தி வாய்ந்தது. வெள்ளி, செவ்வாய், ஞாயிறு தரிசனம் விசேஷம். உட்பிராகாரத்தில் அத்ரி, அந சூயை, ஸ்ரீ தத்தாத்ரேயர், சுயம்பிரகாசர், ராஜராஜேஸ்வரி பஞ்சலோகச் சிலைகள் மிகப் பொலிவுடனும் கலைச்சிறப்புடனும் விளங்குகின்றன. ஸ்ரீதத்தாத்ரேயரின் மூலத் திருவுருவம் மும்மூர்த்திகளின் அம்சங்களுடன் கூடிய மூன்று சிரங்கள், ஆறு கரங்கள் – அவைகளில் இரண்டில் விஷ்ணுவின் அம்சங்களான சங்கு, சக்கரமும்; இரண்டில் சிவபிரானின் அம்சங்களான கபாலம், திரிசூலமும்; இரண்டில் பிரம்மனின் அம்சங்களான கமண்டலு, ஜபமாலையும் கூடி, இரு கால்களுடன் நின்ற திருக் கோலத்தில் திகம்பரநாதர் காட்சி கொடுக்கின்றனர். நம ஆயுள் முடிவதற்குள் ஒரு தடவையாவது இங்கு வந்து

பகவான் தத்தாத்ரேயரை வணங்கி, சுயம்பிரகாச சுவாமி களின் விபூதிப் பிரசாதம் பெற்று இக, பர சுகத்தை அடையும் பாக்கியத்தைப் பெறலாமே.

பகவான் தத்தரை வணங்கிய பிறகு மற்றெரு பக்கப் படிக்கட்டு வழியாக இறங்கி மண்டபத்தை அடைகிருேம். மண்டபத்தில் தெற்கு நோக்கி அமைந்துள்ளது முருகன் சந்நதி. கையில் பெரிய வேலுடன் ஆஜானுபாகுவாகவும், தனிமையாகவும் "உங்கள் குறைகளை இவ்வேலால் நீக்கிவிடு கிறேன்" என்று கூறியவண்ணம் ராஜ அலங்காரத்தில் நின்ற திருக்கோலத்தில் அருள் பாலிக்கிருர். முருகன் முன்னே புவன மாதா ஸ்ரீ புவனேஸ்வரியின் பஞ்சலோகச்சிலை இடம் பெற் றுள்ளது. மாதாவின் முன்னே புனித ஸ்ரீ சக்ர பூர்ணமேரு உள்ளது. முருகன் சிலையை ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த சுவாமிகள் 20-1 1983 அன்று பிரதிஷ்டை செய்துள்ளார்கள்.

இந்த ஆலயத்திலும், சபாமண்டபத்திலும் அமைந்துள்ள தெய்வத் திருவுருவச் சிலைகளின் அழகு வேறு எங்கும் காண முடியாது. இந்தத் திருவுருவங்களைப் பார்க்கும்பொழுது இவைகளை வடித்த சிற்பிகளின் கைவண்ணத்தை வியக்காமல் இருக்க முடியாது. சென்று பார்த்தவருக்குத்தான் இவை களின் சிறப்புத் தெரியும். முருகன் சிலையை பிரதிஷ்டை செய்து 1983ம் ஆண்டு குடமுழுக்கைச் செய்து, சபாமண்டபச் சிலைகள், கங்காதேவி முதலானவற்றை பிரதிஷ்டை செய்து ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த சுவாமிகள் 28—1—85 அன்று இவ்வாலயத்துக்கு மகா கும்பாபிஷேகம் செய்வித்தார்கள்.

நாம் சாதாரணமாக ஆலயங்களில் பார்க்கும் தெய்வத் திருவுருவங்கள் இவ்வாலயத்தில் மிகப் பெரிய பரிமாணத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதன் நோக்கம் பார்த்தவுடன் மனதில் பதிய வைக்க வேண்டும் என்பதாக இருக்கக் கூடும் என்று நினைக்கிறேன். ஒரே மாதிரியில் பார்த்துப் பழக்கப் பட்டவர்கள் மனதில் புதிய கோணத்தில் புதிய பரிமாணத்தில் நிர்மாணிக்கப்பட்டவை மனதில் நிலைத்து நிற்க வாய்ப்புக்

கூடியவையாகும். ஆகவே ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த சுவாமிகள் இம்முறையில் நிர்மாணித்துள்ளார்கள் என்பது அடியேன் கருத்து. சேலம் ஸ்ரீ ஸ்கந்தாச்ரமத்துச் சிலேகளின் பரிமாணம் இவைகளேக் காட்டிலும் கூடுதலானது.

ஆலய தரிசனத்தை முடித்துக் கொண்டு கீழே இறங்கு கிருேம். சற்றுத் தொலேவில் ஓர் ஆச்ரமம் தென்படுகிறது. சேந்தமங்கலம் ஸ்ரீ அவதூத சுயம்பிரகாச சுவாமிகளின் சீடர் களில் ஒருவரான ஸ்ரீ அவதூத கிருஷ்ணனந்த பிரம்மேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் தம் சீடர்களின் வேண்டுகோளுக் கிணங்கி இங்கே தத்தாச்ரமம் என்ற ஆச்ரமத்தை அமைத்துக் கொண்டு அருளாட்சி செய்து வருகிருர்கள். அங்கு சென்று அவர்களேயும் தரிசித்து, ஆசி பெற்றுவரச் செல்கிருேம்.

அமைதியான சூழலில் அற்புதமாக அமைந்துள்ள ஆச்ரமம். அதனுள் நுழையுமுன் அத்தி மரமும், வன்னி மரமும் சூழ அமைந்துள்ள இடத்தில் பிரதிஷ்டை செய்யப் பட்ட ஔதும்பர மூல ஸ்ரீ தத்தாத்ரேய சரண பாதுகைகளேயும், சங்கடஹரராய் வீற்றிருக்கும் க்ஷிப்ரப்ரஸாதன கணபதியை யும் வலம் வந்து வணங்கி உள்ளே செல்கிருேம். யாக மண்டபத்தைக் கடந்து பூஜாமண்டபம் அடைகிருேம். பூஜை அறையில் பல்வேறு தெய்வத் திருவுருவங்களுடன் ஸ்ரீபகவான் தத்தாத்ரேயரும், ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகளும் சந்நதி கொண்டுள்ளனர். அங்கே உள்ள ஸ்ரீ விநாயகர் படம் அனேவர் கவனத்தையும் கவர்கிறது. சிரம் விநாயகர், உடல் அம்பாள் சொருபமாக வரையப்பட்டு ஸ்ரீ வித்யா கணபதி என்ற திரு நாமத்துடன் விளங்குகிருர். இத்தகைய மூர்த்தம் ஒன்று சுசீந்திரம் ஆலயத்தில் உள்ளதாக ஸ்ரீசுவாமிகள் கூறுகிருர்கள்.

பூஜா மண்டபத்தில் அருளின் திருவடிவமாய், சாந்தமும், புன்னகையும் தவழும் கருணே முகத்துடன் ஏக வஸ்திரத்தை ஆடையாகக் கொண்டு பக்தர்களுக்குப் பாச உணர்ச்சியுடன் பரிவுரையும், அருளுரையும் வழங்கிக் கொண்டிருக்கிருர் பூஜ்ய

ஸ்ரீ அவதூத சுவாமிஜி மகராஜ் ஸ்ரீகிருஷ்ணானந்த பிரம்மேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் என்ற நடமாடும் அருள் பெட்டகம். முறைப்படி அவதூத தீக்ஷை பெற்றவர். அன்ருடம் ஆச்ரமம் வரும் அநேக பக்தர்களுக்கு அருளாசி வழங்கிவரும் ஸ்ரீ கிருஷ்ணானந்தரின் வரலாற்றுச் சுருக்கத்தையும் பார்ப்போமே!

பரமபக்தன் நந்தன் தன்னைத் தரிசிக்க வேண்டி "சற்று விலகி இரும் பிள்ளாய்" என்று நந்தியை விலகி இருக்கச் செய்து சிவலோகநாதன் அருள் பாலித்த திருத்தலமான திருப்புன்கூரில் வாழ்ந்த சாஸ்திர விற்பன்னர் ஸ்ரீ வெங்கடராம சர்மாவுக்கும் அவர் தர்மபத்னி மதுராம்பாளுக்கும் 10-2-1906 அன்று புத்திரராக அவதரித்து கிருஷ்ணமூர்த்தி என்ற திரு நாமம் சூட்டப்படுகிருர். பிறக்கும்பொழுதே பிற்காலத்தில் சிறந்த திவ்ய புருஷராக விளங்கப் போகும் சூசிகைகள் தோன்றுகின்றன. தெய்வ அருள் கூடிய குழந்தையாதலால் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குகிருர். ஸ்ரீ ஜனக குரு, சுவாமிநாத சிரௌதிகள், கணேச சிரௌதிகள் இவர்களிடம் குருகுலவாசம் செய்து மந்திர சாஸ்திரங்கள் பல பயின்று, பாண்டித்யம் பெற்று, ஆத்மஞானத்தில் திளைக்கும் வாய்ப்பினைப் பெறுகிருர். திருப்பூந்துருத்தியில் உள்ள ஸ்ரீதீர்த்த நாராயண சத்குரு அதிஷ்டானத்தில் அனுஷ்டானம் செய்து வரும் சமயம் ஒரு நாள் கிருஷ்ணமூர்த்தியின் மனதில் ஓர் யதியின் உருவம் தோன்றி கீதையில் உள்ள ஒரு ஸ்லோகத்தை நினைவூட்டி அதனைப் பாராயணம் செய்யச் சொல்லி மறைகிறது. வைதிக வாங்மயத்தில் தேர்ச்சியுற்ற கிருஷ்ணமூர்த்தி உலக வாழ்க்கையில் ஈடுபட ஓர் உபாயம் தேடி சென்னை வருகிருர். 1923ம் ஆண்டு சென்னையில் சிறந்த ஸ்மார்த்த கர்மானுஷ்டான ஆசாரியராக விளங்குகிருர். வேதங்கள், ஜோதிடம், மனை சாஸ்திரம், சித்தமருத்துவம், மந்திரசித்தி, ரத்னபரீக்ஷை இவைகளில் சிறந்து விளங்குகிருர். வாழ்க்கையில் வசதி கூடுகிறது. இருப்பினும் சாஸ்திரிகள் எதனையோ இழந்த மாதிரி ஒரு ஏக்கத்துடன் இருக்கிருர். தன் ஏக்கத்தைப் போக்கிக் கொள்ள திருவண்ணமலையை அடைந்து ஸ்ரீசேஷாத்ரி சுவாமி

களைக் கண்டு வணங்குகிறார். ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் "சாஸ் திரிகளே, உன்னுள் உறையும் ஞானத்தை அறியாது ஊர் ஊராய்த் தேடி அலைகிறீரே! வேளை வரும்பொழுது சுத்த சுயம்பிரகாசம் வழிகாட்டும்; அதுவரை பொறுத்திரும்" என்று கூறிவிடுகிறார். சென்னை திரும்பிய சாஸ்திரிகள் பெரும் பாலான சமயத்தை தியானத்தில் செலவிடுகிறார். ஒரு நாள் தியானத்தில் இருக்கும் பொழுது அவர் மனதில் ஓர் அவதூத உருவம் அடிக்கடி தோன்றி மறைகிறது. தியானம் தீவிரமா கிறது. பத்தாண்டுகள் பறக்கின்றன.

1937ம் வருடம் நாமக்கல் வரும் வாய்ப்பு கிட்டுகிறது. அது சமயம் சேந்தமங்கலம் சந்யாசிக்கரடு குகையில் உள்ள ஒரு அவதூத மகான் பற்றி கேள்வியுற்று அவரை அடைகிறார். அவர் மலையில் உள்ள தத்தாத்ரேயரைத் தரிசித்து வரப் பணிக்க, சாஸ்திரிகள் பகவானைத் தரிசிக்கச் செல்கிறார். அங்கு அருகில் உள்ள ஒரு படத்தைப் பார்க்கிறார். பார்த்ததும் பரவச மாகிறார். தன் மனத்திரையில் ஏற்கெனவே தோன்றி அருளுரை செய்த உருவம் என்று உணர்கிறார். ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகள் கூறிய "சுத்த சுயம்பிரகாசம்" ஞாபகத்திற்கு வருகிறது. தான் கண்ட அவதூதமகான் ஸ்ரீசுயம்பிரகாசர் என்பதனை உணர்ந்து அவரிடம் தன்னை அர்ப்பணித்துக் கொள்கிறார். சுவாமிகள் அவருக்குச் சிறந்த அருளுரைகளை உபதேசம் செய்து அவ ருடைய பணியைத் தொடர்ந்து செய்ய ஆக்ஞாபிக்கிறார். அடிக்கடி சுயம்பிரகாசரைத் தரிசித்து வருகிறார். ஏழு ஆண்டு கள் மறைகின்றன. ஞானவேட்கை தலைதூக்குகிறது. சுவாமி களை அணுகி தனக்கு துறவு வேண்டுகிறார். தக்க தருணம் வந்தவுடன் 1944ம் ஆண்டு வைகாசி பூர்ணிமை அன்று கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளுக்கு ஸ்ரீசுயம்பிரகாசர் வித்வத் சந்யாச தீக்ஷை வழங்கி "கிருஷ்ணானந்தம்" என்ற தீக்ஷா நாமத்தை வழங்கினார். ஸ்ரீசுயம்பிரகாசரின் பூர்வாச்ரமப் பெயரும் கிருஷ்ணமூர்த்தி, அவரது சீடர் ஸ்ரீகிருஷ்ணானந்தரின் பூர்வாச்ரமப்பெயர் கிருஷ்ணமூர்த்தி. இதுவே ஓர் விசேஷ ஒற்றுமையாகும். புதிய சீடனை கிரினார் சென்று பகவான்

தத்தரின் குரு சரண பாதுகையை திகம்பரராய் மௌனத்துடன் சென்று தரிசித்துவர ஆக்ஞாபிக்கிறார். குருவின் ஆணையை சிரமேற்கொண்டு தன் திக்விஜயத்தைத் துவங்குகிறார் ஸ்ரீ அவதூத கிருஷ்ணானந்த பிரம்மேந்திர சரஸ்வதி சுவாமிகள். வழியில் ஏற்பட்ட இன்னல்களுக்கும், தொல்லைகளுக்கும் கணக்கில்லை.

மிக்க சிரமத்துடன் கிர்னார் அடைகிறார். அது சமயம் குரு சரண பாதுகை இருப்பிடம் செல்ல உகந்த காலமில்லை. எனினும், தன் வேட்கை நிறைவேற நெடிய பயணத்தைத் தொடங்குகிறார் தவச்ரேஷ்டரும், மிக்க தபோபலம் உள்ள ஞானியுமான கிருஷ்ணானந்தர். மலை உச்சியை அடைந்து பவித்ரமான ஸ்ரீதத்தகுரு சரண பாதுகையை தரிசித்து பரிக்ர மாவில் தியானத்தில் ஆழ்கிறார். குருவின் ஆக்ஞைப்படி ஏக வஸ்திரம்தரித்து இமயமலையில் உள்ள யமுனோத்ரி, உத்தர காசி, கங்கோத்ரி, கோமுகி, திருக்கேதாரம், பத்ரி, நேபாளம்' முக்திநாராயணர், தாமோதர குண்டு, ரிஷிகேசம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசிக்கிறார். சிவானந்த ஸரஸ்வதி, ஆனந்த மாதா தொடர்பும் கிடைக்கிறது. பத்ரியில் பனிக்கட்டி தடுக்கி விழுந்து நடக்க முடியாத நிலை. 1948 டிசம்பர் கடைசி, குருவை தியானிக்கிறார். நடமாடும் சக்தி கிடைக்கிறது. இந் நிகழ்ச்சிக்குப் பின்னர் தன் குருநாதர் ஜீவசமாதி அடைந்த தைக் கேள்வியுறுகிறார். மீண்டும் யாத்திரை தொடங்குகிறது. பல இடங்களில் பலகாலம் மௌன நிஷ்டையில் ஈடுபட்டு விடுவார். 1963ம் ஆண்டு விசலூர் வந்து மடத்தில் தங்குகிறார். இதற்குள் இவரது மகிமையைக் கண்ட பலர் அவரின் பக்தர்களாகின்றனர்.

சிஷ்யர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி சேந்தமங்கலம் தத்தகிரி அருகில் தங்க முடிவெடுக்கிறார். 1971ம் ஆண்டு ஸ்ரீகுருதேவ தத்த சங்கம் உதயமாகிறது. சுவாமிகள் அதன் நிரந்தரத் தலைவராக விளங்குகிறார். 1973ம் வருஷம் குரு பூர்ணிமை நன்னாளில் ஸ்ரீதத்தாச்ரமம் உருவாகி, ஸ்ரீஅவதூத

கிருஷ்ணனந்த சுவாமிகள் அங்கு தங்கி ஞான வேள்வி புரிந்து வருகிறார். சிறியதாகத் துவங்கிய ஆச்ரமம் இன்று யாக மண்டபம், சமையல் அறை, தங்கும் அறைகள் இன்னும் தேவையான வசதிகளுடன் பரிமளிக்கிறது.

ஆச்ரமத்தில் அன்றாடம் குருபாதுகை, க்ஷிப்ரப்ரஸாதன கணபதிக்குப் பூஜை ஆராதனைகள், தெய்வங்களுக்கு வேத முறைப்படி புஷ்பாஞ்சலி, மதியம் அகண்டநாம பஜனை ஆரம் பித்து இரவு வரை நடக்கிறது. மாத பௌர்ணமி, வஸந்த நவராத்ரி, வைகாசி விசாகம், ஸ்ரீஸத்குரு சுயம்பிரகாச சுவாமி கள் புண்ணியதிதி, ஸ்ரீகிருஷ்ணனந்தர் வார்த்திக ஜயந்தி, குருபூர்ணிமை, சாரதா நவராத்ரி, தத்தாத்ரேய ஜயந்தி, ஒவ் வொரு மாதமும் சங்கடஹர சதுர்த்தி அன்று வன்னிமூல க்ஷிப்ரப்ரஸாதன கணபதிக்கு அதர்வசீர்ஷோபநிஷத் முறை யில் மகாபிஷேகம், விசேஷஹோம பூஜைகள், அன்று விடியற் காலை 1008 தாமரை மலர்களால் ஸ்ரீ கணபதி ஹோமம் நடக் கின்றன. சுவாமிகள் ஹோமங்களை நடத்தி வைப்பதைத் பார்ப்பதே கண் கொள்ளாக் காட்சி. வேதவிக்ரஹமாக வீற்றி ருந்து அவர் நடத்திவைக்கும் ஹோமங்கள். விரதங்கள், பூஜை கள் முதலானவற்றைக் காண பூர்வஜன்மத்திலும் இந்த ஜன் மத்திலும் புண்ணியம் செய்தவர்களாக இருக்க வேண்டும். மகப்பேறு இல்லாதவர்க்கும், மணமாகாத கன்னியருக்கும் சத்யநாராயண விரத பூஜையைச் செய்வித்துபலன் பெறச் செய்து வருகிறார்.

ஸ்ரீ கிருஷ்ணனந்தரை ஒரு தடவை தரிசித்தவர்கள் பல தடவை தரிசித்து அருளாசி பெறுவது அன்றாடக் காக்ஷியாகும். ஒரு முறை சென்று தரிசித்தால், பல முறை சென்று தரிசிக்கத் தூண்டும் சக்தி அங்குள்ளதை உணரலாம். ஆச்ரமம் வரும் பக்தர்களுக்கு செவிக்குமட்டும் விருந்தல்ல, வயிற்றுக்கும் விருந் தளிக்கப்படுகிறது. வரும் பக்தர்களை வெறும் வயிற்றுடன் அனுப்பும் வழக்கம் சுவாமிகளுக்கு இல்லை. வந்தவர்களை அவர் அருளோடும் பரிவோடும் விசாரிக்கும் பாங்கே தன்

நிகரில்லாதது. யாரும் எந்தவித பந்தா, படாடோபம் இல்லாமல் எந்த வேளையிலும் ஸ்ரீ சுவாமிகளைத் தரிசிக்கலாம். மற்ற யுகங்களுக்கில்லாத சிறப்பு கலியுகத்துக்கு உண்டு. கலியுகத்தில் பகவானின் திவ்ய நாமாவைச் சொல்லியே சகல புருஷார்த்தங்களையும் பெறலாம். இச்சிறப்பைக் கண்ட பல மகரிஷிகள் பகவானை தங்களுக்கு கலியுகத்தில் பிறக்க அருள வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டதாக ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. பகவன் நாமா எப்பொழுதும் ஆச்ரமத்தில் ஒலித்திருக்கச் செய்ய ஸ்ரீசுவாமிகள் பெரு முயற்சி செய்து வருகிறார். அதில் பங்கு கொள்ள நம் சக்திக்கேற்றபடி பொருளுதவி செய்து நாமும் பலனை வெகு எளிதில் அடையலாம்.

எல்லோர்க்கும் கிர்னார் சென்று ஸ்ரீ குருதத்தசரண பாதுகையை தரிசிக்க வலிவும், வாய்ப்பும் இருக்க முடியாது. அருகில் இருக்கும் சேந்தமங்கலத்தை வெகு எளிதில் அடைந்து பகவான் ஸ்ரீதத்தாத்ரேயரையும், சுயம்பிரகாச சுவாமிகள் ஜீவ சமாதியையும் தரிசித்து, தத்தாச்ரமம் அடைந்து ஸ்ரீ குருசரண பாதுகையையும், க்ஷிப்ரப்ரஸாதன கணபதியையும் தரிசித்து, இன்றும் ஞான நாயகனாக விளங்கி அண்டியவர்க்கு அருளாசி புரியும் ஸ்ரீ அவதூத கிருஷ்ணனந்தரையும் தரிசித்து வாழ்வை வளமாக்கிக் கொள்ளலாமே.

சிவம்.

---

உ

சிவமயம்

❋❋❋❋❋❋❋i❋❋❋❋❋❋❋

# ஸௌரபுராணத்தில் சிவமஹிமை

❋❋❋❋❋❋❋i❋❋❋❋❋❋❋

டாக்டர் ந. கங்காதரன், M.A., M.Litt., Ph D.
ஸம்ஸ்க்ருதத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்

மஹாபுராணங்கள் பதினெட்டு என்று வழக்கில் உள்ளது போல் உபபுராணங்களும் பதினெட்டு என்று புராணங்களும் உபபுராணங்களும் கூறுகின்றன. உபபுராணங்களின் பட்டியலில் ஸௌரபுராணமும் ஒன்ருக இடம் பெறுகின்றது. பூனு நகரிலுள்ள ஆனந்தாச்ரமம் என்னும் திறுவனத்தாரால் தேவநாகரி எழுத்தில் ஸௌரபுராணம் அச்சிடப்பட்டுள்ளது. அந்த பதிப்பின்படி இப்புராணத்தில் 69 அத்தியாயங்கள் உள்ளன. மொத்தம் 3899 செய்யுட்களில் இப்புராணம் மிகச்சிறந்த கருத்துக்களை வாரி வழங்குகின்றது. ஸௌரம் என்பதற்கு ஸூரியனுடன் தொடர்புடையது என்பது பொருளாகும். ஸூர்யனுல் மனுவிற்கு எடுத்துக் கூறப்பட்டதால் இப்புராணத்திற்கு இப்பெயர் ஏற்பட்டது. இதில் காணப்படும் பெரும்பான்மையான கருத்துக்கள் சிவபெருமானின் மேன்மையை விளக்கும் கதைகளாகவோ, புகழ்ந்துபாடும் பாக்களாகவோ அமைந்துள்ளன.

இப்புராணத்தின் முதல் அத்தியாயத்தில் செய்யுட்கள் 14-15ல் இது வலியுறுத்தப்படுகிறது:

> புராணம் ஸம்ப்ரவக்ஷ்யாமி ஸௌரம் சிவகதாச்ரயம்
> யச்ச்ருத்வா மநுஜ: சீக்ரம் பாபகஞ்சுகமுத்ஸ்ருஜேத்
> ச்லோகத்வயம் படேத்யஸ்து ச்லோகமேகமதாபி வா
> ச்ரத்தாவான் பாபகர்மாணி ஸ கச்சேத் ஸவிது: பதம்

சிவனுரின் (மேன்மையை விளக்கும்) கதைகள் கொண்ட ஸௌர புராணத்தை நான் இப்பொழுது கூறுகின்றேன்,

இதைக்கேட்ட மானிடர்கள் (மனுவின் வழி வந்தவர்கள்) தங்கள் பாவ உடைகளை விரைவிலேயே களைவார்கள். மேலும் இப்புராணத்திலிருந்து இரண்டொரு செய்யுட்களை சிரத்தை யுடன் படிப்பவர்கள் ஸூர்யனின் ஸ்தானத்தை அடைவார் கள். சிவனாரின் 'அஷ்டமூர்த்தி' (எட்டு வடிவு) வடிவில் ஒன்றாக ஸூர்யனைக் குறிப்பது இங்கு நினைவில் கொள்ள வேண்டும். மேலும்,

வக்தா யத்ர ரவி: ஸாக்ஷாச்ச்ரோதா தஸ்ய ஸுதோ மனு:
மாஹாத்ம்யம் கத்யதே சம்போர் நாஸ்த்யஸ்மாததிகம் த்விஜா:

என்று செய்யுள் 17-ல் இப்புராணத்தின் மேன்மை கூறப்பட் டுள்ளது. இப்புராணத்தை எடுத்துக் கூறுவது ஸூரியனும், அதைக்கேட்பது மனுவும், எடுத்துரைக்கப்படும் பொருள் சிவ னாரின் மேன்மை என்பதும் ஆனதினால் இந்நூலைவிட உயர்ந் தது மற்றொன்று கிடையாது என்று இச்செய்யுளின் பொரு ளாகும்.

தக்கன் வேள்வியை சிவனார் அழித்த வரலாறு, முப்புரம் எரித்த வரலாறு, அந்தகனை அழித்த வரலாறு, ஜலந்தரனைக் கொன்ற வரலாறு, சிவனாரின் மேன்மையை விளக்கும் பல செய்யுட்கள், சிவனாரைப் போற்றி திருமால் பாடிய ஆயிரம் பெயர்கள், மேலும் பல்வேறு துதிகள், சிவனாரைக் குறித்து நோற்கப்படும் பலவித நோன்புகள் முதலியனவும் இப்புரா ணத்தில் காணப்படுகின்றன. இப்புராணத்திலடங்கிய கருத் துகள் அனைத்தையும் இச்சிறிய கட்டுரையின் மூலம் முழுமை யாகக் கூற இயலாத காரணத்தினால் ஒரு சில கருத்துகளை மட்டும் கூற முற்படுகின்றேன்.

முதன் முதலில் அத்தியாயம் 2-ல் சிவனாரின் மேன் மையை விளக்கி மறைகள் பாடிய துதி இடம்பெறுகின்றது (செய்யுள் 31-51). அதன்படி "அறிஞர்களான யோகிகள் புல னடக்கத்துடனும், விருப்புகளை அடக்கியும் எந்த ஒருவரைக் காண்கின்றனரோ அவரே ஆத்தும வடிவமான மஹேச்வரன் ஆவார். நான்முகன், திருமால், இந்திரன், சந்திரன் முதலா

னவர் எந்த ஒரு தேவனுக்குத் தொண்டு செய்து அவர் அருளால் வாழ்கின்றனரோ அந்த தேவன் பார்வதியின் மணாளராகும். நான்முகன் முதலான தேவர்களும் எந்த ஒருவரின் உயர்ந்த நிலையை அறியமாட்டார்களோ, எந்த ஒருவரின் நிலையை நாம் இன்றும் அறியமாட்டோமோ அந்தத் தேவரே முப்புரம் எரித்த தேவராகும். அனைத்து தேவதைகளும் எமது கூற்றைக் கேட்கட்டும். ருத்திர மகாதேவரைக் காட்டிலும் உயர்ந்த மற்ற ஒரு கடவுள் கிடையாது. எப்படி ஆமையின் தோலின் மீது ரோமம் இல்லையோ, முயலின் தலைமீது கொம்பில்லையோ, வானில் மலரில்லையோ அவ்வண்ணமே சிவனாரை விட உயர்ந்த ஒருவரிலர். சிவ வழிபாடின்றி எவனொருவன் இன்பத்தைப் பெற விரும்புகின்றானோ அவன் ஆட்டின் கழுத்தில் தொங்கும் சதையினின்று பாலைப்பருக விரும்புவது போலாகும். முக்தியைப்பெற அவரைத்தவிர அறியவேண்டியதொரு பொருளில்லை. பிராஹ்மீ, நாராயணீ, ரௌத்ரீ, மஹேச்வரீ முதலானவரை வழிபட்டு சிறந்த யோகிகள் எதை காண்கின்றனரோ அதுவே சிவனாரின் இடம் என்றறிய வேண்டும். தேவ மார்க்கத்தைக் கடந்து, அதையும் தாண்டி பித்ரு மார்க்கத்தையும் தாண்டி வானிலிருந்து எந்த ஒரு நுண்ணிய ஒலி எழும்புகின்றதோ அதுவே சிவனாரைக் குறிப்பதாகும். அனைத்துயிரையும் தோற்றுவிப்பவர் அவரேயாகும்.

இதயத்தாமரையில் விளங்கும் உமையாள் மணாளனை மஹாதேவனை நித்தமும் காணும் அறிஞர்கள் நிலையான அமைதியைப் பெறுவார்கள். அந்தப்பரமன் நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், சூரியன், சந்திரன், யஜமானன் முதலானவற்றில் நிலை கொண்டுள்ளார். ஆனால் இவையனைத்தும் அவரை அறிவதில்லை இவ்வனைத்தும் எவருடைய வடிவங்களோ அவருக்கு வணக்கங்கள். உம்மிடமிருந்தே நாங்கள் தோன்றினோம். உம்மிடமே நாங்கள் லயிக்கின்றோம்'' என்று மறைகள் போற்றின.

இவ்வண்ணம் மறைகளால் போற்றப்பட்டவரும் கோடி ஸூர்யனின் ஒளியை உடையவரும், ஆயிரம் கண்களும், கால்

களும், தலைகளும் கொண்டவரும், ஸூர்யன், சந்திரன் நெருப்பு இவைகளைக் கண்களாகக் கொண்டவருமான உமை யாளின் மணாளன் அவற்றின் முன் தோன்றினார். தூலமான பொருளைவிட தூலமானவரும், நுண்ணியதைவிட நுண்ணிய வருமான அந்த மஹாதேவன் மறைகளுக்கு அருள்பாலித்தார்.

இப்புராணம் நான்காம் அத்தியாயத்தில் வாராணஸீ தலத்தின் மேன்மையை விளக்குகிறது. அனைத்து புண்ணிய தலங்களிலும் மேன்மையான வாராணஸியில் அனைத்துயிர் களுக்கும் தேவனான விசுவேச்வரர் பிறப்பினின்றும் விடுதலை பெற வழிவகுக்கும் அறிவை வழங்கும் வள்ளலாக அருள் பாலிக்கின்றார் இங்கு புனிதமான கங்கை 'உத்தரவாஹினீ' என்று போற்றப்படும் சிறப்புடன் வடக்கு நோக்கி பாய்கிறது. இந்த நதியைப் பார்த்தாலும், தொட்டாலும், வணங்கி வழி பட்டாலும் இது பாவங்களனைத்தையும் களைகிறது. தீர்த்தங் களில் புனிதமானது கங்கை. அதிலும் புனிதமானது வாராண ஸியில் ஓடும் கங்கை. அதிலும் சிறந்தது மணிகர்ணிகை என்னும் தீர்த்தகட்டம். எவனொருவன் அவ்விடத்தில் நீராடி விசுவேச்வரரை தரிசனம் செய்கின்றானோ அவன் முக்தியைப் பெறுகின்றான். இதன் மேன்மையை சற்றே விரிவாக இப் பொழுது பார்ப்போம்.

ஸனத்குமாரரின் வாயிலாக வாரணாஸியின் மேன்மையை கேட்டறிந்த கிருஷ்ணத்வைபாயனர் என்னும் வியாஸர் வார ணாஸியை அடைந்து விசுவேச்வரரை வழிபட்டார் (செய்யுள் 18-21);

''உலகுக்கு நாதனானவர்க்கும், சூலத்தை உடையவர்க் கும், பினாகம் என்னும் வில்லை ஏந்தியவர்க்கும், உலகிற்குக் காரணமானவர்க்கும், 'விச்வம்' என்னும் மாயையை தோற்று விப்பவர்க்கும், அறிய முடியாதவர்க்கும், பரமானந்த வடிவா னவர்க்கும், பக்தியை விரும்புபவர்க்கும், நுண்ணியவருமான பார்வதியின் மணாளருக்கு வணக்கங்கள். மும்மறைகளின் வடி வானவருக்கும் வணக்கங்கள்''.

மேலும் 6-ம் அத்தியாயத்தில் அவிமுக்த மென்னும் வாரா ணஸீ க்ஷேத்திரத்தின் மேன்மை விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இவ்விடத்தில் தென்கிழக்கு பகுதியில் அமைந்துள்ள 'வாபீ' மிகவும் புகழ்பெற்றது. 'வாபீ' என்னும் சொல்லுக்கு 'கிணறு' என்று பொருள். இங்கு ஸ்ரீவிசுவேச்வரர் எப்பொழுதும் நிலை கொண்டிருக்கிறார். இவ்விடம் நீராடுவது மிகவும் பய னுடைத்ததாகும். தற்சமயம் 'ஞானவாபீ' என்றழைக்கப்படும் இடத்திற்கு அருகாமையிலேயே முன்னர் விசுவநாதர் ஆல யம் அமைந்திருந்ததாகக் கூறப்படுகிறது. தற்சமயம் 'வாபீ'க்கும் 'விச்வேச்வரர் ஆலய'த்திற்கும் இடையே இடை வெளி இருக்கிறது. இடைக்காலத்தில் ஏற்பட்ட பல்வேறு சமூக பாதிப்புகளினால் இதன் இடமாற்றம் ஏற்பட்டது. இப் பொழுது 'ஞானவாபீ' இரும்பு வலைக் கம்பிகளால் மூடிவைக் கப்பட்ட ஒரு பாதுகாப்பான இடம். இந்தப் புனித நீரின் மேன்மையை இப்புராணம் மேலும் சில செய்யுட்களில் விவரித்துக் கூறுகிறது.

இந்த 'வாபீ'க்கு அருகே சுக்ரேச்வரம், பிரம்மேச்வரம், ஓங்காரேச்வரம், க்ருத்திவாஸேச்வரம், ரத்னேச்வரம், விருத்த காலேச்வரம், மத்யமேச்வரம் முதலிய புனிதத் தலங்கள் உள்ளன. கண்டாகர்ணம் என்னும் நீர்த்தேக்கத்தின் அரு கில் உள்ள வ்யாஸேச்வரம், மற்றும் கபர்தீச்வரம் முதலியவை குறிப்பிடத் தக்கவை.

சிவபுராணங்களில் மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ள தக்கனின் வேள்வியை சிவனார் அழித்த வரலாறு இப்புராணம் சுருக்கமாகக் கூறுகிறது. (அத்தியாயம் 7, செய்யுள் 8-56) ததீசி முனிவரின் அறிவுரையின்படி தக்கன் வாராணஸியை அடைந்து லிங்கத்தை அமைத்து வழிபட்டு தன் பாவம் நீங்கிய தாக இப்புராணம் மேலும் கூறுகிறது. இன்னமும் சில செய் யுட்களில் இத்தலத்தை வருணித்துள்ளது. பின்னர் ஸ்ரீவியாஸ முனிவர் அன்னை விசாலாக்ஷியை போற்றிப்பாடிய செய்யுட் களை இங்கே பார்ப்போம்.

"பரபிரம்மத்தின் வடிவான நன்மை பயக்கும் விசாலாக்ஷிக்கு வணக்கம். ('விசாலாக்ஷி' என்ற சொல்லுக்கு அகன்று விரிந்த கண்களை உடையவள் என்று பொருளாகும்) பிரம்மன் முதலான தேவர்களனைவருக்கும் நீயே அன்னையாகும். நீயே இச்சை, க்ரியை, ஞானம் என்னும் சக்திகளாவாய் நீயே (ஒளிவு மறைவற்று) நேர்மையானவள் (அதாவது கள்ளம் கபடமில்லாத எண்ணம் கொண்டவள்). குண்டலினி சக்தியானவள். (அல்லது குண்டலமணிந்தவள்) நுண்ணியமானவள். யோகசித்தியை அளிப்பவள். நீயே ஸ்வாஹா, ஸ்வதா ஆவாய். மேலும் மஹாவித்யை, மேதஸ், லக்ஷ்மி, ஸரஸ்வதி, ஸதி, தாக்ஷாயணி, வித்யை, சிவா, அபர்ணா, ஏகபர்ணா, ஏகபாடலா, உமை, ஹைமவதீ, கல்யாணி முதலான பெயர்களனைத்தும் உன்னையே குறிக்கும். கணங்களுக்கு அன்னையானவள் மஹாதேவி, நந்தினி, ஜாதவேதஸி, ஸாவித்ரி, வரதா, புண்யா, பாவனி, ரௌத்ரி, துர்க்கா, பத்ரா, பிரமாதினி, காலராத்ரி, மஹாமாயா, ரேவதி, கௌதமி, கௌசிகி, ஆர்யா, மஹாமாயா, சண்டீ, காத்யாயனி, ஸதி, விருஷத்வஜா, சூலதரா, பரமா, பிரம்மசாரிணீ, மஹேந்திரன் உபேந்திரன் இவர்களின் அன்னை, பார்வதி, ஸிம்ஹவாஹனா என்ற பெயர்களும் உன்னைக்குறிக்கும் (அத்தியாயம் 8, செய்யுள் 15-26).

வாராணஸியில் அன்னை விசாலாக்ஷியும், கங்கையும், விசுவேச்வரரும், சிவனிடம் பக்தியும் இந்நான்கும் மிக அரிதில் கிடைக்கப் பெறுவன (8-24). இவ்விதமாக சிவனின் மேன்மையை விளக்கும் இப்புராணத்தில் மற்றும் உள்ள சிறந்த அம்சங்களை மீண்டும் பின்னர் காண்போம்.

சிவம்

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# கட்டுரையாசிரியர்கள் அறிமுகம்

தொகுப்பு : பதிப்பாசிரியர்

நமது சிவஞானபூஜாமலருக்கு முதன் முறையாகக் கட்டுரை வழங்கும் பெரியோர்களைப் பற்றிய அறிமுகக் குறிப்புகள் எழுதும் நமது வழக்கத்தை வாசகர்கள் அறிவார்கள். இவ்வருட மலரில் முதல் முதலாகக் கட்டுரை வழங்கியவர்கள்:

1. ஸ்ரீமான் T. K. நடராஜ சர்மா, ஓய்வு பெற்ற உயர்நிலைப் பள்ளி ஆசிரியர், பாட்டைபுலியூர், கிருஷ்ணகிரி வட்டம், தர்மபுரி மாவட்டம்.
2. ஸ்ரீமான் P. S. சுப்பிரமணியம், B.E., F.I.E., F.I.V., சார்டர்ட் என்ஜினீயர், தியாகராயநகர், சென்னை.
3. ஸ்ரீமான் R. ராமதுரை, (ஸ்ரீயாக்ஞவல்க்யதாஸன்) நஞ்சைபுகளூர், திருச்சிமாவட்டம்.

இவர்களைப் பற்றி நாம் சேகரித்த விவரங்களின் சுருக்கத்தினைக் கீழே கொடுத்துள்ளோம்.

## 1. ஸ்ரீமான் T. K. நடராஜ சர்மா, பாட்டைபுலியூர்

சிவமஹிமை என்ற கட்டுரையை இம்மலரில் எழுதியுள்ள ஸ்ரீமான் T. K. நடராஜ சர்மா அவர்கள் நல்ல வேத அத்தியயனம், யாகயக்ஞம் செய்து வந்த வைதிகபரம்பரையைச் சேர்ந்த தாரமங்கலம் ஸ்ரீ குப்புஸ்வாமி சிரௌதிகளின் குமாரர் ஆவர். இவருடைய தாயார் ஸ்ரீகண்டமதப்ரதிஷ்டாபனசர்யவர்ய ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் வம்சத்தைச் சேர்ந்த

வர்கள். சிவகாமி - சிதம்பரேசுவரர் பூஜை செய்து வந்தவர் கள். வாணிஜ வைசிய பரம்பரைக்கு மடாதிபதியாக வட ஆற்காடு மாவட்டம் ஆரணிபக்கத்தில் முள்ளண்டிரம் கிராமத் தில் இருந்த பீடாதிபதிகள் பரம்பரை.

ஸ்ரீமான் நடராஜ சர்மா பழைய S. S. L. C. பரீட்சையில் தேறி, கலைக்கல்லூரியில் Fine Arts Diploma, Technical Diploma பெற்றவர். உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணி செய்து ஓய்வு பெற்றவர்.

சிறு வயதிலிருந்தே சிவபக்தியுடையவர். சிதம்பரம் ஸ்ரீ நடராஜப் பெருமானிடம் அளவற்ற பக்திபூண்டு, வீட்டில் ஸ்ரீ நடராஜ பூஜையும், ஸ்ரீ நடராஜ மந்திர ஜபமும் தவருமல் செய்து வருகின்ருர். பல திருக்கோவில்களில் சிவப்பணி செய்து வந்து, சிதம்பரம், சேலம் ஸ்ரீசுகவநேசுவரர் திருக் கோயில், மற்றும் பலவிடங்களிலும் சமயச் சொற்பொழிவுகள் பல ஆற்றியுள்ளார்.

சந்தான குரவர்களில் ஒருவரான ஸ்ரீ உமாபதி சிவா சார்யார் இயற்றிய ஸ்ரீகுஞ்சிதாங்க்ரிஸ்தவம், நடேச தத்து வம், மற்றும் பல சிவஸ்துதிகள் முதலியவற்றை வடமொழி நூல்கள், வேதம், திராவிடவேதம் முதலியவற்றினின்றும் தக்கபல மேற்கோள்களுடன் சிறப்பாகச் சொற்பொழிவுகள் செய்து வருவது கண்டு மகிழ்ந்து, இவருக்கு ஸ்ரீநடராஜ மந்திரோபதேசம் செய்த குருவான சிதம்பரம் ஸ்ரீவைத்தியநாத தீக்ஷிதர் அவர்கள் இவருக்கு ''ஸ்ரீகுஞ்சிதபாதத்யான சீலர்'', ''சிவபாத சேவா துரந்தரர்'', "சைவ சித்தாந்த பூஜகர்'' போன்ற விருதுகளை அவ்வப்போது வழங்கி ஆசீர்வதித் துள்ளார்கள்.

வடமொழி நூல்களில் உள்ள பரிச்சயம், ஈடுபாடு போலவே சைவத் தெய்வத் திருமுறைகளிலும் நல்ல புலமை யுடனும் ஊக்கத்துடனும் ஈடுபட்டு ஆங்காங்கே சொற்

பொழிவுகள் மூலம் பிரசாரம் செய்துவருகிருர். ஸ்ரீ சர்மா அவர்கள் நமது சிவஞானப்பணிகட்கும் அவ்வப்போது பேருதவி புரிந்து வருகின்ருர். இந்த அதி தீவிர சிவபக்தரது சைவப் பணிகள் மேலும் மேலும் சிறப்புற்று விளங்கவும், மற்றும் இவர் இப்பணிகளைச் செய்ய ஏற்றபடி உடல் நலம், பொருள் நலம், மற்றும் பொது மக்கள் ஆதரவு எல்லாம் பெற்றுச் சிறப்புற்று விளங்கவும் இவரது இஷ்ட தெய்வமான ஸ்ரீசிதம்பரம் நடேசப் பெருமானின் தூக்கிய திருவடியைப் போற்றி வணங்குகின்ருேம்.

## 2. ஸ்ரீமான் P. S. சுப்பிரமணியம், B.E., F.I.E., F.I.V.,

சார்டர்ட் என்ஜினீயர், தியாகராயநகர், சென்னை.

திக்கெலாம் புகழுறும் திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபர்ணி நதியின் வடகரையில் பாலாமடை என்ற கிராமம் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரரின் தம்பி பேரரும் சின்ன தீக்ஷிதர் என்ற பிரசித்தியையடைந்தவரும் சிவலீலார்ணவம் சிவோத்கர்ஷமஞ்சரி, நீலகண்ட விஜயம் மற்றும் பல சிவோத்கர்ஷ நூல்களை இயற்றிச் சிவபக்தியைப் பெருக்கிய வருமான ஸ்ரீமான் நீலகண்ட தீக்ஷிதரால் தமது வாழ்க்கையின் பிற்பகுதியில் வாசஸ்தலமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறப்புடையதாகும். இந்த ஊரின் சிவாலயத்தின் பிராகாரத்தில் நீலகண்ட தீக்ஷிதரது ஸமாதி உள்ளது. இக்கோயிலின் பரம்பரை அறங்காவலர் முறை உள்ளவரும் பரம சிவபக்தர்களின் பரம்பரையில் வந்தவரும், தமது ஸ்வசாகையான ஸாம வேதத்தை விசேஷமாக அத்தியயனம் செய்தவருமான ஸ்ரீமான் P. R சங்கரய்யர் அவர்களே நமது மலரில் "சிவ லீலார்ணவத்தில் மாணிக்கவாசகர் சரிதம்" என்ற அரிய கட்டுரையை எழுதியுள்ள ஸ்ரீமான். P. S. சுப்பிரமணியம் அவர்களின் தந்தையாவர். இவரது தாயார் இதே திருநெல்வேலி மாவட்டம் தருவை கிராமம் ஸ்ரீமான் நீலகண்ட சிவன் என்ற பரம சிவபக்தரின் மகளான பாகீரதி அம்மாளா

வர். ஸ்ரீமான் நீலகண்ட சிவன் அவர்களது நித்ய பாராயணக் கிரமம், இக்காலத்திய ஸ்மார்த்தர்கள் ராமாயணம் படிப்பது போலல்லாது, ஹாலாஸ்ய மாஹாத்மியம், சிவபக்த விலாஸம், ஸ்காந்தம், சூதஸம்ஹிதை, சிவலீலார்ணவம் போன்ற சிவோத்கர்ஷ கிரந்தங்கள் என்று பெருமையுடன் கூறுகிறார் ஸ்ரீமான் P. S. சுப்பிரமணியம். பெற்றோர்களது ஷஷ்டி விரத மகிமையினால் 3-12-1913, கார்த்திகை மாதம் சுக்கிலபக்ஷ ஷஷ்டியில் பிறந்தார். அதனாலேயே சுப்பிரமணியம் என்ற பெயரும் பெற்றார். பெற்றோர்கள் தமக்கு அருமையாகப் பிறந்த ஒரே மகனான சுப்பிரமணியம் பிறந்த இரண்டு மூன்று ஆண்டுகள் வரையில் அவ்வூர்க் குழந்தைகளுக்கு ஒவ்வொரு ஷஷ்டியிலும்பாயஸம் வினியோகித்து இம்மகிழ்ச்சியைக் கொண்டாடினார்கள்.

இவர் உயர் நிலைப்பள்ளிப் படிப்பைத் தமது மாதாமஹர் (தாயின் தந்தை) நீலகண்ட சிவனின் கிராமமான தருவைக்கு அருகில் உள்ள ஒரு ஊரில் படித்துப் பின் சென்னை லயோலா கல்லூரியில் அக்காலத்திய இன்டர்மீடியட் இரு ஆண்டுகள் படித்துத் தேறியபின், சென்னை ஸர்வகலாசாலை B.E பட்டமும் பெற்றார். இவரது தொழில் கட்டிடங்கள், அணைக்கட்டுகள் முதலியன கட்டும் சிவில் என்ஜினீயரிங் (Civil Engineering) ஆகும். கான்னன் டங்கர்லி (Gannon Dunkerley & Co) என்ற பிரபலமான ஸ்தாபனத்தில் 32 ஆண்டுகள் பணியாற்றிப் பிறகு நிர்வாக இயக்குனராக ஓய்வு பெற்றார்.

இளம் வயதிலேயே தமது கிராமத்து சிவாலயத்தில் தொண்டாற்றிய இவர் 1945ம் ஆண்டு முதல் சென்னை தியாகராயநகர் சிவ-விஷ்ணு ஆலய நிர்வாகக் குழு உறுப்பினர், உபதலைவர், தலைவர் முதலிய பொறுப்புக்களை ஏற்றுப் பணிபுரிந்துள்ளார். 1976ம் ஆண்டு கும்பாபிஷேகம், 1985ம் ஆண்டு ராஜகோபுர நிர்மாணம், கும்பாபிஷேகம் முதலியவற்றில் தலைவராகவும், என்ஜினீயராகவும் சிறப்பாகச் சேவை செய்துள்ளார்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம், காஞ்சீபுரம் சங்கர மடத்தில் 16 கால் மண்டபம் அமைப்பு, இராமேச்வரம் ஸ்ரீ காஞ்சி சங்கர மடத்தில் ரதம் அமைப்பு, மேலமாம்பலம் ஸ்ரீகாமகோடி சங்கர மடத்தில் சலவைக்கல் தாமரை, பாதுகைகள் அமைப்பு முதலிய கட்டிடப் பணிகளில் தொடர்பு கொண்டவர். மற்றும் சென்னை தியாகராயநகர் தாமோதரரெட்டித் தெரு ஸ்ரீ சக்கர விநாயகர் கோவில் கும்பாபிஷேகத்திலும் தலைவராகப் பணி புரிந்துள்ளவர்.

ஸ்ரீசிருங்கேரி சாரதாபீட ஸ்ரீசங்கரமடத்தில் ஸ்ரீசாரதாம் பாள் ஆலயம் பிரதான கற்கோபுரம், விருந்தினர்விடுதி உள் பட பல கட்டிட வேலைகளில் தொடர்பு கொண்டவர். தற் சமயம் சென்னை தியாகராயநகர் ஸ்ரீசிருங்கேரி மடத்தில் தர்மாதிகாரியாகப் பணியாற்றி வருகிறார். சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்து சாரதா வித்யாலயங்களின் நிர்வாகக் கமிட்டி உறுப்பினராகவும் என்ஜினீயராகவும் இருக்கிறார்.

ஸ்ரீமத் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் இவருக்கு "குருபக்தமணி" என்ற விருதினை வழங்கி ஆசீர் வதித்துள்ளார்கள்.

மரபிரண்டும் (தாய்வழி தந்தைவழி) சைவநெறி வழி வந்த கேண்மையினால் சிவபக்தியானது பிதிரார்ஜித சொத்து போல இவரை வந்தடைந்தது பொருத்தமேயன்றோ? இங்ஙனம் சிவபக்தி, குருபக்தி மிகுந்த ஸ்ரீமான் P. S. சுப்பிரமண்யம் அவர்கள் சிவலீலார்ணவ காவியத்தைத் தொடர்ச்சியாக நமது மலருக்கு ஆண்டுதோறும் வழங்க இசைந்துள்ளார்கள் என் பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசுவரர் திருவருளால் இவர் நீண்ட காலம் வாழ்ந்து சிவப்பணி புரிய வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றோம்.

### 3. ஸ்ரீமான் R. ராமதுரை (யாக்ஞவல்க்யதாஸன்)

நஞ்செய்ப்புகளூர், திருச்சிமாவட்டம்

கருணை பொழியும் கடம்பந்துறையார், ஸ்ரீதத்தகிரி தத்தாத்ரேயர் என்ற இரண்டு கட்டுரைகளையும் இம்மலருக்கு

வழங்கிய ஸ்ரீயாக்ஞவல்க்யதாஸன் என்ற ஸ்ரீமான் R. ராம துரை ஸ்ரீ E. V. ராதா கிருஷ்ணய்யர்—ஸ்ரீபர்வதவர்த்தனி அம்மாள் தம்பதிகளுக்கு 1923ம் ஆண்டு இராமேச்வரத்தில் பிறந்தவர். இவருக்குப் பெற்ரோர் இட்ட பெயர் ஸ்ரீராமன் என்பதேயானாலும் நல்ல நிறத்தோடு ஆரோக்கியமான குழந்தையாகவிருந்ததால் அக்கால வெள்ளைக்கார மோகத்தில் துரை என்பதை இணைத்து ஸ்ரீராமதுரை என்றே வழங்கி வந்தனர். நல்ல ஆரோக்யமான குழந்தை என்று இராமேச்வரத்தில் நடந்த குழந்தைகள் தேர்வுக் காட்சியில் தங்கக்காசும் பரிசுபெற்றவர்.

திருச்சி ஜில்லா வைகநல்லூர் (வசிக்கச் சிறந்தஊர்) என்ற கிராமத்தில் 1 முதல் 8 வகுப்புகளும், திருச்சி E. R. உயர் நிலைப் பள்ளியில் 9 முதல் S. S. L. C வரையிலும் படித்துப் பின் திருச்சி அர்ச்சூசையப்பர் கல்லூரியில் II U. C. வரை படித்து முடித்தார். இவரது பூர்வீகமான தஞ்சைமாவட்டம் இஞ்சிக்கொல்லை கிராமத்தில் குபேரன் வீடு என்று சொல்லப் பட்ட வளமை வீடாக இருந்தது பின் குடும்பச் சச்சரவுகள், பாகப்பிரிவினைகள் காரணமாக குசேலன் வீடு என்ற நிலையை அடைந்தமையால் இவரது படிப்பு மேற்கொண்டு தொடராது நின்று விட்டது.

நான்கு இளைய ஸஹோதரர்கள், ஒரு இளைய ஸஹோதரி இவர்களைக் கொண்ட பெரிய குடும்பத்தின் மூத்தவராகிய இவர் குடும்ப ஸம்ரக்ஷணார்த்தம் பெற்ரோர் அனுமதியுடன் இரண்டாவது உலகயுத்தத்தில் R. I. A. F (ROYAL INDIAN AIR FORCE) Wireless Mechanic (ஒயர்லெஸ் மெகானிக்) ஆகச் சேர்ந்து 1942 மே முதல் 1946 செப்டெம்பர் வரையில் லாஹூர், கராச்சி, பெஷாவர், கேமல்பூர், குரு க்ஷேத்ரம், அம்பாலா, போபால், பம்பாய், பெங்களூர், சென்னை முதலிய பல ஊர்களில் பணியாற்றி 1946 செப்டம்பரில் விடுதலை பெற்ருர். விமானப்படையில் சேர்ந்தமையால் குடும்பத்துக்குப் பல சலுகைகள் உண்டாகி ஓரளவு தலை

தூக்க ஆரம்பித்தது. 1943ல் நஞ்சைப்புகளூர் ஸ்ரீமான் வைத்தீச்வரய்யர் குமாரி பாலகுசாம்பாளைத் திருமணம் செய்து கொண்டார்.

1946 செப்டம்பரில் விமானப்படையில் இருந்து ஓய்வு பெற்றதும் இவருக்குத் தமிழ்நாடு போலீஸ் இலாகாவில் ஸப்-இன்ஸ்பெக்டர் வேலை கிடைத்தது. இவரது குடும்பத்திலேயே முதன் முதலாகச் சர்க்கார் உத்தியோகத்துக்குச் சென்றவர் இவர்தான். தமிழ் நாடு காவல் துறையில் 1946 நவம்பர் முதல் 1955 ஆகஸ்டு வரை சேலம் மாவட்டத்தில் பல இடங்களில் பணியாற்றிப் பின்னர் 1955 முதல் 1978 வரை மத்திய ரகசிய போலீஸ் இலாகாவில் (Central Intelligence Bureau) பல பிரிவுகளில் பணியாற்றி ஓய்வு பெற்ருர். சிறப்பாகப் பணி புரிந்ததற்காக 1978ம் ஆண்டு ஜனவரி மாதம் குடியரசு தினத்தன்று ராஷ்டிரபதியின் போலீஸ் பதக்கம் (விருது) அளிப்பதாக அறிவிப்பு வந்து, பிறகு அப்போது பிரதமராக இருந்த திரு. மொரார்ஜீ தேசாய் அவர்கள் டெல்லியில் ஒரு விசேஷக் கூட்டத்தில் மேற்படி விருதை வழங்கினுர்.

1978 செப்டம்பர் கடைசி தினம் ஓய்வு பெற்ற இவருக்கு அது சமயம் மேலதிகாரியாக இருந்தவர் மேலும் இரண்டு ஆண்டுகள் பதவி நீடிப்பு தருவதாக அறிவித்தும், எஞ்சிய காலத்தை இறைபணி, ஆன்மீகப் பணி, சமூகப் பணி இவைகளில் செலவிட இவர் மனதில் ஒரு உத்வேகம் தலை தூக்கியதால் பதவி நீடிப்பை நிராகரித்தார். 1978ல் ஓய்வு பெற்றவுடன் சென்னை சுக்லயஜுர்வேத சபையின் உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 1982 வரை செயலாற்றினுர். இடையில் 1981 மார்ச் முதல் 1982 மார்ச் வரையில் "ஜாதக பரிவர்த்தனை கேந்திரம்" ஒன்றைத் தொடங்கி அதனை மேற்படி சபையுடன் இணைத்து அதனுல் பயன் பெறுபவர்களுக்கு எந்த விதமான செலவுமில்லாமல் தனது சொந்த செலவிலேயே நடத்தினுர். இந்த கேந்திரத்தின் மூலம் அந்த ஒரு ஆண்டில் 18 திருமணங்கள் நிச்சயமாகி நடைபெற்றன

என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் அதிகமாகத் தன்னை பொதுப் பணியில் ஈடுபடுத்திக்கொள்ள விரும்பி, கேந்திரத் தைச் சபையுடன் இணைத்து, உபதலைவர் பதவியையும் விட்டு விட்டுச் சென்னையை விட்டு வெளிக் கிளம்பினார்.

"இந்து மதம் அழைக்கிறது", "ஜகத்குரு", "இந்து மித்திரன்", "தர்மச் சுடர்", "தத்தப்ரஸாதம்" முதலான ஆன்மீக இதழ்களுக்கு எவ்விதமான பிரதிபலனையும் எதிர் பாராது அவ்வப்போது கட்டுரைகள் எழுதிவருகிறார். இவர் சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தவராதலால் இந்த வேதத் தைச் சூரிய பகவானிடமிருந்து பெற்று உலகிற்களித்த ஸ்ரீயோகீச்வர யாக்ஞவல்க்யர் சம்பந்தப்பட்ட விஷயங்களைத் தொகுத்து, தன் ஓய்வூதியத்தில் கணிசமான ஒரு தொகையை உபயோகித்து, வருடத்திற்கு ஒரு இலவச வெளியீடு என்ற முறையில் 500 முதல் 700 பேர்களுக்கு இலவசமாக அனுப்பு வது என்ற செயலில் இறங்கி, இதுவரை ஆறு இலவச வெளி யீடுகளை வெளியிட்டு விநியோகித்துள்ளார்.

இவரது இரண்டு புதல்விகளும் ஒரு புதல்வரும் படிப்பு முடித்து, நல்ல முறையில் சீரும் சிறப்புமாக வாழ ஆண்டவன் அருள் செய்தார் என்றும் அவர்களின் திருமணம் முதலியவை முடிந்து அவரவர் வழியில் வாழ்க்கையை மிகவும் திருப்திகர மாக நடத்திச் செல்கின்றனர் என்றும் மகிழ்ச்சியுடன் கூறுகிறார் நமது ஸ்ரீயாக்ஞவல்க்யதாஸன். நல்ல உடல் ஆரோக்யத்துட னும் வாழ்க்கையில் குறைவில்லாத நல்ல மன நிறைவோடும் வாழ்வாங்கு வாழும் இந்தப் பெருந்தகையாளர் இறைவ னிடம் வேண்டுவது, காரைக்காலம்மையார் வேண்டியது போலவே, "பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப்புண்டேல் உன்னை மறவாமை வேண்டும்" என்பதேயாகும். வேண்டு வார் வேண்டுவதே ஈயும் இறைவன் இவரது வேண்டுகோளை யும் ஏற்றருளி, நிறைவேற்றியருள்வார் என்பதில் ஐயமில்லை.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

## ஆங்கீரஸ சர்மாவின்

# சிவபுராண ஞானபூஜை

என்னை நன்கு படைத்தனன் இறைவன்
தன்னை ஞான பூசைசெய் திடவே

இம்மலர் பதிப்பாசிரியர் ஆங்கீரஸ சர்மாவின் 76 வது சிவபுராண ஞானபூஜை வரையிலும் மற்றும் சில சிவபக்தி பிரசார நிகழ்ச்சிகள் பற்றியும் சென்ற சிவஞானபூஜாமலரில் பிரசுரித்திருந்தோம். அதற்கு மேல் உள்ள ஞானபூஜைகள் மற்றைய சிவபக்திப் பிரசார நிகழ்ச்சிகள் ஆகியவை பற்றிய விவரங்களை இங்குக் கொடுக்கிறோம். தனித் தலைப்புகளில் அவ்வப்போது செய்யப்பட்ட தனிநாள் சொற்பொழிவுகள் பல. ஆகையால் அவைகளை இடமின்மை கருதிப் பிரசுரிக்க வில்லை.

## 1. ஸ்ரீ அங்காள பரமேசுவரி திருக்கோயில்

இராயபுரம், சென்னை-13

சென்னை இராயபுரம் அங்காள பரமேசுவரி திருக்கோயி லில் 15-12-1985 முதல் 17-1-1986 வரையில் ஆசிரியரின் கந்த புராணப் பிரவசனம் நடைபெற்றது. மேற்படி கோவில் தலைமை அர்ச்சகரும், இராயபுரம் இந்து சமய மன்றத் தலை வருமான சிவஸ்ரீ V. S. வாகீச்வர சிவாசாரியார் அவர்களின் நன் முயற்சியால் நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற்றது. இடையில் ஒருவாரம் மார்கழி திருவாதிரை விழாவை முன் னிட்டு திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி பிரவசனமும், 27-12-1985 வெள்ளிக்கிழமை திருவாதிரை விழா நாளன்று இரவு 7மணிக்கு 1985ம் ஆண்டு சிவஞானபூஜாமலரும் வெளி யிடப்பட்டது. பண்டித ஸ்ரீ V. நடேசனார் அவர்கள் தலைமை

வகிக்க, அம்பாளின் மகன் தவத்திரு P. வெங்கடாசலபதி B A., B. L., அவர்கள் நூலை வெளியிட, மன்றத்தலைவர் சிவத்திரு V. S. வாசீச்வர சிவாசாரியர் அவர்கள் முதல் பிரதியினைப் பெற்றுக் கொண்டார். மன்ற ஆலோசகர் திரு. ME. C. ஜயராஜ் அவர்கள் வரவேற்புரையும் செயலாளர் அரங்கநாதன் அவர்கள் நன்றியுரையும் வழங்க விழா இனிது நிறைவுற்றது.

இந்த கந்தபுராணச் சொற்பொழிவு ஆசிரியரின் 77வது சிவஞானபூஜையாகும்.

## 2. ஸ்ரீ லக்ஷ்மிவிநாயகர் கோவில், காமகோடிநகர் வளசரவாக்கம் சென்னை-87

சென்னை வளசரவாக்கத்தைச் சேர்ந்த காமகோடி நகர் ஸ்ரீலக்ஷ்மி விநாயகர் கோவிலில் ஸ்ரீகாஞ்சி காமகோடி மஹா பெரியவாள் சேவா சமிதியின் ஆதரவில் ஸ்ரீமஹாபெரியவாள் ஜயந்தியை முன்னிட்டு 4-8-1987 முதல் 10-8-87 வரை 7 தினங்கள் ஸ்காந்த புராணப்பிரவசனம் நடைபெற்றது. சமிதி தலைவரும் புராணப்பிரவசனம் செய்பவருமான ஸ்ரீமான் ஆங்கரை கோதண்டராமன் அவர்களது நல்ல முயற்சியால் பிரவசனம் சிறப்பாகப் பூர்த்தியடைந்தது. இது ஆசிரியரின் 78வது சிவபுராண ஞானபூஜையாகும்.

## 3. ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் கோவில், அகரம், சென்னை-82

சென்னை பெரம்பூரையடுத்த அகரம் சிந்தாமணி விநாயகர் கோவிலில் 2-11-1987 முதல் 13-11-1987 வரை (இடையில் 3 நாட்கள் நீங்கலாக) ஸ்காந்த புராணப் பிரவசனம் சிறப்பாக நடைபெற்றது. ஆலய அறங்காவலர்கள் ஸ்ரீமான்கள் T. கணேசன் வெங்கடராமன் ஆகியவர்களுடன் ஜவஹர்நகர் ஸ்ரீமான்கள் S. நடராஜய்யர், G. ராமசந்திரய்யர் முதலானோர் ஒத்துழைப்பளித்துச் சிறப்பாக நடத்திக் கொடுத்தனர். அந்த சமயம் பெரும்பாலான நாட்களில் பெருத்தமழை, அடிக்கடி

மின் விளக்கு இல்லாது போதல் போன்ற அசௌகரியங்களை யும் பாராது பக்தர்கள் தவருது வந்து விருப்பத்துடன் பிரவச னத்தை ஒன்பது நாட்களும் கேட்டுப் பயனடைந்தனர். பூர்த்தியன்று ஸ்ரீமான் K. நடராஜ முதலியார் பாராட்டுரை வழங்கினர். வேதாந்த சொற்பொழிவாளர் ஸ்ரீமான் C. பால கிருஷ்ணன் தலைமை வகித்துப் பொன்னுடை போர்த்தினர். இது ஆசிரியரின் 79 வது சிவபுராண ஞானபூஜையாகும்.

## 4. குயப்பேட்டை ஸ்ரீகந்தசுவாமி கோவில், பெரம்பூர் பாரக்ஸ், சென்னை-12

சென்னை - பெரம்பூர்பாரக்ஸ் குயப்பேட்டையில் உள்ள ஸ்ரீகந்தசுவாமி கோவிலில் 15-12-1987 முதல் 15-1-1988 வரை திருவிளையாடற் புராணப் பிரவசனம் நடை பெற்றது. இடையில் திருவாதிரை விழாவை முன்னிட்டு 28-12-87 முதல் 2-1-1988 வரை 6 நாட்கள் திருவெம்பாவை—திருப்பள்ளி யெழுச்சி சொற்பொழிவு நடைபெற்றது. திரளான மக்கள் கலந்து கொண்டனர். கோவில் அறங்காவலர் குழுத் தலைவர் ஸ்ரீமான் சச்சிதானந்தம் அவர்களும், திருமுறைத் தொண்டர் ஸ்ரீமான் விநாயகம் அவர்களும் சிறப்பான ஏற்பாடுகளைச் செய்து பிரவசனத்தை வெற்றிகரமாக நடத்தினர்கள். இது ஆசிரியரின் 80-வது சிவபுராண ஞானபூஜையாகும். இந்த பிரவசனம் நடக்கும் போது தான் ஆசிரியருக்கு ''சிவபக்தி பிரசாரமணி'' என்ற பட்டம் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீசங்கராசாரிய சுவாமி களவர்களால் வழங்கப்பட்டது.

### இதர சிவபக்திப் பிரசார நிகழ்ச்சிகள்

## 1. ஸ்ரீ பங்கஜாம்பிகா ஸமேத ஸ்ரீகங்காதரேசுவரர் கோவில், புரசைவாக்கம், சென்னை-84

27-1-1986 முதல் 15-2-1986 முடிய இருபது நாட்களில் இடையில் 4 நாட்கள் நீங்கலாக 16 நாட்கள் மேற்படி கோவிலில் ''சிவானந்தலஹரீ'' உபன்யாசம்,

## 2. ஸ்ரீ சக்திபுரீசுவரர் திருக்கோயில்,
சூளைமேடு, சென்னை-94

21-8-1986 முதல் 24-8-1986 வரையில் 4 நாட்கள் சென்னை சூளைமேடு ஸ்ரீசக்திபுரீசுவரர் திருக்கோயிலில் ஆசிரியரின் "சிவானந்தலஹரீ" சொற்பொழிவு நடைபெற்றது.

## 3. ஸ்ரீ அங்காளபரமேச்வரி ஆலயம்,
இராயபுரம், சென்னை-13

25-11-1986 முதல் 28-11-1986 முடிய நான்கு நாட்கள் சென்னை இராயபுரம் ஸ்ரீ அங்காளபரமேசுவரி திருக்கோயிலில் இந்து சமய மன்றம் இராயபுரம் கிளையின் ஆதரவுடன் "சிவானந்த லஹரீ" பிரவசனம் நடைபெற்றது.

## 4. ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் கோவில்,
அகரம், சென்னை-82

6-2-1987 முதல் 8-2-1987 வரை மூன்று நாட்கள் சென்னை பெரம்பூரையடுத்த அகரம் ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் கோவிலில் "சிவானந்தலஹரீ" சொற்பொழிவு நடத்தப்பட்டது

## 5. ஸ்ரீ கங்காதரேசுவரர் ஆலயம்,
புரசைவாக்கம், சென்னை-84

16-2-1987 முதல் 20-2-1987 வரை ஐந்து நாட்கள் புரசைவாக்கம் ஸ்ரீ கங்காதரேசுவரர் திருக்கோயில் "சிவலீலா" என்ற தலைப்பில் உபன்யாசம் நடைபெற்றது.

## 6. சிவ-விஷ்ணு ஆலயம்,
தியாகராயநகர், சென்னை-17

21-2-1987 முதல் 25-2-1987 வரை ஐந்து நாட்கள் சிவராத்திரி விழாவை முன்னிட்டு "சிவலீலா" என்ற தலைப்பில் பிரவசனம் நடைபெற்றது.

## 7. ஸ்ரீவிநாயகர் கோவில்,
மஹாலிங்கபுரம், சென்னை-34

14-5-1987 முதல் 16-5-1987 வரையில் மூன்று நாட்கள் சென்னை மஹாலிங்கபுரம் பிள்ளையார் கோவிலில் "சிவானந்த லஹரீ" உபன்யாசம்.

## 8. ஸ்ரீகங்காதரேசுவரர் திருக்கோயில்,
புரசைவாக்கம். சென்னை-84

18-5-1987 முதல் 28-5-1987 வரையில் இடையில் 2 நாட்கள் நீங்கலாக 9 நாட்கள் மேற்படி கோவிலில் சமயாசாரியர் "நால்வர் சரிதம், சேக்கிழார் சரிதம்" உபன்யாசம்.

## 9. ஸ்ரீவிநாயகர் கோவில், சங்கராசார்யபுரம்,
திருவொற்றியூர், சென்னை-19

13-6-1987 முதல் 15-6-1987 வரை 3 நாட்கள் மேற்படி கோயிலில் "சிவானந்தலஹரீ" உபன்யாசம்.

## 10. ஸ்ரீசங்கர பக்தஜன சபை, ஸ்ரீசங்கரமடம்,
திருவொற்றியூர், சென்னை-19

திருவொற்றியூர் ஸ்ரீசங்கர பக்தஜன சபையின் ஆதரவுடன் ஸ்ரீசங்கரமடத்தில் 27-6- 1987 முதல் 29-6-87 வரையில் 3 நாட்கள் "சிவானந்தலஹரீ" உபன்யாசம்.

## 11. ஸ்ரீ தியாகராஜஸ்வாமி திருக்கோயில்
திருவொற்றியூர், சென்னை-19

4-7-1987, 5-7-1987 இரண்டு தினங்கள் ஸ்ரீ வடிவுடையம்பாள் ஸமேத ஸ்ரீ தியாகராஜஸ்வாமி திருக்கோயிலில் "சிவானந்தலஹரீ" சொற்பொழிவு.

## 12. ஸ்ரீ சிவ-விஷ்ணு ஆலயம், பெரம்பூர், சென்னை-11

6-7-1987 முதல் 8-7-1987 வரை 3 நாட்கள் மேற்படி கோயிலில் "சிவலீலா" என்ற தலைப்பில் சொற்பொழிவு.

## 13. ஸ்ரீ அராளகேசியம்பாள் ஸமேத ஸ்ரீ ரத்ன கிரீச்வரர் ஆலயம், பெசன்ட் நகர், சென்னை-90

14-7-1987 முதல் 16-7-1987 வரை மூன்று தினங்கள் மேற்படி திருக்கோயிலில் "சிவானந்தலஹரீ" உபன்யாசம்.

## 14. ஸ்ரீ சித்திகமலவிநாயகர் ஆலயம், மேற்கு சி. ஐ. டி. நகர், சென்னை-35

18-7-1987 முதல் 22-7-1987 வரை ஐந்து நாட்கள் மேற்படி விநாயகர் ஆலயத்தில் "சிவலீலா" என்ற தலைப்பில் சொற்பொழிவு.

## 15. ஸ்ரீ கங்காதரேசுவரர் திருக்கோயில், புரசைவாக்கம், சென்னை-84

23-7-1987 முதல் 1-8-1987 வரை இடையில் ஒரு ஞாயிறு நீங்கலாக 9 நாட்கள் அபிராமி அந்தாதி சொற்பொழிவு.

## 16. ஸ்ரீ சங்கரவிஹார், ஐயனாவரம் சென்னை-23

20-8-1987 முதல் 24-8-1987 வரை ஐந்து தினங்கள் மேற்படி ஸ்ரீசங்கரவிஹார் ஸ்தாபகர் Dr. T. M. P. மஹாதேவன் அவர்களின் 77வது பிறந்தநாள் விழாவை முன்னிட்டு ஆசிரியரின் "சிவானந்தலஹரீ" பிரவசனம் நடைபெற்றது.

## 17. ஸ்ரீ சிவ-விஷ்ணு ஆலயம், தியாகராய நகர், சென்னை-17

25-8-1987 முதல் 30-8-1987 வரையில் இடையில் ஒரு நாள் நீங்கலாக ஐந்துநாட்கள் "சௌந்தர்யலஹரீ - அபிராமி அந்தாதி" உபன்யாசம்.

## 18. ஸ்ரீ அர்த்தநாரீசுவரர் ஆலயம்,

நங்கநல்லூர், சென்னை-61

19-9-1987, 20-9-1987 ஆகிய இரு தினங்கள் மேற்படி ஆலயத்தில் "சிவானந்தலஹரீ" பிரவசனம். 29-9-1987 முதல் 1-10-1987 வரை மூன்று தினங்கள் இதே கோவிலில் நவராத்திரியை முன்னிட்டு "அபிராமி அந்தாதி" சொற்பொழிவு.

## 19. ஸ்ரீவரசித்தி விநாயகர் கோவில்,

நங்கநல்லூர், சென்னை-61

2-10-1987 முதல் 4-10-1987 வரை 3 தினங்கள் சென்னை நங்கநல்லூர் ஸ்ரீவரசித்தி விநாயகர் திருக்கோயிலில் "சிவானந்தலஹரீ" பிரவசனம்.

## 20. ஸ்ரீ சங்கரவிஹார், ஐயனாவரம், சென்னை-23

22-10-1987 முதல் 26-10-87 வரை ஐந்து நாட்கள் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதர், ஆத்மார்ப்பண ஸ்துதி பிரவசனம்.

## 21. ஸத்சங்கம், அம்பத்தூர், சென்னை-53

17-4-1988 முதல் 21-4-1988 வரை நான்கு தினங்கள் மேற்படி சங்க மண்டபத்தில் ஸ்ரீசங்கர ஜயந்தியை முன்னிட்டு "சிவானந்தலஹரீ" பிரவசனம்.

## 22. ஸ்ரீசங்கர ஜயந்தி மஹோத்சவ சபா,

சுப்ரமணிய நகர் முதல் தெரு, சென்னை-24

30-4-1988 முதல் 2-5-1988 வரை 3 தினங்கள் மேற்படி சபையின் ஆதரவில் "சிவானந்தலஹரீ" பிரவசனம்.

சிவம்.

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தர் அருளியது

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்



**யத்யத் கர்ம கரோமி**
**தத்ததகிலம்**
**சம்போ தவாராதனம்**

உ

சிவமயம்

# ஆங்கீரஸ சர்மாவின் ஆறு வேண்டுகோள்

முழு முதற் கடவுளான பரமேச்வரனின் செந்நெறியிற் சார்ந்த நாமனைவரும் செய்ய வேண்டியவைகளாவன.



1. விபூதி ருத்திராட்சம் தவறாது அணிதல் வேண்டும்.

2. சிவாலய தர்சனம், சிவ நாமம் திருவைந்தெழுத்து ஜபம் முதலியவைகளை முறையே செய்ய வேண்டும்

3. திருமுறைகளை ஏதேனும் ஒருமுறையில் தினசரி பாராயணம் செய்யும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டும்.

4. கற்பனைக் கதைகள் நவீனங்கள் வார, மாதப் பத்திரிகைகள் இவைகளைப் படிப்பதை படிப்படியாகக் குறைத்து சைவ ஞான நூல்கள் சிவபுராணங்கள் ஆகியவற்றைப் படிக்க நேரம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

5. பெரிய புராணம், ஸ்காந்த புராணம், திருவிளையாடற் புராணம் ஆகிய புராணப் பிரசங்கங்கள் எங்கு நடந்தாலும் அவைகளை ஆர்வத்துடனும் பக்தியுடனும் சிரவணம் செய்ய வேண்டும்.

6. பல அன்பர்கள் ஒன்று சேர்ந்து கூட்டு வழிபாடுகள் சமயச் சொற்பொழிவுகள், மகாநாடுகள், புராணப் பிரசங்கங்கள் ஆகியவற்றை நடத்த வேண்டும்.

இம்மாதிரியான காரியங்களில் ஈடுபடுவதைச் சிறந்த சிவ புண்ணியமாக அன்பர்கள் எண்ணி ஆர்வத்துடன் செயல்படுமாறு வேண்டுகின்றேன்.

## கைவசமுள்ள சில அரிய பிரசுரங்கள்

| | | |
|---|---|---|
| 1 | ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதேந்திரர் திவ்யசரித ஸங்க்ரஹம் | ரூ. 4.00 |
| 2 | காரியசித்திதரும் கணபதி ஸ்தோதரம் | 0.80 |
| 3 | சிவஞான பூஜாமலர்—1981 | 5-50 |
| 4 | ௸ 1982 | 6.50 |
| 5 | ௸ 1983-84 | 10.00 |
| 6 | ௸ 1985 | 12.00 |
| 7 | ௸ 1987-88 | 12.00 |
| 8 | சிவ ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் | 8.50 |
| 9 | சிதம்பரம் ஸ்ரீ நடேச ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் | 11-00 |
| 10 | தில்லைத் திருநடனம் | 3.50 |
| 11 | மூவர் தமிழ்மாலை 1—18 | 40-00 |
| 12 | ௸ 19, 20, 21 | 12.00 |
| 13 | வைத்தீசுவரன் கோவில் | 2-50 |
| 14 | மன்னார்குடி ராஜு சாஸ்திரிகள் திவ்ய சரித ஸங்க்ரஹம் | 6-00 |
| 15 | ஸ்ரீ ருத்ர ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் | 15.00 |
| 16 | ஸ்ரீ சங்கரஜயந்தி மலர்—1980 | 6.00 |
| 17 | ௸ 1981 | 6-00 |
| 18 | ௸ 1984-85 | 8-00 |
| 19 | ஸ்ரீ சங்கரஜயந்தி வெள்ளிவிழா மலர் | 20-00 |
| 20 | The Story of Jagadguru Sri Adi Sankara Bhagavatpada | 3.00 |

இவை அனைத்தையும் ஒரே சமயத்தில் வாங்கினால் தபால் செலவு இலவசம், சலுகையும் உண்டு.


விபரத்திற்கு எழுதுக

பதிப்பாசிரியர் :

ஆங்கீரஸ **S. வேங்கடேச சர்மா**

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,

மேலமாம்பலம், சென்னை-600 033.

Elango Achukoodam, 166, R.H.Road, Madras-4, Ph. 74121